# வேதாந்த ஸாரம்



ஸம்ஸ்க்ருத மூலம்
ஸ்ரீ ஸதானந்தர்

தமிழ் மொழிபெயர்ப்பு
கல்யாணி வெங்கடராமன்



ஸ்ரீராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர், சென்னை-4

# முன்னுரை

உலகிலே எத்தனையோ தத்துவங்கள் உள்ளன. பரம்பொருள், உலகம், மனிதன் குறித்த விளக்கங் களையும், அவற்றிற்கிடையிலுள்ள தொடர்புகளையும் மிகவும் அழகாக அவை விளக்குகின்றன. வேதத்தைப் பிரமாணமாக ஏற்றுக் கொண்டுள்ள, பாரத நாட்டின் புகழ்பெற்ற ஆறு தரிசனங்களில் வேதாந்த தரிசனமும் ஒன்றாக விளங்குகிறது. (நியாயம், வைசீசிகம், சாங்கியம், யோகம், பூர்வமீமாம்ஸை, உத்தர மீமாம்ஸை அல்லது வேதாந்தம்) வேதத்தின் அறுதி யிட்ட உறுதியான முடிவு என்று இதற்குப் பொருள் கொள்ளலாம்.

உயிரினங்களில் மனிதன் மிகவும் மேம்பட்டவ னாகக் கருதப்படுகிறான். ஏனெனில் அவனுக்கு ஆறாம் அறிவு உள்ளது. அதைப் பயன்படுத்தி அவன் இவ் வுலகில் வாழ்ந்து கொண்டிருக்கும் பொழுதே பிரம்ம ஞானத்தை அடைய வேண்டும் என்று வேதகால ரிஷிகள் அழுத்தம் திருத்தமாகக் கூறி உள்ளனர். முக்தி அடைவது மனித வாழ்க்கையின் குறிக்கோளாக உள்ளது. எனவேதான் அது மிகவும் உயர்ந்த புருஷார்த்தம் எனப்படுகிறது. இந்த முக்தியை அடை வதற்கு உரிய வழிமுறைகளையும் தரிசன நூல்கள் விளக்குகின்றன. தரிசனம் என்றால் பார்ப்பது என்று பொருளாகும். அதாவது நேரடியாக அனுபவிப்பது

ஆகும். வேத காலத்தில் வாழ்ந்த ரிஷிகள், பரம் பொருளைப் 'பார்த்து', அனுபவித்து, அந்தப் பரம் பொருளை அடையத்தக்க வழிமுறைகளையும் சிறப் புடன் விவரிப்பதால்தான் இந்த நூல்களுக்குத் தரி சனங்கள் என்று பெயர் வந்துள்ளன. இதுதான் பாரத நாட்டின் 'தரிசனங்'களுக்கும், மேற்கு நாடுகளின் 'தத்துவ'த்திற்கும் உள்ள முக்கியமான வேறுபாடு ஆகும் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

வேதாந்த தத்துவமானது அத்வைதம், விசிஷ்ட அத்வைதம், மற்றும் துவைதம் என்று மூன்று வகை யாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவற்றுள் அத்வைத வேதாந்தமானது விஞ்ஞானம் சார்ந்த அதனுடைய தனித்தன்மை வாய்ந்த சிறப்பியல்புகளால் நம் நாட் டிலே மட்டுமின்றி, மேற்கு நாடுகளிலுள்ள விஞ்ஞானி களையும் ஈர்க்கும் வல்லமை பெற்றுத் திகழ்கிறது. ஸ்ரீகௌடபாதர், ஸ்ரீசங்கரர் என்னும் இவர்களிடமிருந்து தொடங்கி, சுமார் 14 நூற்றாண்டுகள் தங்குதடையின்றிப் பாய்ந்து வந்துள்ளது. அத்வைத சம்பிரதாயத்தில் நூற்றுக் கணக்கான நூல்கள் இயற்றப்பட்டுள்ளன. இவற்றில் சில நூல்கள், உபநிஷதங்கள், பகவத்கீதை, பிரம்ம ஸூத்திரம் போன்ற மூல நூல்களுக்கு விளக்க வுரை என்னும் வடிவத்தில் எழுதப்பட்டுள்ளன. வேறு சில நூல்கள், இந்த விளக்கவுரைகளுக்கு எழுதப் பட்டுள்ள துணை விளக்க உரைகளாகத் திகழ்கின்றன. பாமரரும் எளிதில் தத்துவத்தை உணர்ந்துகொள்ள வேண்டும் என்னும் எண்ணத்துடன் மிகவும் எளிய முறையில் நூல்கள் எழுதப்பட்டன. இவை பிரகரண

நூல்கள் என்று அழைக்கப்படுகின்றன. இத்தகைய புத்தகங்களின் வரிசையில் ஸ்ரீஸதானந்தர் அவர்களால் இயற்றப்பட்டுள்ள 'வேதாந்த ஸாரம்' என்னும் நூலானது மிகவும் உயர்ந்த, சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது.

ஸ்ரீஸதானந்தரின் வாழ்க்கை வரலாற்றைக் குறித்த முழுமையான செய்தி எதுவும் கிடைக்கவில்லை. இருப்பினும் இவர் 15-ஆம் நூற்றாண்டின் இறுதியிலோ அல்லது 16-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலோ இருந் திருக்க வேண்டும் என்றும், 'ஸுபோதினீ' என்னும் நூலிற்கு விளக்கவுரையினை எழுதியுள்ள ஸ்ரீந்ருஸிம்ஹ ஸரஸ்வதி அவர்களின் பரம குருவாக இருந்தவர் என்றும் அறிஞர்கள் கருதுகின்றனர்.

'அத்வைத பிரஹ்ம ஸித்தி' என்னும் நூலை எழுதியுள்ள ஸதானந்தர் காஷ்மீரத்தைச் சேர்ந்தவர் என்றும் 'அத்வைத ஸித்தி ஸித்தாந்த ஸாரம்' என்னும் நூலை எழுதியவர் ஸதானந்த வியாஸர் என்றும், வேதாந்த ஸாரத்தை எழுதியவர் ஸதானந்த யோகீந்திரர் என்றும், இவர்கள் அனைவரும் ஒருவர்தானா அல்லது வேறுவேறானவர்களா என்பதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு உள்ளது. ஆனால் ஸாதகர்களுக்குத் தேவையான செய்திகளை மட்டும் விவரித்து இருப் பது, ஸ்ரீசங்கரருக்குப் பிறகு வந்த அத்வைதிகளின் வாதங்களை வெளிப்படையாகச் சுட்டியிருப்பது, 'தத்வமஸி' என்னும் மஹாவாக்கியத்தின் பொருளைத் தனித்தன்மையுடன் விவாதித்து இருப்பது, பாதஞ்சல யோகத்தை, நிதித்யாஸனத்தின் பிரிக்கவியலாத அங்க

மாக விளக்கியிருப்பது என்பன போன்ற பல தனிச் சிறப்புக்களால் இது முதன்மையான பிரகரண நூல் களில் மிகவும் உயர்ந்ததாகப் போற்றப்படுகிறது என் பதில் எத்தகைய கருத்து வேறுபாடும் இல்லை.

வேதாந்தஸாரம் என்னும் இந்த நூலிற்கு ஆறு விளக்கவுரைகள் எழுதப்பட்டுள்ளன. 1. ஸ்ரீ அபதேவர் அவர்களின் 'பாலபோதினீ', 2. ஸ்ரீ ந்ருஸிம்ஹ ஸரஸ்வதி அவர்களின் 'ஸுபோதினீ', 3. ஸ்ரீ இராம தீர்த்தரின் 'வித்வன் மனோரஞ்ஜினீ', 4. வேதாந்த ஸாரடீகா, 5. வேதாந்த ஸாரடிப்பணீ, (இவ்விரு நூல் களை எழுதியவர்களின் பெயர்கள் தெரியவில்லை) 6. ஸ்ரீ இராமசந்திரானந்த ஸரஸ்வதி அவர்களின் 'வேதாந்த ஸாரவ்யாக்யா' என்பன அந்த ஆறு நூல்கள் ஆகும்.

நூலில் விவரிக்கப்பட்டுள்ள விஷயத்தைச் சுருக்க மாகக் காண்போம்:—

வேதங்களில் விவரிக்கப்பட்டுள்ள உபதேசங் களைக் கொண்டுள்ள உபநிஷதங்கள், பிரம்ம ஸூத்திரங்கள், பகவத் கீதை மற்றும் இவற்றுடன் பொருத்தமானதாக உள்ள நூல்கள் என்னும் இவையே வேதாந்தம் ஆகும். வேதாந்த தரிசனமானது (தத்துவ மானது) பிரம்மத்தைக் குறித்து விவரிப்பதுடன் மட்டு மின்றி, அந்த பிரம்மத்தை அடையத் தக்க வழியையும் காட்டுகிறது. இதனை அனுசரிக்க விரும்புவோர், வேத அத்யயனம் செய்து, சாத்திரங்கள் விதித்துள்ள கர்மங் களையும், வழிபாட்டு முறைகளையும் மேற்கொண்டு, மனத்தைத் தூய்மை செய்து கொள்ள வேண்டும்.

மனமானது தூய்மை அடைந்த பிறகு விவேகம், வைராக்கியம், சம (शम) போன்ற ஆறு நல்ல இயல்பு கள் மற்றும் முமுக்ஷுத்வம் என்னும் இந்த நான்கு விதமான வழிமுறைகளைப் பின்பற்ற வேண்டும். பரம்பொருள் ஒன்றுதான் உண்மையானது. விஷய வஸ்துக்களால் நிறைந்து, மிகவும் அழகுடன் தோற்ற மளித்துக் கொண்டு இருக்கும் இவ்வுலகமானது நிலை யற்றது ஆகும் என்று உணரும் ஞானம்தான் விவேகம் ஆகும். இத்தகைய விவேகத்தால், நிலையற்ற உலகத் திலுள்ள பொருட்களில் ஸாதகன் சம (शम), தம (दम), மன அமைதி, புலனடக்கம் போன்ற ஆறு நல்லியல்பு களைப் பெறுவதற்கு முயற்சி செய்கிறான். இதன் பய னாக, முக்தி அடைய வேண்டும் என்னும் ஆசையானது ஏற்படுகிறது. அப்பொழுது அவன் உயர்ந்த குருவைத் தேடிக் கண்டு கொண்டு, முறையாக அவரிடம் சென்று உபதேசத்தைக் கேட்கிறான். (சிரவணம்) அதன்பிறகு அதையே மனனம் செய்கிறான். ஞானமானது உறுதி யான பிறகு அதன்மீது நிதித்யாஸனம் செய்கிறான். இதனால் அஞ்ஞானமானது அகல்கிறது. அஞ்ஞானம் அகன்றவுடன், அவனிடம் முதலிலிருந்தே இருந்து கொண்டிருந்த, அவனுடைய ஸ்வரூபமாகவே உள்ள ஆத்ம வஸ்து, பிரம்ம சைதன்னியமானது தென்படு கிறது. பிராரப்தகர்மம் (வினைப்பயன்) இருக்கும் வரையிலும் ஜீவன்முக்தி நிலையை அனுபவித்து, பிராரப்த கர்மம் தீர்ந்த பிறகு உடல் வீழும் பொழுது விதேஹ முக்தியை அடைகிறான்.

முக்தியை அடைய வேண்டும் என்னும் விருப்பத் துடன் தன்னிடம் வந்துள்ள சீடனுக்குக் குருவானவர்,

அத்யாரோபம் மற்றும் அபவாதம் என்னும் முறைகளால் தத்துவ உபதேசம் செய்கிறார். அத்யாரோபம், அபவாதம் என்னும் இந்த இரு சொற்களும் பரிபாஷைச் சொற்கள் ஆகும். அத்யாரோபம் என்பது அத்யாஸம் என்றும் அழைக்கப்படுகிறது. மங்கிய இருளிலே, கயிற்றின் உருவமானது சரியாகத் தென்படுவதில்லை. அப்பொழுது அறியாமையால், கயிற்றின் மீது பாம்பை ஏற்றிக் கூறுவது போல, பிரம்மவஸ்துவின் ஸ்வரூபத்தைச் சரியாக அறிந்துகொள்ளாமல், அஞ்ஞானத்தால் அதன்மீது இந்த உலகத்தை ஏற்றிக் கூறுவதுதான் 'அத்யாரோபம்' ஆகும்.

இந்த அஞ்ஞானமானது ஸத்தும் அல்ல, அஸத்தும் அல்ல. இவ்விரண்டைவிட வேறுபட்டதாக உள்ளது. எனவேதான் அஞ்ஞானத்தை 'இவ்விதமாக உள்ளது' என்று விவரிப்பதற்கு இயல்வதில்லை. இது ஸத்துவ குணம், இரஜோகுணம், தமோகுணம் என்னும் மூன்று குணங்களுடன் சேர்ந்து உள்ளது. மற்றும் இது ஞானத்திற்கு எதிரானது ஆகும்.

இந்த அஞ்ஞானத்திற்கு 'ஆவரணம்' மற்றும் 'விக்ஷேபம்' என்று இரு சக்திகள் உள்ளன. மங்கிய இருளானது கயிற்றின் உண்மையான உருவத்தை மறைத்து, அதில் பாம்பின் உருவத்தைத் தோன்றுமாறு செய்து விடுகிறது. அதைப் போன்றே, அஞ்ஞானத்தின் ஆவரண சக்தியானது, பிரம்மவஸ்துவின் உண்மையான ஸ்வரூபத்தை மறைத்து விடுகிறது. விக்ஷேப சக்தியானது அதே பிரம்மவஸ்துவிடம் இந்த முழு உலகமும் தோன்றுமாறு செய்து விடுகிறது.

ஜீவாத்மனின் விச்வன், தைஜஸன், ப்ராஜ்ஞன் என்னும் மூன்று வடிவங்கள், ஸ்தூலம், ஸூக்ஷ்மம் மற்றும் காரணம் என்னும் மூன்று சரீரங்கள். அன்ன மயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம் மற்றும் ஆனந்தமயம் என்னும் ஐந்து கோசங்கள், பரமாத்மாவின் ஈசுவரன், ஹிரண்யகர்ப்பன், விராட் என்னும் மூன்று வடிவங்கள், பூர் போன்ற 14 உலகங்கள், அவற்றிலுள்ள ஜீவிகளின் சரீரங்கள், இவற்றிற்குக் காரணமாக உள்ள ஐந்து தன்மாத்திரைகள் மற்றும் ஐம்பெரும்பூதங்கள் என்னும் இவ்வனைத் துமே அஞ்ஞானத்தின் செயல்கள்தான்! அதனுடைய விக்ஷேபசக்தியின் பிரபாவமாக உள்ளது.

கயிற்றிலே அஞ்ஞானத்தால் தோற்றம் கொண்டுள்ள பாம்பைப் புறக்கணித்து, அது கயிறுதான் என்று காட்டுவது போல, பிரம்ம வஸ்துவின்மீது அஞ்ஞானத் தால் காணப்படும் இந்த உலகத்தைப் பிரமாணம், யுக்தி, அனுபவங்களின் மூலம் புறக்கணித்து, அது பிரம்மன்தான் என்று அறியவைக்கும் முறைதான் அபவாதம் ஆகும். பிரம்மத்திடம் இருந்து எந்த முறை யில் இவ்வுலகமானது 'தோற்றம்' கொண்டதோ, அதற்கு எதிரான முறையில் இந்த உலகத்தை பிரம்ம வஸ்துவிடம் 'ஒடுக்கும்' பொழுது (லயம் ஏற்படச் செய்யும் பொழுது), பிரம்மம் ஒன்று மட்டுமே எஞ்சியிருக்கும்.

வேதங்களிலுள்ள நான்கு மஹாவாக்கியங் களில் 'தத்வமஸி' என்னும் உபதேச வாக்கியத்தையும் மற்றும் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்னும் அனுபவ

வாக்கியத்தையும் அத்வைத வேதாந்த நூல்கள் மிகவும் விவரமாக விவரிக்கின்றன. இந்த நூலில், 'தத்வமஸி' என்னும் உபதேச வாக்கியத்திற்குப் பொருள் கொள்ள வேண்டிய முறையானது மிகவும் விவரமாக விளக்கப் பட்டுள்ளது. 'அது (ஈசுவரன்) நீயாக (ஜீவாத்மா) ஆகி யுள்ளாய்' என்பது இந்த வாக்கியத்தின் மேலோட்ட மான பொருள் ஆகும். இந்த வாக்கியத்திற்கு நேரடி யாகப் பொருள் கொள்ளாமல் 'பாகலக்ஷணை'யின் மூலம் பொருள் கொள்ள வேண்டும். 'ஸோऽயம் தேவதத்தன்' என்னும் இந்த வாக்கியத்தில், (அவனே இந்த தேவதத்தன்) வேறு சமயத்தில் வேறு இடத்தில் பார்த்த தேவதத்தனை இன்று இங்கு அடையாளம் கண்டு கொள்வதைப்போல இவ்விதத்தில் அடை யாளம் கண்டு கொள்ளப்படும் பொழுது வேறு வேறாக உள்ள சமயம் மற்றும் இடங்களை விட்டுவிட்டு, மனிதனை மட்டுமே கிரகித்துக் கொள்வதைப் போல, 'தத்வமஸி' என்னும் மஹாவாக்கியத்திலும், ஜீவன், ஈசுவரன் என்னும் இருவருக்கும் சமமானதாக உள்ள சைதன்னிய அம்சத்தை மட்டும் கிரகித்துக் கொண்டு, உபாதியின் திசையிலிருந்து புதியதாக ஏற்பட்டுள்ள எல்லாம் வல்லதன்மை (ஸர்வஞ்ஜத்வ) மற்றும் அல்பத்தன்மை போன்ற அடைமொழிகளை விட்டு விட வேண்டும். இப்பொழுது அந்த இருவரிடையிலும் ஒற்றுமையானது ஏற்படுகிறது. பொருள் பொதிந்த தாகவும் உள்ளது.

இந்த ஒற்றுமையானது அனுபவத்தால், ஞானத் தால் வர வேண்டும். இந்த நிலை ஏற்படுவதற்காக முமுக்ஷுவானவன் சாதனை செய்ய வேண்டும்.

இத்தகைய சாதனையில் 'சிரவணம்' என்பது முதலாவ தாகும். சிரவணம் என்றால் கேட்டுக் கொண்டிருத்தல் என்பது பொருள் இல்லை. உபநிஷதத்திலுள்ள வாக்கியங்களைக் குருவின் மூலம் கேட்டு, உபக்ரமம், உபஸம்ஹாரம் போன்ற 6 இலிங்கங்களின் மூலம் பொருளை நன்றாக உறுதி செய்து கொள்வது ஆகும். இவ்விதம் உறுதி செய்து கொண்ட பொருளை இடை விடாமல் சிந்திப்பது 'மனனம்' ஆகும். இது இரண்டா வது சாதனையாகும். மனனம் பரிபக்குவமான நிலையை அடையும்பொழுது மனமானது பிரம்ம வஸ்துவிடமிருந்து வேறுபட்டுள்ள அனைத்தையும் விடுத்து, பிரம்மவடிவத்தையே பெற்று, தங்குதடை யில்லாமல் பாய்கிறது. இந்தப் பிரவாஹம்தான் நிதித்யாஸனமாகும். இந்த நிலை பரிபக்குவமாகும் பொழுது அது ஸமாதி நிலையில் நிறைவடைகிறது.

ஸமாதியானது, ஸவிகல்பகம், நிர்விகல்பகம் என்று இருவகைப்படும். யானை போன்ற உருவத் திலுள்ள மண்ணினால் செய்யப்பட்டுள்ள பொம்மை களைக் காணும் பொழுது, அதனுடன் மண்ணும் காணப்படுவதைப் போல அறிந்து கொள்பவன், அறியப்படும் பொருள் போன்ற இருமைகளைப் பார்த்துக் கொண்டிருந்தாலும், அத்துடன் பிரம்ம அனுபவமும் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் நிலை தான் 'ஸவிகல்பக ஸமாதி' நிலையாகும். 'நிர்விகல்ப ஸமாதி' நிலையில் அறிந்து கொள்பவன், அறியப்படும் பொருள் என்னும் வேறுபாடுகள் கரைந்து, பிரம்ம அனுபவம் மட்டும் ஏற்பட்டுக் கொண்டிருக்கும். திரு

மூலரும் இக்கருத்தை,

*‘மரத்தை மறைத்தது மாமத யானை*
*மரத்தில் மறைந்தது மாமத யானை*
*பரத்தை மறைத்தது பார்முதல்பூதம்*
*பரத்தில் மறைந்தது பார்முதல்பூதம்’*

என்று கூறியுள்ளார்.

இத்தகைய உயர்ந்த ஸமாதி நிலையை அடைவதற்கு, இயமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணம், தியானம், ஸமாதி என்னும் எட்டு படிகள் தேவையானதாகும். இவற்றைப் பயிற்சியாக மேற்கொண்டால், நிர்விகல்பக ஸமாதியின் மூலம் பிரம்ம அனுபவமானது நேரடியாக அடையப் படுகிறது.

ஒருவர் தன்னுடைய பிராரப்த கர்மத்தை அனுபவித்தே ஆக வேண்டும் என்பதால், அது தீர்ந்து போவதற்கு முன்பே பிரம்ம அனுபவமானது ஏற்பட்டால், அப்பொழுது ஜீவன்முக்தி நிலை ஏற்படுகிறது. இந்த நிலையில் உடல், புலன்கள் போன்றவை தத்தம் செயல்களைச் செய்து கொண்டிருப்பினும், ஜீவன் முக்தனுக்கு அவற்றில் அகங்கார, மமகார வடிவத்தில் அபிமானம் இருப்பது இல்லை. எனவே, உடல்மீது ஆசையுள்ள மற்றவர்களைப்போல, இவனுக்கு இன்ப-துன்ப அனுபவங்களும் இருப்பது இல்லை. ஆனால், பிரம்ம அனுபவம் மட்டும் எப்பொழுதும் இருந்து கொண்டிருக்கும். அதைப் போன்றே, எல்லா நல்ல இயல்புகளும் அணிகலன்களைப் போல இருந்து கொண்டு இருக்கும்.

பிராரப்த கர்மம் முடிந்த பிறகு, உடல் தானாகவே வீழ்ந்துவிடும். அஞ்ஞானமும், அதன் செயல்களும், ஸம்ஸ்காரங்களும் (எண்ணப்பதிவுகள்) முழுமையாக அகன்று இருப்பதால், அவன் இருமையற்ற பிரம்மத்தில் ஒருமித்து இருப்பான். உலகியலைச் சார்ந்த வாழ்க்கைக்கு என்றுமே திரும்பி வருவது இல்லை. இதுதான் விதேஹமுக்தி எனப்படுகிறது. இதுதான் இந்த நூலின் சாரமாகும்.

பெங்களூரிலுள்ள ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் தலைவராக உள்ள பரமபூஜ்ய ஸ்ரீஹர்ஷானந்த சுவாமிஜி அவர்கள் வேதாந்த ஸாரம் என்னும் இந்த நூலை கன்னட மொழியில் மொழிபெயர்த்துள்ளார். திருமதி கல்யாணி வெங்கடராமன் அவர்களால் செய்யப் பட்டுள்ள இந்த தமிழ் மொழிபெயர்ப்பானது விளக்கங் கள், குறிப்புக்கள் போன்ற அனைத்திலும் அந்த நூலை அடியொற்றி எழுதப்பட்டுள்ளது. பரமபூஜ்ய ஸ்ரீநிகிலா னந்தர் சுவாமிஜி அவர்கள் செய்துள்ள ஆங்கில மொழிபெயர்ப்பும் துணை ஆதாரமாகப் பயன்படுத்திக் கொள்ளப்பட்டுள்ளது. இந்த இரு மொழிபெயர்ப்புக் களிலும் சில சிறிய பாடபேதங்கள் காணப்படுகின்றன.

தத்துவத்தில் ஆர்வம் உடைய தமிழர்கள் அனைவரும் இந்த நூலைப்படித்துப் பயனடைவார்கள் என்று நம்புகிறோம்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் ஜெயந்தி
27.02.2009

---

## அடையாளக் குறியீட்டு எழுத்துக்களின் வரிசைமுறை

| | | |
|---|---|---|
| உ. ஸா. | — | உபதேச ஸாஹஸ்ரீ |
| ரி. ஸம். | — | ரிக்வேத ஸம்ஹிதை |
| ஐ. உ. | — | ஐதரேய உபநிஷதம் |
| க. உ. | — | கடோபநிஷதம் |
| கீதை. | — | ஸ்ரீமத் பகவத் கீதை |
| கே. உ. | — | கேன உபநிஷதம் |
| கை. உ. | — | கைவல்ய உபநிஷதம் |
| கௌ. உ. | — | கௌஷீதகிப்ராஹ்மணோபநிஷதம் |
| கௌ. கா. | — | கௌடபாத காரிகை |
| சாந். உ. | — | சாந்தோக்ய உபநிஷதம் |
| சுவே. உ. | — | சுவேதாச்வதர உபநிஷதம் |
| தை. உ. | — | தைத்திரீய உபநிஷதம் |
| தை. பிராம் | — | தைத்திரீய பிராஹ்மணம் |
| ந்ரு. உ. தா. | — | ந்ருஸிம்ஹ உத்தர தாபின்யுபநிஷதம் |
| நை. ஸி. | — | நைஷ்கர்ம்ய ஸித்தி: |
| ப. த. | — | பஞ்சதசீ |

| | | |
|---|---|---|
| பிர. உ. | — | பிரச்ன உபநிஷதம் |
| பிரு. உ. | — | பிருஹதாரண்யக உபநிஷதம் |
| பிர. ஸூ. | — | பிரம்ம ஸூத்திரம் |
| ம. நா. உ. | — | மஹா நாராயண உபநிஷதம் |
| ம. பா. | — | மஹாபாரதம் |
| ம. ஸ்ம்ரு. | — | மனுஸ்ம்ருதி |
| மாண். உ. | — | மாண்டூக்ய உபநிஷதம் |
| முண். உ. | — | முண்டக உபநிஷதம் |
| யோ. ஸூ. | — | பதஞ்சலி யோக ஸூத்திரம் |
| வி. சூ. | — | விவேக சூடாமணி |
| வா. ஸு. | — | வாக்யஸுதா |
| ஹஸ். ஸ்தோ. | — | ஹஸ்தாமலக ஸ்தோத்திரம் |

---

# பொருளடக்கம்

---

# வேதாந்த ஸாரம்

## மங்கலாசரணம்

**अखण्डं सच्चिदानन्दमवाङ्मनसगोचरम् ।**
**आत्मानमखिलाधारमाश्रयेऽभीष्टसिद्धये ॥ १ ॥**

அகண்டம் சச்சிதானந்தமவாங் மனஸ கோசரம் ।
ஆத்மா நமகிலாதாரமாச்ரயே ऽபீஷ்ட ஸித்தயே ॥

*அகண்டமாக உள்ளவனும்,[1] ஸத்-சித்-ஆனந்த வடிவினனும்,[2] சொல், மனங்களுக்கு எட்டாதவனும்,[3] அனைத்துப் பொருட்களின் ஆதாரமுமாக இருப்பவனுமான[4] ஆத்மாவை[5] என்னுடைய விருப்பமானது ஈடேற வேண்டும் என்பதற்காகச் சரண் அடைகிறேன்.[6]*

நூலை இயற்றும் பணியானது எத்தகைய தடையுமின்றி நிறைவேற வேண்டும் என்று நூலைத் தொடங்கும் பொழுது பரம்பொருளைப் பிரார்த்திப்பது வழக்கமானதாக உள்ளது.

1. பகுக்கவியலாத வஸ்து. உறுப்புக்களுடன் கூடிய எல்லா வஸ்துக்களையும் உறுப்பைத் துண்டிப்பதின் மூலம் அழித்துவிடவியலும். ஆத்மாவிற்கு உறுப்புக்கள் இல்லை. எனவேதான் ஆத்மாவானவன் அழிவற்றவனாக விளங்குகிறான்.

2. ஸத் – பிறப்பற்றவன் – எப்பொழும் இருக்கக் கூடியவன், நிலைபெற்ற வடிவினன்.
சித் – அறிவு வடிவானவன் – சைதன்ய வடிவானவன்.

ஆனந்த - சிறிதளவு கூட துக்கம் அற்றவன். எல்லையற்ற ஆனந்த வடிவானவன்.

3. நம்முடைய சொல், மனம் போன்றவை ஐம்புலன் களின்மூலம் ஏற்படும் அனுபவங்களை மட்டுமே விவரிக்க வல்லவை ஆகும். கிரகிக்கத் தக்கவை ஆகும். ஆத்மா புலன் களுக்கு எட்டாதவனாக இருப்பதால், நம்முடைய அகராதி யில் அவனை விவரிக்கத்தக்க சொற்கள் இல்லை. நம் முடைய எண்ண கோசத்தில் அவனை கிரகிக்கத்தக்க எண் ணங்களும் இல்லை. எனவேதான் உபநிஷதங்கள் அவனை,

'யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ ।', 'யாரை அடையவியலாமல் மனமும் வாக்கும் திரும்பு கின்றனவோ அவரே இறைவன் ஆவார்' (தை. உ. 2-4, 2-9).

'நைவ வாசா ந மனஸா ப்ராப்தும் சக்யோ ந சக்ஷுஷா ।', 'வாக்கினாலோ, மனத்தினாலோ, கண்களாலோ அந்த இறுதி உண்மையை அடையவியலாது' (க. உ. 2-3-12) என்று விவரிக்கின்றன.

4. இவ்வுலகப் படைப்பும், இருப்பும், அழிவும் ஆத்மா வினாலேயே ஏற்படுவதால் அவன் எல்லாப் பொருட் களுக்கும் மூல ஆதாரமாக விளங்குகிறான்.

'மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணி கணா இவ ।', 'சரட்டிலே மணி நிரைகள் கோர்க்கப்பட்டுள்ளதைப் போல, இவ்வனைத்தும் என்னிடத்தில் கோர்க்கப்பட்டுள்ளது' என்று பகவத் கீதையில் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா கூறியுள்ளார் (7-7).

5. நம் ஆத்மாவாக உள்ள பரம்பொருளானது, அத் வைத வேதாந்தத்தில், ஆத்மா - பரமாத்மா என்னும் இரு வரும் அல்லது ஆத்மா – பிரம்மன் என்னும் இருவரும் வேறு பாடு அற்றவர்கள் (ஒருவரே ஆவார்) என்று விவரிக்கப் பட்டுள்ளது.

*6. நூலானது, எந்தத் தடையுமின்றி நிறைவு பெற வேண்டும் என்னும் அவருடைய விருப்பமானது ஈடேற வேண்டும் என்பதற்காக ஆத்மாவைச் சரண் அடைகிறார்.*

*இந்த சுலோகத்தில் 'அகிலாதாரம்' என்னும் சொல்லானது சகுண பிரம்மனையும், மற்ற சொற்கள் நிர்குண பிரம்மனையும் குறிப்பிடுகின்றன.*

## குரு நமஸ்காரம்

**अर्थतोऽप्यद्वयानन्दानतीतद्वैतभानतः ।**
**गुरूनाराध्य वेदान्तसारं वक्ष्ये यथामति ॥ २ ॥**

அர்த்ததோऽப்ய த்வயானந்தானதீத த்வைதபானத: ।
குரூனாராத்ய வேதாந்தஸாரம் வக்ஷ்யே யதாமதி: ॥

த்வைத நோட்டமானது (இருமை நோட்டம் பெயரிலே மட்டுமின்றி) பொருளின் நோட்டத்திலும் விடுபட்டு விளங்குகிறது. 'அத்வயானந்தா'[1] என்னும் பெயரையுடைய குரு அவர்களைப் பூஜித்து, வேதாந்த ஸாரத்தை[2] நான் உணர்ந்து கொண்டுள்ள வகையில்[3] கூறுகிறேன் (என் அறிவிற்கு எட்டியபடி).

*1. அத்வயானந்தர் என்பது ஸதானந்தரின் குரு அவர்களின் பெயராகும். அவர் ஞானியாக விளங்குவதால் அவர் த்வைத நோட்டத்திலிருந்து விடுபட்டவராக விளங்குகிறார். அத்வய பிரம்மத்தின் (இரண்டாவது அற்ற பிரம்மத்தின்) ஆனந்தத்தை அவர் அடைந்துள்ளார்.*

*2. வேதாந்தத்தின் ஸாரத்தை உட்கொண்டுள்ள இந்த நூலை என்றும் பொருள் கொள்ளலாம்.*

*3. இது இந்த நூலை இயற்றியவரின் பணிவைக் காட்டு கிறது.*

## வேதாந்தம் என்னும் சொல்லின் பொருள்

**वेदान्तो नामोपनिषत्प्रमाणं तदुपकारीणि शारीरक-सूत्रादीनि च ॥ ३ ॥**

வேதாந்தோ நாம உபநிஷத்ப்ரமாணம் தது பகாரீணி சாரீரக ஸூத்ராதீனி ச ॥ 3 ॥

*வேதாந்தம்[1] என்பது (ஆத்மா உள்ளது என்பதற்கு) பிரமாணமாக[2] விளங்கும் உபநிஷதம்[3] மற்றும் அதற்கு உறுதுணையாக உள்ள[4] சாரீரக ஸூத்திரம்[5] போன்ற[6] நூல்களாகும்.*

*1. வேதங்களின் இறுதிப் பகுதி என்பது வேதாந்தம் என்னும் சொல்லின் நேர்ப்பொருள் ஆகும். வேதங்களின் சித்தாந்தம் அல்லது மிகவும் சிறந்த, உயர்ந்த உபதேசம் என்பது உட்பொருள் ஆகும். காலத்தின் கண்ணோட்டத்தில் உபநிஷதங்கள்தான் அனைத்திற்கும் முற்பட்ட வேதாந்தம் ஆகும்.*

*2. 'மா' என்றால் அளத்தல் என்பது பொருள் ஆகும். அளப்பதற்கும், அறிந்து கொள்வதற்கும் உறுதுணையாக இருப்பதுதான் 'மான' அல்லது 'பிர-மாணம்' ஆகும். அத்வைத வேதாந்தமானது, ஒரு பொருளைக் குறித்து உணர்ந்து கொள்வதற்கு உறுதுணையாக உள்ள ஆறு பிரமாணங்களை ஏற்றுக்கொள்கிறது. பிரத்யக்ஷம், அனுமானம், ஆகமம் அல்லது சொல், உபமானம், அர்த்தா பத்தி (உத்தேசம்) மற்றும் அனுபலப்தி என்பவையாகும். இவைகளில்*

புலன்களுக்கு எட்டாதவனாக உள்ள ஆத்மாவைக் குறித்து உணர்ந்து கொள்ளத்தக்க பிரமாணமானது ஆகமம் அல்லது வேதங்கள் மட்டுமேயாகும். (வேதங்கள் என்றால் இங்கு உபநிஷதங்கள் என்று உணர வேண்டும்).

3. அழித்தல், நோக்கம், நலிவடையச் செய்தல் என்னும் பொருட்களை உடைய 'ஸத்' என்னும் வேர்ச் சொல்லின் முன்பு, 'உப', 'னி' என்னும் முன்னிடைச் சொற்களும் அதன்பின் 'க்விப்' என்னும் விகுதியும் வந்து 'உபநிஷத்து' என்னும் சொல் வடிவத்தைப் பெற்றுள்ளது. பிரம்மனைக் குறித்த விஷயமாக 'வித்ய' என்பது உட்கருத்து ஆகும். பற்றற்று வைராக்கியம் உள்ளவர்களும், பிரம்ம வித்தையில் நாட்டம் கொண்டவர்களுமான முமுக்ஷுக்களின், உலகியல் வாழ்வின் விதையான அவித்யை காமம், கர்மங்கள் போன்றவற்றை அகற்றுவதால் (ஸத்-அழித்தல்) பிரம்ம வித்தையே உபநிஷத்து எனப்படுகிறது அல்லது முமுக்ஷுக்களை பிரம்மத்துடன் இணைப்பதால் (ஸத்=கதி=நோக்கம்) இந்த வித்தையானது உபநிஷத்து எனப்படுகிறது. அல்லது கர்ப்பவாசம், பிறத்தல், வியாதி, இறத்தல் போன்ற துன்பமளிக்கக் கூடியவற்றைச் சிதிலமடையச் செய்வதால் (ஸத்—நலிவடையச் செய்தல், சிதிலமடையச் செய்தல்) இந்த வித்தைதான் உபனிஷத் எனப்படுகிறது (ஸ்ரீசங்கராச்சாரியர் கட உபநிஷத்திற்கு எழுதியுள்ள முன்னுரையைப் பார்க்கவும்).

4. வேதத்தின் அர்த்தத்திற்குப் பொருத்தமானதாக உள்ள, அதை உறுதி செய்யும் நூல்கள்.

5. உடலில் உள்ள ஜீவன்தான் சாரீரகன் ஆவான். அவனுடைய உண்மையான ஸ்வரூபத்தை விவரிக்கும் வேதாந்த சூத்திரங்களை அல்லது பிரம்ம சூத்திரங்களை சாரீரக ஸூத்திரங்கள் என்றும் அழைக்கப்படும் வழக்கம் உள்ளது.

6. பகவத்கீதை போன்ற நூல்கள், வேதாந்த சித்தாந்தத்திற்குப் பொருத்தமானதாக உள்ள மற்ற நூல்கள் ஆகும்.

## நான்கு வகையான அனுபந்தம்

**अस्य वेदान्तप्रकरणत्वात् तदीयैः एव अनुबन्धैः तद्वत्तासिद्धेः न ते पृथगालोचनीयाः ॥ ४ ॥**

அஸ்ய வேதாந்தப்ரகரணத்வாத் ததீயை: ஏவ அனுபந்தை: தத்வத்தா ஸித்தே: ந தே ப்ருதகாலோசனீயா: ॥

இது[1] வேதாந்தத்தின் அதிகாரபூர்வமான நூலாக விளங்குவதால்[2] அதனுடைய[3] அனுபந்தங்களே[4] இதற்கும் ஏற்றாற்போல விளங்குவதால் அதைக் குறித்துத் தனியாக ஆராய வேண்டிய அவசியம் இல்லை.

*1. இந்த நூல்.*

*2. ஏதாவது ஒரு சாத்திரத்தில் கூறப்பட்டுள்ள விஷயத்தை விவரிக்கும் அல்லது அதை அறிந்து கொள்வதற்கு உறுதுணையாக உள்ள நூலை பிரகரண நூல் (அதிகாரபூர்வமான நூல்) என்று அழைக்கிறார்கள்.*

*'சாஸ்த்ரைக தேச ஸம்பத்தம் சாஸ்த்ர கார்யாந்தரே ஸ்திதம் ।*
*ஆஹு: ப்ரகரணம் நாம க்ரந்தபேதம் விபச்சித: ॥'*
*'சாத்திரத்தின் ஒரு பகுதியுடன் தொடர்புடைய அல்லது சாத்திரத்தின்மூலம் ஆகத்தக்க மற்றொரு காரியத்திற்குத் பொருத்தமான சிறப்பான நூலை பிரகரணம் என்று ஞானிகள் அழைக்கின்றனர்.'*

*3. வேதாந்த சாத்திரத்தின்.*

*4. அனுபந்தம் என்றால் தொடர்புபடுத்தப்பட்டுள்ள ஆரம்ப விஷயமாகும். இது அடுத்த பகுதியில் விவரிக்கப் பட்டுள்ளது.*

**तत्र अनुबन्धो नाम अधिकारिविषयसम्बन्धप्रयोजनानि ॥**

தத்ர அனுபந்தோ நாம அதிகாரிவிஷயஸம்பந்த ப்ரயோஜனாணி ॥ 5 ॥

*அங்கு [1] அனுபந்தம் என்றால் அதிகாரி, [2] விஷயம், தொடர்பு மற்றும் பயன் ஆகும்.*

*1. வேதாந்த சாத்திரத்தில்.*

*2. சாத்திரத்தில் கூறப்பட்டுள்ள விஷயங்களைப் புரிந்து கொள்ளக் கூடியவனும் அவற்றை நடைமுறைப்படுத்தும் ஆற்றல் உடையவனும் 'அதிகாரி' ஆவான். சாத்திரத்தின் தாத்பரியப் பொருளே 'விஷயம்' ஆகும். சாத்திர அத்யயனத்தின் மூலம் அதனுடைய தத்துவங்களை நடைமுறைப் படுத்துவதால் ஏற்படும் பயனே 'பிரயோஜனம்' ஆகும். சாத்திரத்திற்கும் விஷயத்திற்கும் அல்லது சாத்திரத்திற்கும் பிரயோஜனத்திற்கும் உள்ள தொடர்பே 'சம்பந்தம்' ஆகும்.*

## அதிகாரியின் இலட்சணம்

**अधिकारी तु विधिवदधीतवेदवेदाङ्गत्वेनापाततोऽधि-गताखिलवेदार्थोऽस्मिन् जन्मनि जन्मान्तरे वा काम्य-निषिद्धवर्जनपुरःसरं नित्यनैमित्तिकप्रायश्चित्तोपासना-नुष्ठानेन निर्गतनिखिलकल्मषतया नितान्तनिर्मलस्वान्तः साधनचतुष्टय-सम्पन्नः प्रमाता ॥ ६ ॥**

6. அதிகாரீ து விதிவத்-அதீத-வேதவேதாங்கத்வேனா-பாதத: அதிகத-அகில-வேதார்த்த: அஸ்மின் ஜன்மனி ஜன்மாந்தரே வா காம்யனிஷித்த-வர்ஜனபுரஸ்ஸரம் நித்ய-நைமித்திக-ப்ராயச்சித்த-உபாஸனா அனுஷ்டானேன நிர்கத நிகில கல்மஷதயா நிதாந்த நிர்மல ஸ்வாந்த: சாதன-சதுஷ்டய ஸம்பன்ன: ப்ரமாதா ॥ 6 ॥

6. *முறையாக*[1] *வேதங்களை, வேதத்தின் அங்கங்களை*[2] *அத்யயனம் செய்து (பயின்று), எல்லா வேதங்களின் பொருட்களையும் பொதுவாக அறிந்துள்ள,*[3] *இந்தப் பிறவியிலோ, முற்பிறவிகளிலோ,*[4] *விரும்பிய பொருளை அடையும் நோக்கத்துடன் செய்யும் செயல்களை விடுத்து, நாள்தோறும் செய்யும்படிக் கூறப்பட்டுள்ள பிராயச்சித்தச் செயல்களையும், வழிபாட்டையும் செய்து*[5] *அதன்மூலம் எல்லா அழுக்குகளையும் களைந்து கொண்டு, மிகத் தூய்மையான மனத்துடன் நான்கு விதமான சாதனங்களைப்*[6] *பெற்றுள்ள, இயல்பான ஞானத்தைப் பெற்றிருப்பவனே*[7] *'அதிகாரி' ஆவான்.*

*1. உபநயனம் செய்து கொண்டு, முறையாக வேத அத்யயனம் செய்துள்ள ஆச்சாரியரைச் சென்று அடைந்து, அவருடைய வீட்டில் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்தல்.*

*2. வேதத்தின் பொருளைச் சரியாக கிரகித்துக் கொள்ள வேண்டும் எனின், சொற்களின் உச்சரிப்பு, ஸ்வரம் போன்றவற்றைக் குறித்த 'சிக்ஷா', சொற்களின் தூய்மையான வடிவம், பிரயோகங்களை விவரிக்கும் 'வியாகரணம்' (இலக்கணம்), மந்திரங்களின் அக்ஷரங்கள், மாத்திரைகளின் சேர்க்கைகளை விவரிக்கும் 'சந்தஸ்', வேதத்திலுள்ள*

சொற்களின் பொருளை விவரிக்கும் 'நிருக்தம்', வேதம் விவரிக்கும் கர்மங்களுக்கு காலத்தை நிர்ணயம் செய்யும் 'ஜோதிஷம்', வேதம் விவரிக்கும் கர்மங்களின் பிரயோக விதிகளை விவரிக்கும் 'கல்பம்' என்னும் வேதத்தின் ஆறு அங்கங்களை அறிந்து இருக்க வேண்டும்.

3. வேதத்தின் பொருளை முழுமையாகவும், சூட்சும மாகவும் அறிந்துகொண்டால் அதன் பயனாக மோட்சமே கிடைக்கிறது. அப்பொழுது சாத்திரத்தை அத்யயனம் செய் வதற்கு அவசியமே இருப்பதில்லை. எனவேதான் 'ஆபாதத' (மேலோட்டமாக, பொதுவாக) என்னும் சொல்லானது பயன்படுத்தப்பட்டுள்ளது. பொதுவாக அறிந்துகொள்வது என்றால் மேலோட்டமாக, உறுதி செய்யப்பட்ட ஞான மில்லாமல் அறிந்துகொள்வது ஆகும். அத்துடன் சந்தேகங் களும் கண்டிப்பாக இருக்கும்.

4. விதுரர், சுகர் போன்றவர்களை நினைவிற்குக் கொண்டு வரலாம்.

5. நாள்தோறும் நியமத்துடன் செய்ய வேண்டிய செயல்கள் இனிவரும் அத்தியாயங்களில் விவரிக்கப்பட் டுள்ளன (7-12).

6. இவைகளும் கூட இனிவரும் அத்தியாயங்களில் விவரிக்கப்பட்டுள்ளன (15-25).

7. உண்மையான ஞானத்தைப் பெறும் சக்தியை உடையவன்.

## காம்ய கர்மம் (பயனை விரும்பும் கர்மம்)

**काम्यानि—स्वर्गादीष्टसाधनानि ज्योतिष्टोमादीनि ॥ ७ ॥**

காம்யானி-ஸ்வர்காதி-இஷ்டஸாதனானி ஜ்யோதிஷ்-டோமாதீனி ॥ 7 ॥

சுவர்க்கம் போன்ற[1] விரும்பிய பயன்களை ஏற்படுத்திக் கொடுக்கவல்ல ஜ்யோதிஷ்டோமம்[2] போன்றவை[3] பயனை விரும்பும் கர்மங்கள் ஆகும்.

1. செல்வம், குழந்தைகள் போன்றவற்றை விரும்புதல்.

2. அக்னியைக் குறித்த பிரார்த்தனைகளை அக்னிஷ்டோமம் என்னும் யாகம் உள்ளடக்கிக் கொண்டுள்ளது. 'ஜ்யோதிஷ்டோமேன ஸ்வர்க காமோயஜேத ॥', 'சுவர்க்கத்தை விரும்புபவன் ஜ்யோதிஷ்டோமத்தைச் செய்ய வேண்டும்' என்றும் வேத வாக்கியம் உள்ளது.

3. காரீரீஷ்டி யாகம்-மழைபொழிய வேண்டும் என்றும் செய்யும் யாகம்.
புத்ரகாமேஷ்டி யாகம்-குழந்தைகள் வேண்டும் என்று செய்யும் யாகம் போன்றவை.

## நிஷித்த கர்மம்—தவிர்க்க வேண்டிய கர்மம்

**निषिद्धानि—नरकाद्यनिष्टसाधनानि ब्राह्मणहननादीनि ॥ ८ ॥**

நிஷித்தானி நரகாத்யநிஷ்டஸாதனானி ப்ராஹ்மண ஹனனாதீனி ॥ 8 ॥

நரகம் போன்ற[1] தேவையற்ற பலன்களை ஏற்படுத்தவல்ல பிரம்மஹத்தி[2] போன்ற செயல்கள்[3] தவிர்க்க வேண்டியவை[4] ஆகும்.

1. இவ்வுலகத்தில் அனுபவிக்கும் துக்கம், வறுமை போன்றவை, மனிதப் பிறவியை விடக் கீழான பிராணிகள், புழுக்கள் போன்ற பிறவிகள்.

2. 'ப்ராஹ்மணோன ஹந்தவ்ய:', 'பிராம்மணனைக் கொல்லக் கூடாது' என்னும் வேத வாக்கியம் உள்ளது.

*3. குடித்தல், விபச்சாரம், பொய் கூறுதல், திருடுதல் போன்றவை.*

*4. செய்யக் கூடாது என்று கூறப்பட்டுள்ள செயல்கள்.*

## நித்ய கர்மம்

**नित्यानि—अकरणे प्रत्यवायसाधनानि सन्ध्यावन्दनादीनि ॥**

நித்யானி அகரணே ப்ரத்யவாயசாதனானி ஸந்த்யா-வந்தனாதீனி ॥ 9 ॥

*செய்யாமலிருந்தால் தடைகளை ஏற்படுத்தும்[1] சந்தியாவந்தனம்[2] போன்றவை[3] நாள்தோறும் செய்யத் தக்க கர்மங்கள் ஆகும்.*

*1. நிச்சயமாக செய்ய வேண்டிய செயல்கள் நித்திய கர்மங்கள் ஆகும். இவைகளைச் செய்வதால் எத்தகைய தனிப்பட்ட பலனும் ஏற்படுவது இல்லை. செய்யாமல் இருந் தால் மட்டும் விரும்பாத பயனைத் தரத்தக்க 'ப்ரத்யவாயம்' என்னும் தோஷத்தை ஏற்படுத்திவிடுகிறது. இது மீமாம்சகர் களின் கொள்கை ஆகும்.*

*ஆனால் வேதாந்திகள் இக்கருத்தை ஏற்றுக்கொள்வது இல்லை. அஸத்திலிருந்து ஸத்தும், இல்லாத ஒன்றிலிருந்து உருவத்துடன் கூடிய பொருளும் என்றுமே தோன்றவிய லாது. நித்திய கர்மத்தைச் செய்யாமலிருப்பதால் 'ப்ரத்ய வாயம்' என்னும் தோஷத்தின் பயனானது ஏற்பட வியலாது. நித்திய கர்மத்தைச் செய்வதால், விரும்பத்தகாத, முன்பு செய்த தீவினைகளின் பலனானது (ப்ராப்த கர்மபலன்) குறை கிறது. செய்யாமல் இருப்பதால் விரும்பத்தகாத பலன் ஏற்பட்டு துயரத்தை ஏற்படுத்துகிறது. ப்ரத்யவாயம் என்றால் இவ்வளவுதான்.*

இந்த விஷயத்தை ஸ்ரீசங்கரபகவத்பாதர் தம்முடைய தைத்திரீய உபநிஷத பாஷ்யத்தின் தொடக்கத்தில் விவாதித்து உள்ளார்.

2. காலை, நண்பகல், மாலை வேளைகளில் செய்ய வேண்டிய செயல், சூரியமண்டலத்தின் உட்புறத்திலுள்ள பரம்பொருளை வழிபடுவது ஆகும். காயத்ரி மந்திர ஜபம் இந்த வழிபாட்டின் முக்கியமான அங்கமாக விளங்குகிறது.

3. அக்னிஹோத்திரம், பஞ்சமஹாயக்யம் போன்றவை ஆகும்.

## நைமித்திக கர்மம்

**नैमित्तिकानि—पुत्रजन्माद्यनुबन्धीनि जातेष्ट्यादीनि ॥**

நைமித்திகானி-புத்ரஜன்மாத்யனுபந்தீனி ஜாதேஷ்ட-யாதீனி ॥ 10 ॥

குழந்தை பிறந்தவுடன் செய்யப்பட வேண்டிய ஜாதேஷ்டியாகம் போன்றவை நைமித்திக கர்மங்கள் ஆகும்.

ஒரு நோக்கம், காரணத்துடன் தொடர்பு உடையது நைமித்திகம் ஆகும். ஏதாவது ஒரு தனிப்பட்ட நோக்கம் அல்லது காரணத்தினால் செய்யத் தக்க கர்மம் நைமித்திக கர்மம் ஆகும். புத்திரன் அவதரித்த சமயத்தில் செய்ய வேண்டியது ஜாதேஷ்டி என்னும் யாகமாகும். அமாவாஸை, பௌர்ணமிகளில் செய்ய வேண்டிய தர்ச-பூர்ணமாஸ யாகங்கள், சிரார்த்தம் போன்ற கர்மங்கள் என்னும் இவ்வனைத்தும் இந்த வகையைச் சேர்ந்தது ஆகும்.

## பிராயச்சித்த கர்மம்

**प्रायश्चित्तानि—पापक्षयसाधनानि चान्द्रायणादीनि ॥**

ப்ராயச்சித்தானி-பாபக்ஷயஸாதனானி சாந்த்ரா-யணாதீனி ॥ 11 ॥

செய்த பாபத்தைப் போக்குவதற்கு (அல்லது குறைப்பதற்கு) உறுதுணையாக உள்ள சாந்த்ராயணம் போன்றவை பிராயச்சித்த கர்மங்கள் ஆகும்.

முற்பிறவியில் செய்த தீயசெயலின் பலன்தான் பாபம் ஆகும். இது அதன்பிறகு தீயசெயலின் விளைவான துயரம், வேதனைகளை ஏற்படுத்துகிறது. பாபம் செய்தவன் அதன் விளைவிலிருந்து தப்பித்துக் கொள்ள வேண்டும் எனின், பச்சாதாபம் கொண்டு, சாத்திரத்தில் கூறப்பட்டுள்ள பாபத்தை அழிக்கவல்ல பிராயச்சித்தக் கர்மங்களைச் செய்ய வேண்டும்.

ஆங்கீரஸ ஸ்ம்ருதியானது பிராயச்சித்தத்தை வருமாறு விவரிக்கிறது.

'ப்ராயோ நாம தப: ப்ரோக்தம் சித்தம் நிச்சய
உச்யதே ।
தபோநிச்சய ஸம்யோகாத் ப்ராயச்சித்தமிதி ஸ்ம்ருதம் ॥'

'ப்ராய என்றால் தவமாகும். சித்த என்றால் நிச்சயம் ஆகும் (பாபத்தை அகற்றுவதற்காகச் செய்யும்) தவத்தின் நிச்சயத்தால் இதைப் பிராயச்சித்தம் என்று கூறுகிறார்கள்.'

தர்மசாத்திர நூல்களில் பலவிதமான பாவங்களும் பிராயச்சித்தங்களும் விவரிக்கப்பட்டுள்ளன. உதாரணம்-அகமர்ஷணம், அதிக்ருச்ச்ர, அர்தக்ருச்ச்ர, க்ருச்ச்ராதிக்ருச்ச்ர, ஏகபக்த, கோவ்ரத, பர்ணகூர்ச, சாந்த்ராயணம் போன்றவை ஆகும்.

சாந்த்ராயணம் என்பதை,

'சந்த்ரஸ்ய அயனமிவ அயனம் சரணம் யஸ்மின் கர்மணி ஹ்ராஸ வ்ருத்திப்யாம் தத் சாந்த்ராயணம் ।', 'எந்தக் கர்மத்தில் சந்திரனின் கலைகளைப் போல தேய்பிறை, வளர்பிறைகளைப்போல, (உணவின் அளவு) சிறிய அளவிலிருந்து கூடிக்கொண்டு செல்கிறதோ அது சாந்த்ராயணம்' என்று மிதாக்ஷரர் விவரித்துள்ளார். இந்த விரதத்தில் உணவை பௌர்ணமியிலிருந்து அமாவாஸ்யை வரையிலும் குறைத்துக் கொண்டே வந்து, அமாவாஸ்யை அன்று உபவாஸம் இருந்து, பிறகு அடுத்த நாள்முதல் பௌர்ணமி வரையிலும் அதிகப்படுத்திக் கொள்வது ஆகும்.

## உபாஸனை

**उपासनानि—सगुणब्रह्मविषयमानसव्यापार-रूपाणि शाण्डिल्यविद्यादीनि ॥ १२ ॥**

உபாஸனானி ஸகுணப்ரஹ்ம விஷயமான ஸவ்யாபார ரூபாணி சாண்டில்ய வித்யாதீனி ॥ 12 ॥

சகுண பிரம்மனுடன் தொடர்புடைய அதைக் குறித்த மனத்தின் செயல்பாடுகளான சாண்டில்ய

வித்தை போன்றவை உபாஸனைகளாகும் (சகுண பிரம்மத்தைக் குறித்து மனத்தினால் செய்யப்படும் தியானங்கள் எல்லாம் உபாஸனைகள் ஆகும்).

உபாஸனை என்றால் தியானம் அல்லது எண்ணு தல் ஆகும். இது மனத்தின் சங்கல்பசக்தியால் ஏற்படுவ தாகும். மற்றும் மனத்தை உபாஸிக்கும் வஸ்துவிடம் செலுத்தவல்ல எண்ண வடிவத்தை உடையது ஆகும். எனவேதான் ஒரு வஸ்துவின் உண்மையான ஸ்வரூப அறிவை ஏற்படுத்தும் 'ஞான'த்தைவிட வேறுபட்டதாக விளங்குகிறது.

உபாஸனை செய்வதற்கு ஏற்ற விஷயமாக எதை வேண்டுமானாலும் தேர்ந்து எடுத்துக் கொள்ளலாம். ஆனால் ஆன்மீக நாட்டம் கொண்ட சாதகர்கள் தேர்ந்து எடுத்துக் கொள்ள வேண்டிய விஷயங்களைச் சாத்திரங் கள் தெளிவாக விவரிக்கின்றன. பிரம்மஞானத்தால் மோக்ஷத்தைப் பெற விரும்புபவர்கள் கூட, ஆரம்பக் கட்டங்களில் வேதம் அங்கீகரிக்கும் ஆதித்ய, நாமம், பலம், மனம் போன்றவற்றையோ, யோகசாத்திரம் அங்கீகரிக்கும் நாராயணன் போன்ற விக்கிரங்களையோ தியானப் பொருளாக வைத்துக்கொண்டு உபாஸ னையை பயில வேண்டும். இதனால் மனம் தூய்மை யையும், ஒருமுனைப்பாட்டையும் பெறும்பொழுது, சகுண பிரம்மனைக் குறித்த விஷயத்தையே தேர்ந்து எடுத்துக் கொண்டு உபாஸனையைத் தொடர்ந்து மேற்கொள்ளலாம். காலம் செல்லச் செல்ல, இந்த உபாஸனையானது நிர்குணபிரம்மத்தின்மீது நிதித்யா ஸனம் செய்வதற்கு உறுதுணையாக இருக்கும்.

உலகத்தின் உண்மை நிலையை தற்காலிகமாக ஏற்றுக்கொண்டு, பரம்பொருளை இந்த உலகத்தின் படைப்பு, இருப்பு, அழிவுகளின் மூலபுருஷன் என்னும் நோட்டத்துடன் காணும்பொழுது அது சகுணபிரம்ம மாகத் தோன்றுகிறது. கயிறு பாம்பாக அஞ்ஞானத்தால் தோற்றமளிப்பதைப்போல, பரம்பொருளின் விஷயம் குறித்த அஞ்ஞானத்தின் பயனால் உலகம் அதில் தோன்றுகிறது. இவ்விதம் தோற்றமளிக்கும் உலக மானது தானாகவே தோற்றம் கொள்ள வியலாத மாயை ஆகும். பரம்பொருள் ஒன்றுதான் உண்மையானது, இவ் வுலகத்திற்கு தோற்றமே இல்லாமல் இருக்கும் பொழுது படைப்பு, இருப்பு, அழிவு என்னும் பேச்சே வருவதில்லை. எனவே பரம்பொருள் அவற்றின் மூல புருஷன் இல்லை என்னும் இந்தக் கண்ணோட்டத் துடன் காணும்பொழுது பரம்பொருளானது சகுணம் அல்ல, நிர்குணம் என்று புலப்படுகிறது.

உபாஸனைக்கு உறுதுணையாக உள்ள பல பாட முறைகளை உபநிஷதங்கள் விவரிக்கின்றன. இங்கு விவரிக்கப்பட்டுள்ள சாண்டில்ய வித்தை என்பது சாந்தோக்ய உபநிஷதத்தில் காணப்படுகிறது (3-14, 1-4).

'ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்-ஜ-லானிதி சாந்த உபாஸீத...।', 'படைப்பு, இருப்பு, அழிவுகளுக்குப் பிரம்மமே ஆதாரமாக இருப்பதால் இவ்வனைத்தும் பிரம்மமே. எனவே அமைதியுடன் அதை உபாஸனை செய்ய வேண்டும்.'

அடுத்து வரும் அத்தியாயங்களில் உபநிஷதம், இந்த சகுண பிரம்ம உபாஸனைக்கு உறுதுணையாக பல

*இயல்புகளை விவரித்து அந்த பிரம்மனே நம் உள்ளே வீற்றுள்ள ஆத்மா என்றும், அது அணுவைக் காட்டிலும் நுண்ணியதானதாகவும், மிகப் பெரியதை விடப் பெரியது என்றும், இத்தகைய சிரத்தையிருப்பவன் மரணத்திற்குப் பிறகு அதையே அடைகிறான் என்றும் விவரித்துள்ளது.*

*புருஷவித்தை, ஸம்வர்க வித்யை, சோடசகல வித்யை, உபகோஸலவித்யை, அக்ஷிபுருஷவித்யை, பஞ்சாக்னி வித்யை, பூமவித்யை, தஹர வித்யை என்னும் இவை சாந்தோக்ய உபநிஷதத்தில் வரும் மற்ற வித்யைகள் ஆகும்.*

## நாள்தோறும் செய்யும் கர்மங்களின் பலன்

**एतेषां नित्यादीनां बुद्धिशुद्धिः परं प्रयोजनमुपासनानां तु चित्तैकाग्र्यम् 'तमेतमात्मानं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन' (बृ. उ. ४.४.२२), इत्यादि-श्रुतेः 'तपसा कल्मषं हन्ति' (मनु. १२.१०४) इत्यादिस्मृतेश्च ॥ १३ ॥**

ஏதேஷாம் நித்யாதீனாம் புத்தி சுத்தி: பரம் ப்ரயோஜனம்; உபாஸனானாம் து சித்தைகாக்ரயம்; 'தமேதமாத்மானம் வேதானுவசனேன ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஜ்ஞேன' (பிரு. உ. 4.4.22) இத்யாதி ஸ்ருதே: 'தபஸா கல்மஷம் ஹந்தி' (ம. ஸ்ம்ரு. 12.104) இத்யாதி ஸ்ம்ருதேச்ச ॥ 13 ॥

*13. நாள்தோறும் செய்யத்தக்க கர்மங்களுக்கு,[1] மனத்தைத் தூய்மைப்படுத்துதல் என்பதுதான் முக்கியமான பயன்[2] ஆகும் (பரம ப்ரயோஜனம்).*

உபாஸனைகளுக்கு மனத்தின் ஒருமுனைப்பாடுதான் பயன் ஆகும்.[3] 'இந்த ஆத்மாவைப் பிராம்மணர்கள், நாள்தோறும் தன்னை ஆராய்ந்து அறிவதன் மூலமும், யாகங்கள் செய்வதன் மூலமும் அறிந்துகொள்வதற்கு விரும்புகின்றனர்' (பிரு. உ. 4.4.22) என்னும் சுருதி யிலிருந்தும் 'தவத்தினால் பாபத்தைப் போக்கிக் கொள் கின்றனர்' (ம. ஸ்ம்ரு. 12.104) என்னும் ஸ்ம்ருதியிலிருந் தும் தெரிய வருகிறது.[4]

1. நைமித்திக கர்மம், பிராயச்சித்த கர்மம் என்னும் இவற்றையும் இங்கு சேர்த்துக் கொள்ள வேண்டும்.

2. பரமபிரயோஜனம் என்றால் இங்கு முக்கியமான பயன் என்பது பொருளாகும். நாள்தோறும் செய்யத்தக்க கர்மங்கள் எந்த வகையில் மோக்ஷத்தை முறையாக சாதித்துக் கொடுக்கிறது என்பதை ஸ்ரீசுரேஸ்வராச்சாரியர் தம்முடைய நைஷ்கர்ம்யசித்தி (1-52)யில் அழகாக விவரித்துள்ளார்.

'நித்யகர்மானுஷ்டானாத் தர்மோத்பத்தி:
தர்மோத்பத்தே: பாபஹானி: தத:, சித்தசுத்தி: தத:
ஸம்ஸாரயாதாத்மய-அவபோத:, தத: வைராக்யம்,
தத: முமுக்ஷுத்வம், தத: தருபாயபர்யேஷணம், தத:
ஸர்வகர்ம-தத் ஸாதன ஸன்யாஸ: தத: யோகாப்யாஸ: தத:
சித்தஸ்யப்ரத்யகப்ரவணதா, தத: தத்வமஸ்யாதி
வாக்யார்த்தபரிஞ்ஞானம், தத: அவித்யோச்சேத ததச்ச
ஸ்வாத்மனி ஏவ அவஸ்தானம் ॥'

'நாள்தோறும் செய்யத்தக்க கர்மங்களை முறையாகச் செய்வதால் தர்மம் என்னும் நல்லபேறு தோன்றுகிறது. இந்த நற்பேறு பாபத்தை அழிக்கிறது. அதனால் வாழ்க்கை யின் உண்மையான இயல்பைக் குறித்த அறிவு ஏற்படுகிறது. அதனால் வைராக்கியமும், வைராக்கியத்தால் மோட்சம்

அடைய வேண்டும் என்னும் விருப்பமும் ஏற்படுகிறது. அப்பொழுது மோக்ஷத்திற்கான உபாயத்தைத் தேடுகிறான். அதனால் எல்லா கர்மங்கள் மற்றும் எல்லா சாதனங்களை யும் விட்டொழித்து, அதன்பிறகு யோகத்தை மேற்கொள்ளு வதும் ஏற்படுகிறது. இதனால் மனம் உட்புறமாகத் திரும்பு கிறது. 'தத்வம் அஸி' போன்ற வேதாந்த மஹாவாக்கியங் களைக் குறித்த ஞானம் ஏற்படுகிறது. அதன்மூலம் அறி யாமை அகன்று தன் ஆத்மாவின்மீதே நிலைபெறுகிறான்.'

3. வேதத்தில் (சுருதியில்) ஒவ்வொரு உபாஸனைக் கும், தனிப்பட்ட பலனைக் கூறியிருப்பினும், எல்லா உபாஸனைகளுக்கும் பொதுவாக உள்ள மற்றும் முக்கிய மாக உள்ள பலனை மட்டுமே இங்கு விவரித்துள்ளது.

நாள்தோறும் செய்யும் கர்மங்கள் மனத்தைத் தூய்மைப் படுத்துகின்றன. தூய்மையான மனம் இருந்தால் மட்டுமே உபாஸனை செய்யவியலும். உபாஸனையை மேற்கொள்வ தால் காலப்போக்கில் மனஒருமைப்பாடு, மஹாவாக்கியங் களின் பொருளைக் கிரகித்துக் கொள்ளும் திறமை போன் றவை ஏற்படுகிறது.

4. இதே வேத வாக்கியத்தில் 'தானேன தபஸா அனாச கேன' என்பவை அடுத்து வரும் சொற்கள் ஆகும். இவ் வனைத்தும் கர்ம வடிவங்கள். இருப்பினும் இவற்றின்மூலம் ஆத்மாவை அறிந்துகொள்வதற்கு விரும்புகின்றனர். (விவிதிஷந்தி) என்று கூறியிருப்பதால், இந்த கர்மங்கள் பாபம் விலகுவதற்கும், மனம் தூய்மையாவதற்கும் காரண மாக விளங்கி, அதன்மூலம் ஆத்ம தத்துவத்தை அறியும் ஆர்வத்தை அவரிடம் ஏற்படுத்துகிறது என்றுதான் பொருள் கொள்ள வேண்டியுள்ளது. இவ்விதத்தில் வேத வாக்கிய மானது, கர்மத்தினால், மனம் தூய்மை அடைகிறது என் பதை மறைமுகமாகக் குறிப்பிடுகிறது.

**नित्यनैमित्तिकयोः उपासनानां त्ववान्तरफलं पितृलोकसत्यलोकप्राप्तिः, 'कर्मणा पितृलोकः विद्यया देवलोकः' (बृ. उ. १.५.१६) इत्यादिश्रुतेः ॥ १४ ॥**

நித்யநைமித்திகயோ: உபாஸனானாம் ச ஆவாந்தரபலம் பித்ருலோக ஸத்யலோக ப்ராப்தி: 'கர்மணாபித்ருலோக: வித்யயா தேவலோக:' (பிரு. உ. 1.5.16) இத்யாதிச்ருதே: ॥ 14 ॥

*நித்யநைமித்திக கர்மங்களுக்கும்[1] உபாஸனைகளுக்கும் முறையே பித்ருலோகம் (மூதாதையர் உலகத்தை அடைவது) மற்றும் ஸத்யலோகங்களை அடையும் பயன்[2] கிடைக்கிறது. 'கர்மத்தினால் பித்ரு லோகமும்[3] ஞானத்தால்[4] தேவலோகமும்[5] கிடைக்கின்றன (பிரு. உ. 1.5.16) என்று சுருதியில் கூறப்பட்டுள்ளது.*

*1. பிராயச்சித்தக் கர்மங்கள் பாபம் விலகுவதற்கு மட்டுமே உறுதுணையாக உள்ளன. மரணத்திற்குப் பிறகு தனிப்பட்ட பலனை ஏற்படுத்தாது. எனவே அவை இங்கு விடப்பட்டுள்ளன.*

*2. மனம் தூய்மையடைவதுதான் முக்கியமான பலன் (பரம பிரயோஜனம்) என்று முதலிலேயே கூறப்பட்டுள்ளது. இந்தத் துணைப்பயனானது, அதை விரும்பியவர்களுக்கு மட்டுமே கிடைக்கிறது.*

*3. அக்னிஹோத்திரம் போன்ற கர்மங்களால் கிடைக்கும், பூலோகத்திற்கும், சுவர்க்கத்திற்கும் இடையிலுள்ள ஒரு லோகம்.*

*4. இங்கு வித்யை என்றால் உபாஸனை என்பது பொருள் ஆகும். ஞானம் இல்லை.*

5. ஸத்ய லோகம் அல்லது பிரம்ம லோகமானது ஏழு லோகங்களில் மிகவும் உயர்ந்தது ஆகும். இங்கு சென்றவர்கள் மீண்டும் பிறப்பதில்லை.

## நான்கு விதமான சாதனங்கள்

**साधनानि—नित्यानित्यवस्तुविवेकेहामुत्रार्थफलभोग-विरागशमादिषट्क-सम्पत्तिमुमुक्षुत्वानि ॥ १५ ॥**

ஸாதனானி-நித்யாநித்யவஸ்து விவேக இஹா முத்ரார்த்த பலபோக விராக சமாதி ஷட்க ஸம்பத்தி-முமுக்ஷுத்வானி ॥

நிலைத்த வஸ்து, அழியத்தக்க வஸ்துக்களைக் குறித்து பகுத்து ஆராய்ந்து அறிதல், செய்த கர்மங்களின் பலனை (இம்மையிலும் மறுமையிலும்) இஹலோகத்திலும், பரலோகத்திலும் துறத்தல், மனஅமைதி (அகச்சமநிலை) போன்ற ஆறு செல்வங்களைப் பெற்று இருத்தல், மோக்ஷம் அடையும் விருப்பம் இவை ஞானத்தை அடைவதற்குரிய சாதனங்கள் ஆகும்.

இந்த சாதனங்கள் அடுத்து விவரிக்கப்படுகின்றன.

இங்கு அவை கொடுக்கப்பட்டுள்ள முறையானது முக்கியமானதாகும். விவேகம் வைராக்கியத்திற்கும், வைராக்கியமானது மனச் சமநிலை போன்றவற்றை அடைவதற்கும், அது மோக்ஷத்தை அடைய வேண்டும் என்னும் எண்ணம் ஏற்படுவதற்கும் காரணமாக உள்ளது. முதலில் கூறப்பட்டுள்ள சாதனங்கள் இல்லை எனின் பின்னால் கூறப்பட்டுள்ள மோக்ஷம் அடைய வேண்டும் என்னும் எண்ணம் தோன்றாது.

**नित्यानित्यवस्तुविवेकस्तावद् ब्रह्मैव नित्यं वस्तु ततोऽन्यदखिलमनित्यमिति विवेचनम् ॥ १६ ॥**

நித்யா நித்யவஸ்து விவேக: தாவத் ப்ரஹ்மைவ நித்யம் வஸ்து தத: அன்யத் அகிலம் அநித்யமிதி விவேசனம் ॥ 16 ॥

*நித்ய, அநித்ய வஸ்து விவேகம் என்றால், பிரம்மனே அழியாத, நிலைத்த வஸ்து, பிரம்மனைத் தவிர மற்ற பொருட்கள் அனைத்தும் அழியும் தன்மையுடையவை என்று பகுத்து ஆராய்ந்து அறிவது ஆகும்.*

*தேசம், காலம் போன்ற காரணங்களால் வரையறை அற்ற, நிலைத்த பொருளே நித்தியமாகும். வரையறைக்கு உட்பட்ட, அதனாலேயே அழியும் பொருள் அநித்தியமாகும். இவ்வுலகம் நிலையற்றது (அநித்தியமானது), பிரம்மன் ஒன்றே நிலைபெற்றது என்னும் ஞானமானது ஏற்படாதவரையிலும் ஆன்மீக சாதனையைச் செய்யவியலாது. அதனால்தான் விவேகமானது முதன்மையான சாதனமாக விவரிக்கப்பட்டுள்ளது.*

**ऐहिकानां स्रक्चन्दनवनितादिविषयभोगानां कर्मजन्यतयानित्यत्ववदामुष्मिका-णामप्यमृतादिविषयभोगा-नामनित्यतया तेभ्यो नितरां विरतिः—इहामुत्रार्थफलभोगविरागः ॥ १७ ॥**

ஐஹிகானாம் ஸ்ரக் சந்தன-வனிதாதி விஷய-போகானாம் கர்ம ஜன்மதயா அநித்யத்வவத் ஆமுஷ்மி-காணாமபி அம்ருதாதி விஷய போகானாம் அநித்யதயா தேப்யோ நிதராம் விரதி:-இஹாமுத்ரார்த்த பல போக விராக: ॥ 17 ॥

இவ்வுலகத்திலுள்ள பூமாலை, சந்தனம், பெண் போன்ற விஷய போகங்கள், கர்மங்களின் பலனாக ஏற்பட்டு இருப்பதால் அழியும் தன்மையைப் பெற்று இருப்பதைப் போல (அநித்தியமாக உள்ளதைப்போல) பரலோகத்தில் அமுதபானம் போன்ற விஷய போகங்களும் அழியும் தன்மை உடையதாக, இருப்பதால், அவற்றை முழுமையாகத் துறப்பதே, (இம்மையிலும்) இவ்வுலகத்திலும், (மறுமையிலும்) பரலோகத்திலும் கிடைக்கக் கூடிய பொருட்களைத் துய்ப்பதிலிருந்து துறப்பது ஆகும்.

விவேகத்திலிருந்து வைராக்கியம் தோன்றுகிறது. எதற்குத் தோற்றம் இருக்கிறதோ, அதற்கு மரணமும் உண்டு. தோற்றம் கொண்ட பொருட்கள் அனைத்திற்கும் அழிவு உண்டு என்னும் இந்த உண்மையானது நமக்கு விவேக புத்தியால் தெரியவருகிறது. அதன் பயனாக இவ்வுலகத்திலுள்ள அழியத்தக்க பொருட்களின் மீது வைராக்கியம் ஏற்படுகிறது.

சுவர்க்கம் போன்ற பரலோகங்களும் அவற்றில் கிடைக்கக் கூடிய அமுதபானம் போன்ற இன்பங்களும் இவ்வுலக இன்பங்களுடன் ஒப்பிடும் பொழுது, உயர்ந்ததைப் போலத் தோன்றினாலும், அவையும் கூட நிலையற்றவை மற்றும் அழியத்தக்கவையாகும். ஏனெனில் அவை விரும்பிச் செய்த கர்மங்களின் பயனாகக் கிடைத்தவை ஆகும். கர்மங்கள் செய்ததின் பயனாகக் கிடைத்தது அனைத்தும் அழியும் தன்மை உடையவையன்றோ? எனவே இவ்வுலகத்தில் உள்ள போகங்களுக்குப் பொருந்தும் நியமமானது அவற்றிற்கும்

பொருந்துகிறது. நம்முடைய விவேக புத்தியானது நல்ல கூர்மையாக இருந்தால், நாம் இதைப் புரிந்து கொண்டு, இவற்றிலும் வைராக்கியத்தை மேற்கொள் வோம். ஒன்றை விரும்பி கர்மங்கள் செய்வதைத் துறந்து, மோக்ஷத்திற்காக முயற்சி செய்வோம்.

சுருதி, ஸ்ம்ருதிகளில் பொருள்களைப் பெறுவதற் காகச் செய்யும் கர்மங்கள் மற்றும் அவைகளால் ஏற்படும் நிலையற்ற பலன்களைக் குறித்து நிந்திக்கும் பல வாக்கியங்களைக் காண்கிறோம்.

*'தத்யதேஹ கர்மசிதோ லோக: க்ஷீயத ஏவமே வாமுத்ர புண்யசிதோ லோக: க்ஷீயதே ।।'*, *'இவ்வுலகத் தில் கர்மத்தின்மூலம் பெற்ற போகப் பொருளானது எப்படி அகன்றுவிடுகிறதோ, அதைப் போன்றே பர லோகத்தில் புண்ணியச் செயலின்மூலம் பெற்ற போகப் பொருளும் அகன்று விடுகிறது'* (சாந். உ. 8.1.6).

*'ஜானாம்யஹம் சேவதிரித்யநித்யம்*
*ந ஹ்யத்ருவை: ப்ராப்யதே ஹி த்ருவம் தத் ।।'*

*'வினைப்பயன்கள் என்னும் விதியானது நிலை யற்றது என்று நான் அறிவேன். ஏனெனில் நிலையற்ற அவற்றால் நித்ய வஸ்துவான ஆத்மாவை அடைய வியலாது'* (க. உ. 1.2.10).

*'பரீக்ஷ்ய லோகான் கர்மசிதான் ப்ராஹ்மணோ*
*நிர்வேதமாயாத் நாஸ்த்யக்ருத: க்ருதேன: ।।'*

*'சான்றோன் ஒருவன் தன்னுடைய செயல்களின் பலனாகப் பெற்ற லோகங்களை முதலில் ஆராய்ந்து பார்க்க வேண்டும். ''கர்மங்களால் இறைவனை*

அடையவியலாது. வைராக்கியத்தால்தான் முடியும்'' (பற்றின்மையால்) என்பதை உணர்ந்து பற்றின்மையைப் பெற வேண்டும்' (முண். உ. 1.2.12).

'தே தம் புக்த்வா ஸ்வர்க-லோகம் விசாலம்
க்ஷீணே புண்யே மர்த்ய-லோகம் விசந்தி ॥'

'அவர்கள் அந்த விசாலமான சுவர்க்க லோகத்தை அனுபவித்து, புண்ணியம் தேய்ந்ததும் மனித உலகை அடைகின்றனர்' (கீதை 9.21).

'ஆப்ரஹ்ம-புவனால்லோகா: புனராவர்த்தினோ அர்ஜுன ।', 'அர்ஜுனனே, பிரம்மலோகம் வரையிலுள்ள எல்லா லோகங்களிலிருந்தும் மனிதலோகத்திற்குத் திரும்பிவர வேண்டியுள்ளது' (கீதை 8.16).

**शमादयस्तु—शमदमोपरतितितिक्षा-समाधानश्रद्धाख्याः ॥**

சமாதயஸ்து சம-தம-உபரதி-திதிக்ஷா-ஸமாதான ச்ரத்தாக்யா ॥ 18 ॥

சமா போன்றவை என்ன என்றால், சம, தம, உபரதி, திதிக்ஷா, சமாதானம் மற்றும் சிரத்தை என்னும் பெயரினால் அழைக்கத்தக்கவை ஆகும்.

19-ஆம் ஸூத்திரத்திலிருந்து 24-ஆம் ஸூத்திரம் வரையிலும் இவை விவரிக்கப்படுகின்றன.

**शमस्तावत्—श्रवणादिव्यतिरिक्तविषयेभ्यो मनसो निग्रहः ॥**

சமஸ்தாவத் ச்ரவணாதிவ்யதிரிக்த விஷயேப்யோ மனஸோ நிக்ரஹ ॥ 19 ॥

சம என்றால், சிரவணம் போன்றவற்றைத் தவிர, மற்ற விஷயங்களிலிருந்து மனத்தைக் கட்டுப்படுத்து வது ஆகும்.

நல்ல பசி இருக்கும்பொழுது உணவைத் தவிர மற்ற எதுவுமே சுவையாக இருப்பது இல்லை. உணவை உண்பதற்குத் தாமதமானால் பொறுத்துக் கொள்வதற்கு இயலுவதில்லை. அதைப்போன்றே, விவேகம்-வைராக்கியம் போன்றவற்றின் பயனாக, தத்துவஞானத்தை மனம் விரும்பும் பொழுது அது பூமாலை, சந்தனம், பெண் போன்ற விஷயங்களில் ஆர்வத்தைக் களைந்து கொண்டு, சிரவணம், மனனம், நிதித்யாஸனம் போன்ற சாதனங்களில் ஆர்வம் கொண் டிருக்கும். இருப்பினும் சில சமயங்களில், பூர்வ ஸம்ஸ் காரங்களின் பயனாக சிரவணம் போன்றவற்றை விட்டு விட்டு, விஷய போகங்களை நாடிச் செல்வதற்கு முயற்சி செய்யும். இத்தகைய சமயத்தில் அதைத் தடுத்து நிறுத் தும் சிறந்த மனோதர்மமாக 'சம' (शम) விளங்குகிறது.

**दमः—बाह्येन्द्रियाणां तद्व्यतिरिक्तविषयेभ्यो निवर्तनम् ॥**

தம: பாஹ்யேந்த்ரியாணாம் தத்வ்யதிரிக்த விஷயே-ப்யோ நிவர்தனம் ॥ 20 ॥

'தம' என்றால், புலன்களை (சிரவணம் போன்ற வற்றைத் தவிர) அதற்கு வேறான விஷயங்களிலிருந்து தடுத்து நிறுத்திக் கட்டுப்படுத்துவது ஆகும்.

புலன்களை உள்ளே உள்ள புலன், வெளியே உள்ள புலன் என்று இருவகையாகப் பிரிக்கலாம்.

மனம்தான் உள்ளே உள்ள புலன் ஆகும். வெளியிலே உள்ள புலன்கள் ஞானேந்திரியங்கள் மற்றும் கர்மேந் திரியங்கள் என்று இருவகைப்படுத்தப்பட்டுள்ளன. கண், காது, மூக்கு, நாக்கு மற்றும் தோல் என்னும் இவை ஞானேந்திரியங்கள் எனப்படுகின்றன. ஏனெ னில் நமக்கு வெளியுலகைக் குறித்த ஞானமானது இவைகளின் மூலம்தான் கிடைக்கிறது. கை, கால், நாக்கு, ஜனனேந்திரியம் மற்றும் குதம் என்னும் இவை கர்மேந்திரியங்கள் எனப்படுகின்றன. வாக்கு (நாக்கு), பாணி (கை), பாதம் (கால்), பாயு (மலத்துவாரம்), உப ஸ்தம் (குறி), சிரவணம் போன்றவற்றிற்கு உறுதுணை யாக உள்ள சொற்கள் போன்றவற்றைத் தவிர, விஷய சுக போகங்களின் மூலம் உலகியலிற்கு இழுக்கும் விஷயங்களின் பக்கமாகவே செல்லும் இந்தப் புலன் களின் செயல்பாடுகளைத் தடுத்து நிறுத்தும் மனோ தர்மம்தான் 'தம' என்பது ஆகும்.

**निवर्तितानामेतेषां तद्व्यतिरिक्तविषयेभ्य उपरमणमुपरतिरथवा विहितानां कर्मणां विधिना परित्यागः ॥ २१ ॥**

நிவர்த்திதானாம் ஏதேஷாம் தத்வ்யதிரிக்த விஷயேப்ய: உபரமணம் உபரதி: அதவா விஹிதானாம் கர்மணாம் விதினா பரித்யாக: ॥ 21 ॥

(வெளிப்புற விஷயங்களிலிருந்து) தடுத்து நிறுத்தப்பட்ட இந்தப் புலன்கள், அந்த சிரவணம் போன்றவற்றிற்கு வேறான விஷயங்களிலிருந்து விலகிச் செல்வதுதான் 'உபரதி' எனப்படும். அல்லது

ஸந்தியாவந்தனம் போன்ற செய்யத்தக்க முறையான செயல்களைத் தியாகம் செய்வது உபரதி எனப்படும்.

இங்கு 'உபரதி' என்னும் சொல்லிற்கு இரு பொருட்கள் கொடுக்கப்பட்டுள்ளன. வெளிப்புற விஷயங்களிலிருந்து தடுத்து நிறுத்தப்பட்ட புலன்கள், தம்முடைய ஸம்ஸ்காரத்தின் பலனினால் மீண்டும் மீண்டும் அவைகளின் பக்கம் செல்வதற்கு முயன்று கொண்டிருக்கும் இவற்றை 'தம'த்தின் மூலமாக முழு வதுமாகத் தடுத்து நிறுத்திய பிறகு, அவை தம்முடைய செயல்பாடுகளை நிறுத்திக் கொண்டு, காலப் போக்கில் அமைதியடைகின்றன. இது 'உபரதி' என்னும் சொல் லிற்குக் கூறப்பட்டுள்ள முதல் பொருள் ஆகும். இதன் படி உபரதி என்பது சம (शम), தமம் போன்றவற்றின் பரிபக்குவமான நிலை மட்டும் என்பது புலனாகிறது. இதனை பகவத்பாதர் தம்முடைய 'விவேக சூடாமணி' என்னும் நூலில், 'பாஹ்யானாலம்பனம் வ்ருத்தே-ரே ஷோபரதிருத்தமா ।', 'மனத்தின் செயல்பாடு, வெளியிலுள்ள எந்தப் பொருளையும் சாராமல் இருப்பதுதான் மிக உயர்ந்த உபரதியாகும்' என்று விவரித்துள்ளார் (வி. சூ. 23).

ஆனால், 'சாந்தோ தாந்த உபரத:' என்னும் பிருஹதாரண்யக உபநிஷதத்தில் உள்ள வாக்கியத்திற்கு (4.4.23) விளக்கவுரை எழுதும் பொழுது 'உபரத' என்னும் சொல்லிற்கு 'ஸர்வைஷணாவினிர்முக்த:' சன்னியாஸி என்று கூறியுள்ளார். இதை ஆதாரமாக வைத்துக்கொண்டு ஒரு சிலர் 'உபரதி' என்னும் சொல் லிற்கு சன்னியாஸம் என்று பொருள் கூறுகின்றனர்.

ஞானத்தின் மூலமே மோக்ஷம் என்பதை எல்லா அத்வைதிகளும் ஏற்றுக்கொண்டிருந்தாலும், சிரவணம் போன்ற சாதனத்தைக் கைக்கொள்வதற்கு முன்பு கர்மங்களின் மீது உள்ள பற்றைத் துறக்க வேண்டுமா, வேண்டாமா என்பதில் வேறுபட்ட கருத்துக்கள் உள்ளன.

'பாமதி' என்னும் நூலை எழுதியுள்ள வாசஸ்பதி மிஸ்ரரின் கொள்கையை, தர்மராஜ-அத்வரீந்த்ரரின் 'வேதாந்த பரிபாஷை' என்னும் நூலில் வருமாறு சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

'அபரே து உபரம சப்தஸ்ய ஸன்யாஸ வாசகத்வ அபாவாத் விக்ஷேப அபாவமாத்ரஸ்ய க்ருஹஸ்தேஷ்டபி ஸம்பவாத் ஜனகாதேரபி ப்ரஹ்ம விசாரஸ்ய ச்ரூயமாணத்வாத் ஸர்வாஸ்ரம சாதாரணம் ச்ரவணாதி விதானம் இத்யாஹு: ।' இதிலிருந்து 'உபரம' என்னும் சொல்லானது, சன்னியாஸத்தை மட்டுமே குறிப்பிடவில்லை என்பதால் இல்லறத்தாரிடமும் ஏற்படலாம் என்பதால், ஜனகர் போன்ற இல்லறத்தை மேற்கொண்டவர்களின் விஷயத்திலும் அவர் பிரம்ம விசாரத்தை மேற்கொண்டனர் என்பதை சுருதியில் விவரிப்பதால், சிரவணம் போன்ற விதியானது எல்லாப் பிரிவைச் சேர்ந்தவர்களுக்கும் பொதுவானது என்று கூறுகிறார் (8).

இதற்கு எதிராக, 'உபரதி' என்றால், எல்லாக் கர்மங்களையும் துறப்பதுதான் என்பதை, இந்த வேதாந்த ஸாரத்தின், 'வித்வன்மனோரஞ்சனீ' என்னும் விளக்கவுரையில் இராமதீர்த்தர் உறுதி செய்துள்ளார். அவருடைய வாதமுறையின்படி ஸ்ருதி, ஸ்ம்ருதி,

நியாயம் என்னும் இம்மூன்றும் தங்கள் தங்கள் கருத்துக் களையே உறுதி செய்கின்றன.

1. 'ஸ்ருதி: ந கர்மணா ந ப்ரஜயா தனேன த்யாகேனைகே அம்ருதத்வமானசு: ।', 'கர்மத்தின் மூலமோ ஸந்தானத்தின் மூலமோ, பொருளினாலோ அல்லாமல் (வெறும்) தியாகத்தின் மூலமே சிலர் முக்தியை அடைந்தனர்' (ம. நா. உ. 10.5).

'ஏதமேவ ப்ரவ்ராஜினோ லோகமிச்சந்த: ப்ரவ்ர ஜந்தி ।', 'ஆத்ம வாழ்க்கையையே தங்களுடைய உலக னைத்துமாய்க் கொண்ட வைராக்கிய சீலர்கள் வீட்டை விட்டுக் கிளம்பி விடுகின்றனர்' (பிரு. உ. 4.4.22).

2. 'ஸ்ம்ருதி: நைஷ்கர்ம்ய சித்திம் பரமாம் ஸன்யாஸேநாதிகச்சதி ।', 'கர்மங்கள் அனைத்தையும், துறந்து, சன்னியாஸத்தால் ''நைஷ்கர்ம்யசித்தி'' என் னும் உயர்நிலையை அடைகிறான்' (கீதை 18.49).

'ப்ரவ்ருத்தி லக்ஷணோ யோகோ ஞானம் ஸந்ந் யாஸ லக்ஷணம், தஸ்மாஞ்ஞானம் புரஸம்ஸ்க்ருத்ய ஸந்ந்யஸேதி ஹபுத்திமான் ।।', 'யோகமானது சுறு சுறுப்பாகச் செயலாற்றுதல் என்னும் இலட்சணத் தையும், ஞானமானது அதிலிருந்து விடுபடுதல் என் னும் இலட்சணத்தையும் உடையது ஆகும். எனவே புத்தியை உடையவன், ஞானத்தை ஆதாரமாகக் கொண்டு இவ்வுலகத்தில் சன்னியாஸத்தை மேற் கொள்ள வேண்டும்' (ம. பா. அச்வ. 43-26).

3. நியாயம்:—தான் விரும்பும் சித்தியை அடைவதற்கு எந்த மனிதனும், எது உறுதுணையாக

உள்ளதோ மற்றும் எது எதிரானது அல்லவோ அதை ஏற்றுக்கொள்கிறான். மோக்ஷத்தை அடைய விரும்பு பவன் பிரம்மத்தை (பரம்பொருளை) ஆராய்ந்து அறி யும் முறையைக் கைக்கொள்கிறான். பிரம்மன் ஆத்மா வைக் குறித்த ஞானத்தைப் பெறுவதற்கு வேதாந்த சிந்தனையானது முக்கியமான சாதனையாக விளங்கு கிறது. இந்த சாதனையில் கர்மங்களுக்கு இடமில்லை. ஏனெனில் கர்மத்தை விட்டுவிட்டால், வேதாந்தம் குறித்து சிந்திப்பதில் எந்தத் தடையும் இல்லை. ஆனால் கர்மங்களைச் செய்து கொண்டிருக்கும் பொழுது மனம் அதிலேயே சிதறுண்டு இருப்பதால் வேதாந்தத்தின் பொருளை சரியாக கிரகித்துக் கொள்ளவோ (கிரகித்துக் கொள்ளாமல் இருப்பதால்) அதைக் குறித்து சிந்திப்ப தற்கோ இயலாது. இதனால் ஆத்ம ஞானத்தைப் பெற விரும்புபவன் கர்மத்தைத் தியாகம் செய்ய வேண்டும்.

கர்மத்தியாகத்தை சோம்பலினாலோ, கர்மம் செய் வது கஷ்டமானது என்றோ செய்யக் கூடாது. அதனால் தான் மூலத்தில் 'விதினா' என்னும் சொல்லானது பயன்படுத்தப்பட்டுள்ளது. ஸந்நியாஸத்தைக் குறித்துச் சரியாக கிரகித்துக் கொள்வதற்குத் தக்க விதிகளை ஜாபால உபநிஷதம் போன்ற உபநிஷதங்களும், மனுஸ்ம்ருதி போன்ற ஸம்ருதிகளும் விவரித்துள்ளன.

**तितिक्षा—शीतोष्णादिद्वन्द्वसहिष्णुता ॥ २२ ॥**

திதிக்ஷா சீதோஷ்ணா தித்வந்த்வஸஹிஷ்ணுதா ॥ 22 ॥

தண்மை, வெம்மை போன்ற இருமைகளை (இரு உணர்வுகளைப்) பொறுத்துக் கொள்வதுதான் திதிக்ஷை ஆகும்.

'போன்ற' என்னும் சொல்லால், மானம்-அவ மானம், இலாபம்-நஷ்டம், சோகம்-மகிழ்ச்சி போன்ற இருமைகளையும் கிரகித்துக் கொள்ள வேண்டும். உடல் இருக்கும் வரையிலும் இவை தவிர்க்க வியலாதவையாக இருப்பதால், அவற்றால் மனமானது எழுச்சியுற்றால் வேதாந்த சாதனையை மேற்கொள்ள வியலாது என்ப தால், சைதன்ய வடிவினனான ஆத்மாவே நான் என் றும் எண்ணத்தினால் மனத்தை மேம்படுத்தி இவற்றைப் பொறுத்துக் கொள்வதற்கு முயற்சி செய்ய வேண்டும்.

ஸ்ரீசங்கர பகவத் பாதர் 'திதிக்ஷா' என்னும் சொல்லைத் தம்முடைய 'விவேக சூடாமணி' என்னும் நூலில் வருமாறு அற்புதமாக விவரித்துள்ளார்.

'ஸஹனம் ஸர்வதுக்கானா-மப்ரதீகாரபூர்வகம் ।
சிந்தாவிலாபரஹிதம் ஸா திதிக்ஷா நிகத்யதே ॥'

'பலவகையான துன்பங்கள் ஏற்படும்பொழுது, அவற்றைப் போக்கும் வழியைத் தேடாமலும், கவலைப்படாமலும் புலம்பாமலும் பொறுத்துக் கொள்ளுவதே திதிக்ஷா என்று கூறப்படுகிறது.'

**निगृहीतस्य मनसः श्रवणादौ तदनुगुणविषये च समाधिः समाधानम् ॥ २३ ॥**

நிக்ருஹீதஸ்ய மனஸ: சிரவணாதௌ ததனுகுண விஷயே ச ஸமாதி: ஸமாதானம் ॥ 23 ॥

இவ்விதம் கட்டுப்படுத்தப்பட்ட மனத்தைச் சிரவணம் போன்றவற்றிலும், அதற்கு உறுதுணையாக உள்ள மற்ற விஷயங்களிலும்[1] ஒருமுகப்படுத்துவது தான் 'ஸமாதானம்' ஆகும்.

1. பகவத் கீதையில் 16 ஆம் அத்தியாயத்தில் ஒன்று முதல் மூன்று சுலோகங்களில் கூறப்பட்டுள்ள 'தைவீ ஸம்பத்' குணங்களையும், குருவிற்குத் தொண்டாற்றுதல், வேதாந்த நூல்களைச் சேகரித்துப் படித்தல் போன்றவற்றையும் இங்கு கிரகித்துக் கொள்ள வேண்டும்.

गरूपदिष्टवेदान्तवाक्येषु विश्वासः—श्रद्धा ॥ २४ ॥

குரூபதிஷ்ட வேதாந்த வாக்யேஷு விச்வாஸ: சிரத்தா ॥

இங்கு சிரத்தை என்றால், குரு அவர்கள் உபதேசம் செய்யும் வேதாந்தப் பாடங்களில்[1] நம்பிக்கை வைப்பதாகும்.[2]

1. அதாவது அவற்றின் பொருள்களில் என்று பொருள் கொள்ள வேண்டும். இங்கு உபநிஷதங்களுக்குப் பொருத்தமானதாக உள்ள ஸ்ம்ருதி, இதிகாஸம், புராணங்கள் போன்றவற்றையும் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

2. 'இது இப்படியிருக்க வேண்டும். அப்படி இல்லை' என்னும் சந்தேகமற்ற, உறுதியான நம்பிக்கை வேண்டும். சிரத்தையின் அவசியத்தைக் குறித்து எல்லா ஆன்மீக சாத்திரங்களிலும், நூல்களிலும் அழுத்தமாகக் கூறப்பட்டுள்ளது. கீதையின் 17-ஆம் அத்தியாயத்தில் மூன்று வகையான சிரத்தையைக் குறித்து விவரமாக விவரிக்கப்பட்டுள்ளது.

**मुमुक्षुत्वं—मोक्षेच्छा ॥ २५ ॥**

முமுக்ஷுத்வம் மோக்ஷேச்சா ॥ 25 ॥

மோக்ஷத்தை விரும்புவதுதான் முமுக்ஷுத்வம் ஆகும் (விடுதலையைப் பெற விரும்புவது).

இந்த உடல், புலன்கள், மனம் போன்றவற்றையே 'நாம்' என்று தவறுதலாக எண்ணிக் கொண்டு இருப்பதால் நமக்குப் பிறப்பு, வியாதி, மூப்பு, மரணம் போன்ற வடிவங்களில் பிணைப்பு ஏற்படுகிறது. இதற்குக் காரணம் அறியாமையாகும். ஞானத்தினால் அஞ்ஞானம் அகலும்பொழுது நாம் சச்சிதானந்த ஆத்மா, நாமே பிரம்மன் என்று அனுபவத்தில் நிலைத்து நிற்கிறோம். அப்பொழுது எல்லாப் பிணைப்புக்களும் அகன்று விடுகின்றன. இதுதான் மோக்ஷம் ஆகும். மோக்ஷத்திற்காக ஆசைப்படுவது ஆசையில்லை. ஏனெனில் இந்த 'ஆசை'யானது நாம் ஆத்மஞானம் அடைவதற்கு வழிவகுக்கிறது. மற்ற எல்லா ஆசைகளிலிருந்தும் நம்மை விடுவிக்கிறது.

**एवम्भूतः प्रमाताधिकारी 'शान्तो दान्त'**
**(बृह. उ. ४.४.२३) इत्यादिश्रुतेः । उक्तञ्च—**
**'प्रशान्तचित्ताय जितेन्द्रियाय च**
**प्रहीणदोषाय यथोक्तकारिणे ।**
**गुणान्वितायानुगताय सर्वदा**
**प्रदेयमेतत् सततं मुमुक्षवे ॥' इति**
**(उपदेशसाहस्री १६.७२) ॥ २६ ॥**

ஏவம்பூத: ப்ரமாதா அதிகாரீ 'சாந்தோ தாந்த:
(பிரு. உ. 4.4.23) இத்யாதி ச்ருதே: உக்தஞ்ச—
'ப்ரசாந்த சித்தாய ஜிதேந்திரியாய ச
ப்ரஹீணதோஷாய யதோக்த காரிணே ।
குணான் விதாயானுகதாய ஸர்வதா
ப்ரதேயமேதத் ஸததம் முமுக்ஷவே ॥' இதி
(உ. ஸா. 16-72) ॥ 26 ॥

*இத்தகைய சாதகரே 'அதிகாரி' ஆவார்.*

*'அமைதியுடையவனாகவும், அடக்கமுடையவனாகவும்' (பிரு. உ. 4.4.23) என்பன போன்ற சுருதிகளால் இவ்விதம் அறிய வியலுகிறது. மற்றும் கீழ்வருமாறும் கூறப்பட்டிருக்கிறது.*

*'அமைதியான மனத்தை உடையவனும்,[1] புலன்களை அடக்கியவனும், குற்றங்கள் அற்றவனும்,[2] கூறுவதைப் போன்றே நடப்பவனும்,[3] குணங்கள் நிறைந்தவனும்,[4] எப்பொழுதும் குருவை அனுசரித்து நடப்பவனுமாகிய முமுக்ஷுவிற்கு இது எப்பொழுதும் கொடுக்கத்தக்கது ஆகும்[5] (உ. ஸா. 16.72).*

*1. பிருஹதாரண்யக உபநிஷதம், காண்வசாகை மாந்யந்தீன சாகை என்னும் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. காண்வசாகையில் 'சாந்தோ தாந்த உபரத ஸ்திதிக்ஷு: ஸமாஹிதோ பூத்வா ஆத்மன்யே வாத்மானம் பச்யதி', 'அமைதியுடையவனாகவும், அடக்கமுடையவனாகவும், ஆசைகளை விட்டவனாகவும், பொறுமை உடையவனாகவும் ஆத்மநிஷ்டனாகவும் ஆகித் தன்னிடத்திலேயே ஆத்மாவைக் காண்கிறான்' என்று*

கூறப்பட்டுள்ளது. மாந்யந்தீன சாகையில் 'ஸமாஹித:' என்பதற்குப் பதிலாக 'சிரத்தாவித்த:' என்று உள்ளது. குணோபஸம்ஹார நியாயத்தினால் இந்த இரு பாடமுறைகளுக்கும் ஏற்றாற்போல் சமம், தமம் போன்ற ஆறு குணங்கள் விவரிக்கப்பட்டுள்ளன. ஒரே விஷயத்தைக் குறித்து, வேறு வேறு நூல்களில் விவரங்களைக் குறித்த வேறுபாடு இருப்பினும் அந்த அனைத்தையும் கிரகித்துக் கொள்வதற்கு இயலும். ஒரு பாடமுறையில் இல்லாததை மற்றொரு பாடமுறையின் மூலம் சேர்த்துக் கொள்ளவியலும் என்பதுதான் 'குணோபஸம்ஹார நியாயம்' ஆகும். ஸ்ரீபகவத்பாதர் அவர்கள் அவருடைய பிரம்ம சூத்திர விளக்கவுரையில் ஐந்து இடங்களில் குணோபஸம்ஹார நியாயத்தைக் குறிப்பிட்டுள்ளார் (3.3.7, 19, 20.58).

2. விருப்பு-வெறுப்பு போன்ற குறைகளையும், காமம், குரோதம் போன்ற அறுபகைகளையும், விட்டொழித்தவன் மிகத் தூய்மையான மனத்தை உடையவன் ஆவான்.

3. சாத்திரங்களில் கூறியுள்ளபடி ஸ்வதர்மத்தைப் பின்பற்றுபவன்.

4. ஞானம், பணிவு, எளிமை போன்ற அல்லது விவேகம், வைராக்கியம் போன்ற இயல்புகளைப் பெற்றிருப்பவன்.

5. இத்தகைய குணங்களைப் பெற்றுள்ள சீடன் கிடைத்தால், அவனுக்கு ஆத்மஞானத்தை உபதேசம் செய்ய வேண்டும் என்பது குருவிற்கும் பொருந்தும் நியமம் ஆகும்.

'ஆசார்ய ஸ்யாபி அயம் நியமோ யன்ன்யாயப்ராப்த சச்சிஷ்ய நிஸ்தாரணம் அவித்யா மஹோததே: ।', 'நியமங்களுக்குப் பொருத்தமானதாக, தன்னிடம் வந்துள்ள நல்ல, தகுந்த சீடனை, அஞ்ஞானக் கடலைக் கடக்க வைப்பது

என்பது ஆச்சாரியருக்கும் நியமமாக உள்ளது' என்று ஸ்ரீசங்கரர் முண்டக உபநிஷதத்திற்கு எழுதியுள்ள விளக்க வுரையில் கூறியுள்ளார் *(1.2.13.)*.

மஹாபாரதத்திலுள்ள மோக்ஷதர்மபர்வத்தில் *310.35.38*-ம் பகுதியில் கூறப்பட்டுள்ள குணங்கள் அனைத்தையும் சங்கராச்சாரியர் தம்முடைய இந்த சுலோகத்தில் ஒருங் கிணைத்துள்ளார்.

## விஷயம்

**विषयः—जीवब्रह्मैक्यं शुद्धचैतन्यं प्रमेयं तत्र एव वेदान्तानां तात्पर्यात् ॥ २७ ॥**

விஷய:—ஜீவப்ரஹ்மைக்யம் சுத்த சைதன்யம் ப்ரமேயம் தத்ர ஏவ வேதாந்தானாம் தாத்பர்யாத் ॥ 27 ॥

தூய்மையான சைதன்யமாகவும் மற்றும் ஆராய்ந்து அளந்து அறியப்படும் வஸ்துவாகவும் விளங்கும் ஜீவனும் பிரம்மமும் ஒன்று என்பதுதான் 'விஷயம்' ஆகும். ஏனெனில் வேதாந்த வாக்கியங்களுக்கு அதுதான் கருப்பொருளாக விளங்குகிறது.

'மா' என்றால் அளத்தல் என்பது பொருள் ஆகும். ஒரு பொருளை அளப்பது என்றால் அதை அறிவதற்கு உறுதுணையாக இருக்கும் பொருளுக்கு மான அல்லது பிரமாணம் என்று பெயர். பிரத்யக்ஷம், அனுமானம் மற்றும் ஆகமம் (சுருதி) என்னும் இவை ஞானம் பெறுவதற்கு உதவத்தக்க முக்கியமான பிரமாணங்கள் ஆகும். இவைகளால் அறியப்படும் விஷயம்தான் 'பிரமேயம்' ஆகும். அறிபவனே பிரமாத்யன் ஆவான்.

வேதாந்தம் என்னும் சொல்லிற்கு, உபநிஷதங்கள், பகவத்கீதை, பிரம்ம ஸூத்திரங்கள் மற்றும் இவற்றை அனுசரித்து எழுதப்பட்டுள்ள ஸ்ம்ருதி, இதிகாசம், புராணம் என்னும் இவ்வனைத்தையும் கிரகித்துக் கொள்ள வேண்டும் என்று முன்பே கூறப்பட்டுள்ளது. இதுதான் வேதாந்த சாத்திரம் ஆகும். இந்த சாத்திரம் முக்கியமாக, நம்முடைய உண்மையான ஸ்வரூப மாக உள்ள ஆத்மாவைக் குறித்தும், இவ்வுலகத்தின் படைப்பு, இருப்பு, அழிவு என்பனவற்றிற்கு ஆதார மாக உள்ள பிரம்மனைக் குறித்தும் அவ்விருவரின் ஐக்கியத்தையும் விவரிக்கிறது (பிர. ஸூ. 1.1.4 பார்க்க வும்). ஆத்மா-பிரம்மன் மற்றும் அவ்விருவரின் ஐக்கியம் இதுதான் வேதாந்த சாத்திரத்தின் 'பிரமேய' மாக உள்ளது. இந்தப் பிரமேயம்தான் வேதாந்தத்தின் விஷயமாகும் (பிரமேயம்-நியாயத்தால் அளந்து அறியப்படும் பொருள்).

உலக வாழ்க்கையில் விழுந்து, உழன்று கொண்டு இருக்கும் ஜீவனுக்கும், இவ்வுலகத்தைப் படைத்த வனும் மற்றும் அதை மீறியும் உள்ளவனுமான பரபிரம்மத்திற்கும் ஒற்றுமையை எப்படிக் கூறவிய லும்? அஞ்ஞானம் நிறைந்துள்ள காரணத்தால், ஆத்மா வின் மீதும், மாயையால் பிரம்மன் மீதும் கற்பித்துள்ள உபாதிகளையும் புறக்கணித்துப் பார்க்கும் பொழுது, உண்மையான அந்த இரண்டும் தூய்மையான சைதன்னி யம்தான் என்பதை உணர்ந்துகொள்கிறோம். சைதன்யம் என்னும் இந்தக் கண்ணோட்டத்துடன் காணும் பொழுது அந்த இரண்டும் ஒரு வஸ்துதான் என்னும்

ஞானம் ஏற்படுகிறது. ஜீவ-பிரம்ம ஐக்கியம் (ஒற்றுமை) என்றால் இதுதானே தவிர, நீர், பால் போன்றவற்றைக் கலக்கும் பொழுது அவைகளில் ஏற்படும் 'ஐக்கியம்' அல்ல. இந்த விஷயமானது 148 முதல் 169 வரை யிலுள்ள சூத்திரங்களில் மிகவும் விவரமாக விவாதிக்கப்பட்டுள்ளது.

தூய்மையான சைதன்னியமாக உள்ள ஆத்மா, பிரம்மமானது, எந்தப் பிரமாணத்தினாலும் அறியவிய லாத மற்றும் எந்தப் பிரமாணத்திற்கும் எட்டாத வஸ்து வாக இருப்பதால் அதைப் 'ப்ரமேயம்' என்று அழைப் பதே தவறு ஆகும். ஆனால் 'முன்பு அறியாமல் இருந்த, ஸ்தூலமாக அறிந்துள்ள, இப்பொழுது நன்றாக அறிய வேண்டிய வஸ்து' என்னும் நடைமுறைக் கண் ணோட்டத்துடன் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஏனெ னில் பிரமாணத்தினால் அறியவியலாத வஸ்துவைப் பெற வேண்டும் என்னும் விருப்பமே ஏற்படுவதில்லை.

## ஸம்பந்தம்

**सम्बन्धस्तु—तदैक्यप्रमेयस्य तत्प्रतिपादकोपनिष-त्प्रमाणस्य च बोध्यबोधकभावः ॥ २८ ॥**

ஸம்பந்தஸ்து—ததைக்யப்ரமேயஸ்ய தத்ப்ரதி-பாதகோப நிஷத ப்ரமாணஸ்ய ச போத்ய போதக பாவ: ॥ 28 ॥

அந்த ஜீவ-பிரம்மரின் ஒருமையை நியாய அளவை யால் அளந்து அறியப்பட உள்ள பிரமேயத்திற்கும் அதை விவரிக்கும் உபநிஷதம் என்னும் பிரமாணத் திற்கும் (சாதனத்திற்கு) உள்ள போத்ய போதக பாவம்

தான் 'ஸம்பந்த'மாகும் (தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம், அதை உணர்த்தும் சாதனம்).

நான்கு அனுபந்தங்களில் மூன்றாவதாக உள்ள 'ஸம்பந்தம்' என்பது குறித்து இங்கு விவரிக்கப்பட்டுள்ளது. சம்பந்தம் (தொடர்பு) என்றவுடனேயே எதற்கும் எதற்கும் உள்ள தொடர்பு? எத்தகைய தொடர்பு? என்னும் கேள்விகள் இயல்பாகவே எழுகின்றன. வேதாந்த சாத்திரத்திற்கும் அது விவரிக்கத் தொடங்கியுள்ள விஷயத்திற்கும் உள்ள தொடர்புதான் இங்கு விவரிக்கப்பட்டுள்ள 'ஸம்பந்தம்' ஆகும். இது 'போத்ய-போதக பாவம் என்று கூறப்பட்டுள்ளது. தெரியப்படுத்துவது போதக எனப்படும். அறியப்படுவது போத்யமாகும். உபநிஷத்துக்களின் மூலம் பிரம்ம-ஆத்ம ஐக்கியமானது அறியப்படுவதால், இம்முறையில் தொடர்பை விவரிக்கின்றது.

## பிரயோஜனம்

**प्रयोजनं तु—तदैक्यप्रमेयगताज्ञाननिवृत्तिः स्वस्वरूपानन्दावाप्तिश्च 'तरति शोकम् आत्मवित्' (छा. उ. ७.१.३) इत्यादिश्रुतेः 'ब्रह्मविद् ब्रह्मैव भवति' (मु. उ. ३.२.९) इत्यादिश्रुतेश्च ॥ २९ ॥**

ப்ரயோஜனம் து ததைக்ய ப்ரமேயகத அஞ்ஞான நிவ்ருத்தி: ஸ்வஸ்வரூப ஆனந்த ஆவாப்திச்ச 'தரதி சோகம் ஆத்மவித்' (சாந். உ. 7.1.3) இத்யாதிச்ருதே: 'ப்ரஹ்மவித் ப்ரஹ்மைவ பவதி' (முண். உ. 3.2.9) இத்யாதி ச்ருதேச்ச ॥ 29 ॥

*பிரயோஜனம் என்றால் அந்த ஜீவ பிரம்மரின் ஐக்கியம் என்னும் பிரமேயத்தைக் குறித்து உள்ள அறி யாமையின் அழிவும் மற்றும் உண்மையான ஸ்வரூப மான ஆனந்தத்தை அடைவதும் ஆகும். 'ஆத்மாவை அறிந்தவன் சோகத்தைத் தாண்டுகிறான்' (சாந். உ. 7.1.3). இது போன்ற சுருதியின் மூலமும் மற்றும் 'பிரம்மஞானியானவன் பிரம்மமாகவே ஆகிறான்' (முண். உ. 3.2.9) என்பன போன்ற சுருதியின் மூலமும் இவ்விதம் அறியப்படுகிறது.*

*உண்மையான இயல்பில் சைதன்னியமாக உள்ள ஜீவ-பிரம்மரிடையில் ஒற்றுமை உள்ளது என்பதுதான் வேதாந்தத்தின் 'பிரமேயம்' அல்லது விஷயம் என்பது முன்பே குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த ஐக்கிய அனு பவம் நமக்கு ஏற்படாமல் இருப்பதற்கு அதைக் குறித்து உள்ள அறியாமைதான் காரணமாகும். வேதாந்த அத்யயனத்தால், நான்கு விதமான ஸாதனங்களால் மற்றும் சிரவணம் போன்றவற்றின் மூலம் இந்த அறி யாமையானது அகலும் பொழுது, நம்முடைய உண்மை யான இயல்பாக உள்ள ஆனந்தமானது தானாகவே வெளிப்படுகிறது. இது இதற்கு முன்பும் இருந்தாலும் அப்பொழுது உணரப்படாமல் இப்பொழுது உணரப் படுவதால் புதியதாகப் பெற்றதைப் போன்றே தோன்று கிறது. அதனால்தான் 'அவாப்தி' என்னும் சொல்லானது மூலத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது.*

*சோகம் என்றால் சோகத்திற்கு மூலமாக உள்ள வாழ்க்கையாகும். ஆத்மாவை உணர்ந்த ஞானிக்கு, அந்த ஆத்மஞானத்தினால் தான் சைதன்னியம் என்னும்*

அனுபவத்தைப் பெற்றவுடனேயே, உடல் போன்ற வற்றின் மீது இருந்த ஐக்கியபாவமானது விலகி விடு கிறது. அத்துடன் அவற்றால் இதுவரையிலும் அனு பவித்த சோகமும் அகன்று விடுகிறது. சாந்தோக்ய உப நிஷதத்தில் வரும் ஒரு வாக்கியம் இதையே விவரிக் கிறது. இந்த வாக்கியத்தைச் சீடரான நாரதர், குருவான ஸனத்குமாரரைக் குறித்துக் கூறியதாகும். முழுமை யான சுருதி வாக்கியமானது வருமாறு உள்ளது.

'ஸோऽஹம் பகவோ மந்த்ரவி தேவாஸ்மி
நாத்மவித்ச்ச்ருதம் ஹ்யேவ மே பகவத் த்ருசேப்ய தரதி
சோகமாத்ம வித் இதி ஸோऽஹம் பகவ: சோசாமி தம் மா
பகவன் சோகஸ்ய பாரம் தாரயது இதி ॥' *(7.1.3)*

'ஐயனே, நான் மந்திரத்தை (அதாவது கர்மத்தை) மட்டும் அறிந்திருக்கிறேனே தவிர ஆத்மாவை அறிய வில்லை. தங்களைப் போன்றவர்களிடமிருந்து, ஆத்மாவை அறிந்தவனே சோகத்தைக் கடப்பான் என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். நான் சோகத்திற்கு உட் பட்டிருக்கிறேன். அத்தகைய என்னைத் தாங்கள் சோகத் தைத் தாண்டும்படிச் செய்விக்க வேண்டும்.'

ஆத்மானுபவம் ஏற்படும் வரையிலும் சோக மானது இருக்கும். ஆத்மானுபவம் ஏற்பட்டவுடனேயே சோகம் அகல்கிறது என்பது இதனால் தெளிவு படுத்தப்பட்டிருக்கிறது.

ஆத்மாவை உணர்ந்து ஞானியானவன், சோகத் தைக் கடந்த ஏதோ ஒரு புதிய நிலையை அடைகிறான் என்னும் பிரமை ஏற்படாமல் இருக்க வேண்டும் என்பதற்காக முண்டக உபநிஷதத்தை உதாரணம்

காட்டியுள்ளேன். பிரம்மனை உணர்பவன் பிரம்மனாகவே ஆகிறான். புதியதான எந்த ஒரு நிலையையும் அடைவதில்லை. ஒரே விஷயத்தை உறுதி செய்வதற்கு இந்த இரு சுருதி வாக்கியங்களைத் தேர்ந்து எடுத்திருப்பதிலும் ஒரு பொருத்தம் உள்ளது. ஒன்றில் ஆத்மா என்னும் சொல்லும், மற்றொன்றில் பிரம்மன் என்னும் சொல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளது. அந்த இரண்டும் ஒன்றுதான் என்பதை இவ்வாறு குறிப்பிட்டுள்ளேன்.

## குருவின் அவசியம்

**अयमधिकारी जननमरणादिसम्सारानलसन्तप्तो दीप्तशिरा जलराशिमिवोपहारपाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठं गुरुमुपसृत्य तमनुसरति 'तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम्' (मु. उ. १.२.१२) इत्यादिश्रुतेः ॥ ३० ॥**

அயமதிகாரீ ஜனனமரணாதி ஸம்ஸாரானலஸந்தப்தோ தீப்தசிரா ஜலராசிமிவ உபஹாரபாணி: ச்ரோத்ரியம் ப்ரஹ்ம-நிஷ்டம் குருமுபஸ்ருத்ய தமனுஸரதி 'தத் விஜ்ஞானார்த்தம் ஸ குருமேவாபி கச்சேத் ஸமித்பாணி ச்ரோத்ரியம் ப்ரஹ்ம நிஷ்ட்டம் ॥ (முண். உ. 1.2.12) இத்யாதி ச்ருதே ॥

இத்தகைய[1] அதிகாரி, பிறப்பு, இறப்பு போன்ற[2] (வடிவத்திலுள்ள) வாழ்க்கை என்னும் நெருப்பினால் சுடப்பட்டு கொதிக்கும் தலையை உடையவன் குளத்தை நோக்கிச் செல்வதைப் போல காணிக்கையை[3] கையில் எடுத்துக்கொண்டு, வேத அத்யயனம்[4] செய்தவரும் பிரம்ம நிஷ்டனுமாக[5] விளங்கும் குருவைச்

சென்றடைந்து[6] அவரை வணங்குகிறான்.[7] 'அதை அறிந்து கொள்வதற்கு அவன் சமித்தைக்[8] கையில் பிடித்துக்கொண்டு, வேத அத்யயனம் செய்தவரும், பிரம்ம நிஷ்டனுமாக விளங்கும் குருவைச் சென்றடைய வேண்டும்' (முண். உ. 1.2.12) போன்ற சுருதியினால்[9] இவ்விதம் அறியப்படுகிறது.

1. நான்கு விதமான சாதனங்களை முழுமையாகப் பெற்றவன்.

2. காய்ச்சல், வியாதி, விருப்பு–வெறுப்பு போன்றவை.

3. அரசனையோ, கடவுளையோ, குருவையோ பார்க்க விரும்புவோர் வெறும் கையுடன் செல்லக் கூடாது.

'ரிக்த பாணிர்ன ஸேவேத ராஜானாம் தேவதாம் குரும்' என்று கூறுகின்றனர்.

4. வேதம், வேதாங்கம், வேதாந்தம் போன்றவற்றில் பண்டிதனாக இருப்பவன்; அல்லது அவற்றின் சாரத்தை அறிந்தவன் இத்துடன் (ஆகாமஹததத்வ) ஆசையற்று இருத்தல், (ஆவ்ருஜினத்வ) பாபமற்று இருத்தல் என்னும் மற்ற இரு குணங்களையும் பிருஹதாரண்யக உபநிஷதம் விவரித்துள்ளது (4.3.33). 'யச்ச ச்ரோத்ரியோऽவ்ருஜினோऽகாமஹத:'

5. பிரம்ம அனுபவத்தில் நிலைபெற்று இருப்பவன்.

6. ஆத்மாஞானத்தை குருவின்மூலம்தான் பெற வேண்டும் என்பதைக் குறிப்பிடுவதற்காக இவ்விதம் கூறப்பட்டுள்ளது. முண்டக உபநிஷதத்தில் உள்ள இந்த வாக்கியத்தை விவரிக்கும் பொழுது சங்கரபகவத் பாதர்,

'சாஸ்த்ரஜ்ஞோऽபி ஸ்வாதந்த்ரயேண ப்ரஹ்மஞானான்வேஷணம் ந குர்யாத்' ||, 'சாத்திரத்தை அறிந்தவன் கூட, சுதந்திரமாக பிரம்மஞானத்தை தேடுதல் கூடாது' என்று கூறியுள்ளார்.

7. *சீடனாகத் தொண்டு புரிகிறான். கீதை 4-34 பார்க்கவும்.*

8. *உபநிஷதங்களின் காலத்தில் ஞானத்தை விரும்பிய ரிஷிகள் அனைவரும் பொதுவாக வானப்ரஸ்தர்களாக இருந்தனர். வானப்ரஸ்தர்களுக்கும் அக்னி காரியங்கள் செய்யத் தக்கதாக இருந்ததால், அதற்குப் பயன்படும் ஸமித்தை எடுத்துக்கொண்டு செல்லும்படி ஆணை இடப்பட்டுள்ளது. இவ்விதம் கையில் ஸமித்துடன் வருபவன் ஞானத்தை விரும்புபவன் என்பது ஆசாரம், விதிமுறைகளைப் பின் பற்றியவர்களுக்குத் தெரிந்திருந்தது.*

9. *உதாரணம், 'ஆசார்யவான் புருஷோவேத ।', 'குருவைப் பெற்றுள்ள புருஷனே (தத்துவத்தை) அறிவான்' (சாந். உ. 6.14.2).*

**स गुरुः परमकृपयाध्यारोपापवादन्यायेनैनमुपदिशति**
**'तस्मै स विद्वानुपसन्नाय सम्यक्**
**प्रशान्तचित्ताय शमान्विताय ।**
**येनाक्षरं पुरुषं वेद सत्यं**
**प्रोवाच तां तत्त्वतो ब्रह्मविद्याम् ॥'**
**(मु. उ. १.२.१३) इत्यादिश्रुतेः ॥ ३१ ॥**

ஸ குரு: பரமக்ருபயா அத்யாரோப-அபவாத-
ந்யாயேன ஏனமுபதிசதி
தஸ்மை ஸ வித்வானுபஸன்னாய ஸம்யக்
ப்ரசாந்த சித்தாய சமான்விதாய ।
யேனாக்ஷரம் புருஷம் வேத ஸத்யம்
ப்ரோவாச தாம் தத்வதோ ப்ரஹ்ம வித்யாம் ॥
(முண். உ. 1.2.13) இத்யாதி ச்ருதே ॥

அந்த குருவானவர் அளவற்ற கருணையால்[1] அத்யாரோப-அபவாத-நியாயத்தின்[2] மூலமாக இந்தச் சீடனுக்கு உபதேசம் செய்கிறார். இவ்விதம் சரியான முறையில் வந்துள்ள, மன அமைதியையும், கட்டுப் பாடு மிகுந்த மனத்தையும் பெற்றுள்ள அவனுக்கு அந்த ஞானியானவர், எதனால் பரமார்த்த ஸ்வரூபம் உடைய அழிவற்ற புருஷனை உணர்ந்து கொள்வாரோ, அந்த பிரம்மஞானத்தை இயல்பாக, உண்மையாக உபதேசம் செய்ய வேண்டும் என்பது இத்தகைய சுருதியின்[3] மூலம் தெரியவருகிறது.

1. குருவானவர் கருணை செய்யாவிட்டால், ஞான உபதேசம் செய்வதோ அந்த உபதேசம் பயனளிப்பதோ இய லாமல் போய்விடும். அருள் நிறைந்த குருவின் இலட்ச ணத்தை ஸர்வஜ்ஞாத்மா முனிவர், தம்முடைய 'ஸம்க்ஷேப சரீரக' என்னும் நூலில் (43) பின் வருமாறு கூறியுள்ளார்.

'ஏததேவ ஹி தயாலுலக்ஷணம் யத்வினேயஜனபுத்தி வர்தனம்' ॥

'நல்வழிப்படுத்துவதற்கு உரிய, தகுதிவாய்ந்தவர்களின் ஞானத்தை அதிகப்படுத்துவதுதான் அருள் நிறைந்த குருவின் இலட்சணமாகும்.'

2. சாத்திரங்களின் மூலம் அல்லது அனுபவத்தினால் பெற்ற, எல்லாக்காலத்திற்கும் ஏற்ற ஒரு தத்துவத்தைச் சூத்திர வடிவில் தெரியப்படுத்தும் விவரங்களுக்கு 'நியாயம்' என்று பெயர். அத்யாரோபம் மற்றும் அபவாதம் என்னும் சொற்கள் 32 மற்றும் 137-ஆம் ஸூத்திரங்களில் விவரிக்கப் பட்டுள்ளன. ஒரு வஸ்துவில் இல்லாத குணத்தை, அதில் இருப்பதுபோல கற்பிப்பது அத்யாரோபமாகும். அதன்பிறகு அதனை மறுத்து, அதன் உண்மை இயல்பைத் தெரிவிப்பது அபவாதம் ஆகும். அறிவிற்கு எட்டாத நிர்குண, நிராகார

பிரம்மனை அறிய வைப்பதற்காக வேதாந்த சாத்திரத்தில் இந்த முறையானது அனுசரிக்கப்படுகின்றது. இந்த விஷயம் குறித்து புகழ்பெற்ற சுலோகம் ஒன்று உள்ளது.

'அத்யாரோபாபவாதாப்யாம் நிஷ்ப்ரபஞ்சம் ப்ரபஞ்சயதே ।
சிஷ்யாணாம் போதஸித்தயர்த்தம் தத்வஜ்ஞை கல்பித: க்ரம: ॥'

'உலகத்தை மீறி நிற்கும் தத்துவமானது, (பிரம்மன்) அத்யாரோபம், அபவாதம் போன்றவற்றின்மூலம் விவரிக்கப் படுகிறது. இது சீடர்களுக்கு அறிவுறுத்தும் பொருட்டு தத்துவஞானிகளால் கற்பிக்கப்பட்டுள்ள முறையாகும்.'

3. உதாரணம்:

'அதீஹி பகவ இதி ஹோபஸாத ஸனத்குமாரம்
நாரத-தம், ஹோவாச, யத் வேத்த தேன மோபஸீத
ததஸ்த ஊர்த்வம் வக்ஷ்யாமி இதி ஸஹோவாச ॥'

'நாரதர் ஸனத்குமாரரைச் சென்றடைந்து, "ஐயனே எனக்கு உபதேசம் செய்ய வேண்டும்" என்று கூறினார். ஸனத்குமாரர், "உமக்கு ஏற்கனவே என்ன தெரியுமோ அதைத் தெரிவியுங்கள். அதற்கு மேல் உமக்கு உபதேசிப் போம்" என்று கூறினார்' (சாந். உ. 7.1.1).

## அத்யாரோபம்—விளக்கம்

**असर्पभूतायां रज्जौ सर्पारोपवत् वस्तुनि अवस्त्वारोपः—अध्यारोपः ॥ ३२ ॥**

அஸர்பபூதாயாம் ரஜ்ஜௌ ஸர்பாரோபவத் வஸ்துனி அவஸ்த்வாரோப: அத்யாரோப: ॥ 32 ॥

கயிற்றின் மீது பாம்பைக்[1] கற்பிப்பதுபோல, வஸ்துவின்[2] மீது அவஸ்துவைக் கற்பிப்பது அத்யா

ரோபம் எனப்படும் (உள்ள வஸ்துவில் இல்லாத ஒன்றை ஏற்றுதல்).

அத்வைத வேதாந்தத்தில் 'அத்யாரோபம்' என்பது மிகவும் முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளது. இது 'அத்யாஸம்' என்றும் அழைக்கப்படுகிறது. ஸ்ரீசங்கரர் இதைத் தம்முடைய பிரம்மசூத்திர விளக்கவுரையில் தொடக்கத்தில் மிகவும் விவரமாக விவாதித்து உள்ளார்.

அங்கு 'அத்யாஸம்' என்பதை

'ஸ்ம்ருதிரூப: பரத்ர பூர்வ த்ருஷ்டாவபாஸ:', 'வேறு ஒரு இடத்தில் இதற்கு முன்பு கண்ட பொருளின் மேலீடான தோற்றத்தை நினைவு கூறத்தக்க வடிவம் உள்ளது' என்று விவரித்துள்ளார். உதாரணம்—வெள்ளி என்னும் வஸ்துவின்மீது (பரத்ர), முதலில் பார்த்த (பூர்வ த்ருஷ்ட), வெண்மை ஒளிரும் தன்மை போன்ற இயல்புகளை மனத்தில் நினைவு கூர்ந்து, இப்பொழுது அது முத்துச் சிப்பியின்மீது காணப்பட்டால் (அவ பாஸ:) அப்பொழுது முத்துச்சிப்பியின் மீது வெள்ளி 'அத்யாஸம்' ஆகிறது.

விவேக சூடாமணியில் (138)

'அதஸ்மின் தத்புத்தி', 'அது அல்லாததில் அது என்ற புத்தி' என்று அத்யாஸம் என்றால் என்ன என்று விவரித்துள்ளார்.

1. பாம்பின் வடிவம், இயல்பு போன்றவை.

2. வஸ்து என்பது மூன்று காலங்களிலும் ஒரே போன்று இருக்கவல்லது ஆகும். அவ்விதமில்லாமல் மாறுபடும் தன்மையுடையது 'அவஸ்து' ஆகும். இந்த இரண்டும்

இனிவரும் பகுதியில் வேதாந்தக் கண்ணோட்டத்துடன் விவரிக்கப்பட்டுள்ளது.

**वस्तु—सच्चिदानन्दमद्वयं ब्रह्म; अज्ञानादिसकलजडसमूहोऽवस्तु ॥ ३३ ॥**

வஸ்து சச்சிதானந்த அத்வயம் ப்ரஹ்ம: அஞ்ஞானாதி ஸகல ஜட ஸமூஹ: அவஸ்து ॥ 33 ॥

*சச்சிதானந்தமும் இருமையற்றதுமான பிரம்மமே வஸ்து ஆகும். அஞ்ஞானம் போன்ற எல்லா ஜடப் பொருட்களின் சமூகமே (கூட்டமே) அவஸ்து ஆகும்.*

*பிரம்மத்தை சுருதிகள் ஸத் (ஸத்தியமானது, எப்பொழுதும் ஒரே வடிவத்துடன் இருக்கக் கூடிய வஸ்து), சித் (சைதன்ய வடிவானது மற்றும் ஆனந்த வடிவமானது) என்று விவரிக்கின்றன. உதாரணம்.*

*'ஸதேவ ஸோம்யேத மக்ர ஆஸீத்', 'குழந்தாய், படைப்பிற்கு முன் இது (இவ்வுலகம்) இரண்டற்றதாக, ஸத்தாக இருந்தது' (சாந். உ. 6.2.1).*

*'ஸத்யம் ஞானமனந்தம் ப்ரஹ்ம', 'பிரம்மமானது உண்மை வடிவமானது, ஞானவடிவமானது, எல்லையற்றது' (தை. உ. 2.1).*

*'விஞ்ஞான மானந்தம் ப்ரஹ்ம', 'பிரம்மமானது ஞான வடிவமானது, ஆனந்த வடிவமானது' (பிரு. உ. 3.6.28). பிரம்மமானது ஆனந்த வடிவமாக இருப்பதால் தான் ஹிரண்யகர்ப்ப லோகத்திலும் வைராக்கியத்தைப் பெற்றிருந்த ரிஷிகள் அதை விரும்பினர்.*

தன்னைப்போல, தனக்கு இரண்டாம் வஸ்துவே இல்லாத பிரம்மமானது இருமையற்றதும் ஆகும்.

'ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம', 'பிரம்மம் ஒன்றே யாகும். இரண்டற்றதாகும்' (சாந். உ. 6.2.1).

ஒன்றே என்பது (ஏகம்) ஒன்று என்னும் எண்ணைக் குறிப்பிடவில்லை என்பதைக் காட்டுவதற்காக 'அத்வி தீய' என்னும் சொல்லானது பயன்படுத்தப்பட்டு உள்ளது.

அஞ்ஞானத்தைக் குறித்து அடுத்த சூத்திரத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. அஞ்ஞானத்திலிருந்தே, அறி யாமையிலிருந்தே படைப்பானது தொடங்குகிறது. அஞ்ஞானத்தால் தோன்றியுள்ள, ஆகாயத்திலிருந்து தொடங்கி பூமிவரையிலும் உள்ள எல்லா ஜடப் பொருட்களும் 'அவஸ்து'வே ஆகும். எவையெல்லாம் புலன்களால் உணரப்படுகின்றனவோ உறுப்புக்களுடன் கூடியுள்ளனவோ மாறுபாடு அடையும் தன்மை உடை யனவோ அவ்வனைத்தும் அழியத்தக்கது ஆகும். எனவே தான் 'அவஸ்து' ஆகும். பிரம்மத்தைத் தவிர மற்றனைத் தும், இதில் பிரம்ம லோகம்வரையிலுள்ள எல்லா உலகங்களும் சேர்ந்தவையாகும். இத்தகைய இயல்பை உடையதாக இருப்பதால் 'அவஸ்து'வே ஆகும்.

## அஞ்ஞானத்தின் ஸ்வரூபம்

**अज्ञानं तु—सदसद्भ्यामनिर्वचनीयं त्रिगुणात्मकं ज्ञानविरोधि भावरूपं यत्किञ्चिदिति वदन्त्यहमज्ञ इत्याद्यनुभवात् 'देवात्मशक्तिं स्वगुणैर्निगूढाम्' (श्वे. उ. १.३) इत्यादिश्रुतेश्च ॥ ३४ ॥**

அஞ்ஞானம் து ஸதஸத்ப்யாம் அனிர்வசனீயம் த்ரி-குணாத்மகம் ஞான விரோதி பாவரூபம் யத்கிஞ்சிதிதி வதந்தி 'அஹமஜ்ஞ:' இத்யாத்யனு பவாத், 'தேவாத்ம சக்திம் ஸ்வ-குணைர் நிகூடாம்' (சுவே. உ. 1.3) இத்யாதி ச்ருதேச்ச ॥ 34 ॥

*அஞ்ஞானம் என்றால் (இது) ஸத் அல்லது அஸத் என்று விவரிக்கவியலாத, மூன்று குணங்கள் உள்ள, ஞானத்திற்கு எதிரானதாகவும் உள்ள ஏதோ ஒன்று (பதார்த்தம்) என்று கூறுகின்றனர். 'நான் அஞ்ஞானி' என்னும் இதைப் போன்ற அனுபவத்தாலும் 'தன்னுடைய இயல்புகளால் மறைக்கப்பட்டுள்ள தேவாத்ம சக்தியை' (சுவே. உ. 1.3) என்பன போன்ற சுருதி வாக்கியங்களின் மூலமும் இவ்விதமாக அறியப்படுகிறது.*

*அத்வைத வேதாந்தத்தின் விதிமுறைகளை நன்றாகப் புரிந்துகொள்ள வேண்டும் என்றால், முதலில் அஞ்ஞானத்தின் ஸ்வரூபம் குறித்து அறிந்துகொள்ள வேண்டும். அது இப்பொழுது விவரிக்கப்படுகிறது.*

*'ஸத்' என்றால் எப்பொழுதும் ஒரே தன்மையுடன் இருக்கும் வஸ்து ஆகும். மாற்றத்திற்கு உட்படாமல் எப்பொழுதும் ஏகரூபமாக உள்ள வஸ்து ஆகும். அஸத் என்றால் முயலின் கொம்பைப் போல அல்லது மலடியின் மகனைப்போல எங்குமே இல்லாமல் உள்ள பொருள் ஆகும். அஞ்ஞானமானது இந்த இரண்டிற்கும் வேறுபட்டதாக இருப்பதால் அதை ஸத் என்றோ அஸத் என்றோ விவரிப்பதற்கு இயலாது. நபும்ஸக லிங்கமானது, புல்லிங்கம், ஸ்திரீலிங்கம் என்னும் இந்த இரண்டைக் காட்டிலும் எப்படி வேறுபட்டு*

விளங்குகிறதோ அதைப் போன்றதாகும். ஞானம் தோன்றும் பொழுது அஞ்ஞானம் அகன்று விடுகிறது. எனவே அது 'ஸத்' அல்ல. அனுபவத்திற்குப் புலனாவ தால் அது 'அஸத்' அல்ல.

உபநிஷதங்கள், பகவத்கீதை போன்ற நூல்களில் எது ப்ரக்ருதி அல்லது மாயை என்று அழைக்கப் பட்டுள்ளதோ அதுதான் இங்கு அஞ்ஞானம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதற்கு ஸத்துவ குணம், ரஜோ குணம், தமோ குணம் என்னும் மூன்று குணங்கள் உள்ளன, இந்த மூன்று குணங்களின் கலவையான வடிவம்தான் அஞ்ஞானம் ஆகும். ஆத்மஞானம் ஏற் படும்பொழுது இது மறைவதால் இது ஞானவிரோதி என்று அழைக்கப்படுகிறது.

நியாயக் கோட்பாட்டாளர்கள் அஞ்ஞானத்தை ஞானத்தின் அபாவம் என்று கூறுகின்றனர் (ஞானம் அற்றது). இதனை அத்வைத வேதாந்திகள் ஏற்றுக் கொள்வதில்லை. எனவே அஞ்ஞானமானது 'பாவ ரூபம்' என்று இங்கு கூறப்பட்டுள்ளது. பாவரூபம் என்றால் 'ஸத்' என்பது பொருள் இல்லை. ஏனெனில் அப்பொழுது, அது எப்பொழுதும் இருக்கும் பொரு ளாகிவிடும். மற்றும் மோக்ஷம் குறித்த விருப்பமே அகன்று விடும்! அபாவம் அல்ல என்று குறிப்பிடு வதற்கு மட்டுமே பாவரூபம் என்னும் சொல்லானது பயன்படுத்தப்பட்டுள்ளது. 'நான் அஞ்ஞானி. எனக்கு எதுவுமே தெரியாது' என்று நாம் கூறும்பொழுது நமக்கு அஞ்ஞானம் குறித்த பொதுவான அனுபவம் ஏற்பட்டுக் கொண்டிருக்கும். ஆனால், இந்த அஞ்ஞானமானது

ஜடம். ஞானத்தால் அது ஒளிர வேண்டும். சாட்சி ஸ்வரூபனாக உள்ள ஆத்மாவே, சைதன்னியமே இந்த ஞானம் ஆகும். இவ்விதத்தில் சாட்சி சைதன்னியத் திற்கு விஷயமாக விளங்குவதால், அனுபவத்தால் உணரப்படுவதால் பாவரூபம் ஆகும்.

ஸ்ரீபகவத்பாதர் அவர்கள் தம்முடைய நூல்களில் இதற்கு மாயை, அவித்யா என்னும் சொற்களையே முக்கியமாகப் பயன்படுத்தியுள்ளார்.

பிருஹதாரண்யக விளக்கவுரையில் (181) அவித்யை யானது ஆதாரபூர்வமாக நிரூபிக்க இயலாது என்பதை வருமாறு சுவைபட விவரிக்கிறது.

'அவித்யாயா அவித்யாத்வ மிதமேவது லக்ஷணம் ।
யத் ப்ரமாணா ஸஹிஷ்ணுத்வ மன்யதா வஸ்து ஸா
பவேத் ॥'

'எந்த ஒரு பிரமாணத்தையும் (விளக்கச் சான்றை யும்) அது வகிப்பதில்லை என்பதுதான் அவித்யையின், தெளிவற்ற தன்மையின் இலட்சணமாக உள்ளது. இல்லையெனின் அது (இருக்கும்) வஸ்துவாகி விடும்.'

இதையே நைஷ்கர்ம்ய சித்தி என்னும் நூலில் வருமாறு கூறப்பட்டுள்ளது (3.66).

'ஸேயம் பிராந்திர் நிராலம்பா ஸர்வன்யாய
விரோதினீ ஸஹதே ந விசாரம் ஸா தமோயத்வத்தி
வாகரம் ॥'

'இந்த பிராந்திக்கு (அஞ்ஞானத்திற்கு) ஆதாரம் எதுவும் இல்லை. அது எல்லா வகையான தர்க்கங் களுக்கும் எதிரானது ஆகும். இருளானது எவ்விதம்

சூரியனைப் பொறுத்துக்கொள்வது இல்லையோ அதைப் போன்றே அது பகுத்து ஆராய்வதைப் பொறுத்துக் கொள்வதில்லை.'

அஞ்ஞானமானது (भावरूपम्) பாவரூபம் என்பதை உறுதி செய்வதற்கு கீதையில் உள்ள இந்த சுலோகங்களை உதாரணமாகக் கூறலாம்.

'அஞ்ஞானே-னாவ்ருதம் ஜ்ஞானம் தேன முஹ்யந்தி ஜந்தவ ॥'

'அஞ்ஞானத்தினால் ஞானமானது மறைக்கப்பட்டுள்ளது. அதனால் பிராணிகள் மோகத்தை அடைகின்றன' (5.15).

'நாஹம் ப்ரகாச ஸர்வஸ்ய யோகமாயா ஸமாவ்ருத' ।, 'நான் யோக மாயையினால் மூடப்பட்டு, அனைவருக்கும் விளங்குவதில்லை' (7.25).

**इदमज्ञानं समष्टिव्यष्ट्यभिप्रायेणैकमनेकमिति च व्यवह्रियते ॥ ३५ ॥**

இதமஞ்ஞானம் ஸமஷ்டி வ்யஷ்டி அபிப்ராயேண
ஏகம் அனேகம் இதி ச வ்யவஹ்ரியதே ॥ 35 ॥

இந்த அஞ்ஞானமானது கூட்டாக (திரளாக) உள்ள நோட்டத்தினால் ஒன்று என்றும், தனித்துள்ளது என்னும் நோட்டத்தினால் பல என்றும் கூறப்படுகிறது.

சுருதி, ஸ்ம்ருதிகளில் இந்த அஞ்ஞானத்தைப் பற்றிக் குறிப்பிடும் சொற்களானது சில சமயங்களில் ஒருமையிலும், சில சமயங்களில் பன்மையிலுமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. உதாரணம்—

*'அஜாமேகாம் லோஹித சுக்ல க்ருஷ்ணாம் ।', 'சிகப்பு, வெள்ளை, கருப்பு நிறங்களைக் கொண்ட ஒரு ஆட்டை' (சுவே. உ. 6.5).*

*'இந்த்ரோ மாயாபி: புருரூப ஈயதே ।', 'இந்திரன் மாயைகளால் பல உருவங்கள் உடையவனாகத் தோற்றிக் கொள்கிறான்' (ரி. ஸம். 9-8, 7.18).*

*எனவே இந்த அஞ்ஞானமானது ஒன்றா அல்லது பலவா என்னும் சந்தேகமானது இயல்பாகவே ஏற்படுகிறது. அஞ்ஞானமானது ஒன்றாகவே இருப்பினும், நடைமுறையில் பொதுவான மற்றும் தனிப்பட்ட கண்ணோட்டங்களிலிருந்து பார்க்கும்பொழுது அது ஒன்றாகவோ அல்லது பலவாகவோ காணப்படுகிறது. ஸமஷ்டி என்றால் பல உறுப்புக்களுடன் கூடியுள்ள ஒரு திரள் ஆகும். உறுப்புக்களைத் தவிர அதற்கு வேறு இருப்பு இல்லை. தனித்த உறுப்பே வ்யஷ்டி ஆகும்.*

**ஸமஷ்டி அஞ்ஞானம்**

**तथाहि यथा वृक्षाणां समष्ट्यभिप्रायेण वनमित्येकत्वव्य-पदेशो यथा वा जलानां समष्ट्यभिप्रायेण जलाशय इति तथा नानात्वेन प्रतिभासमानानां जीवगताज्ञानानां समष्ट्यभिप्रायेण तदेकत्वव्यपदेशः 'अजामेकां' (श्वे. उ. ४.५) इत्यादिश्रुतेः ॥**

ததாஹி-யதா வ்ருக்ஷாணாம் ஸமஷ்டி-அபிப்ராயேண வனம் இதி ஏகத்வவ்யபதேச: யதா வா ஜலானாம் ஸமஷ்டி அபிப்ராயேண ஜலாசய இதி: ததா நானாத்வேன ப்ரதிபாஸமானானாம் ஜீவகத அஞ்ஞானானாம் ஸமஷ்டி:

அபிப்ராயேண ததேகத்வவ்யபதேச: ‘அஜாமேகாம்’ (சுவே. உ. 4.5) இத்யாதி ச்ருதே ॥ 36 ॥

உதாரணம்-மரங்களைத் தொகுதியாக (கூட்டாக) உள்ளது என்னும் கண்ணோட்டத்தால் காடு என்று ஒற்றையாகக் குறிப்பிடுவதைப்போல அல்லது நீர்த் திவலைகளை ஒரு தொகுதி என்னும் கண்ணோட்டத் துடன் ஜலாசயம் என்று ஒற்றையாகக் குறிப்பிடுவதைப் போல மனிதர்களிடம் உள்ள (மற்றும்) பலவாகத் தோற்றம் அளிக்கும் அஞ்ஞானங்களை ஒரு தொகுதி என்னும் கண்ணோட்டத்துடன் அது ஒன்று என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

‘பெண் ஆடு ஒன்றை’ (சுவே. உ. 4.5) போன்ற சுருதி வாக்கியத்தாலும் அறியப்படுகிறது.

அஞ்ஞானத்தின் மூலம் எது? ஜீவனா? பிரம்மமா? அஞ்ஞானத்திற்கு பிரம்மமே மூலம் என்பது ஸர்வஜ்ஞாத்மரின் கருத்து ஆகும். அதற்கு ஜீவனே மூலம் மற்றும் பிரம்மம் விஷயம் என்று வாசஸ்பதி அவர்கள் வாதித்து உள்ளார்.

உண்மையில் அஞ்ஞானமானது ஒன்றுதான். இருப்பினும் நடைமுறைக் கண்ணோட்டத்தில் பல மனிதர்கள் இருப்பதால் அவர்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு அஞ்ஞானத்தை ஏற்க வேண்டும். இவ்விதம் ஏற்றால் மட்டுமே பிணைப்பில் உள்ள ஜீவர்கள், முக்த ஜீவர்கள் என்னும் பகுப்பானது சரியாகப் பொருந்தி வரும். அதைப் போன்றே க்ரமமுக்தி, ஸத்யோமுக்தி என்னும் பகுப்பும் கூட இல்லாமல் இருந்திருக்கும்

எனின், ஒருவர் முக்தி அடைந்தால் அனைவரும் அந்த சமயத்திலேயே முக்தியை அடைய வேண்டியிருக்கும். அல்லது ஒருவர் ஞானம் அடைந்தாலும் மற்றவர்களிடம் அஞ்ஞானமானது தொடர்ந்து இருப்பதால் யாருக்குமே முக்தி கிடைக்காத சூழ்நிலை ஏற்பட்டுவிடும்! அதனால்தான் 'மனிதர்களிடம் உள்ள' மற்றும் 'பலவாகத் தோற்றமளிக்கும்' என்று கூறப்பட்டுள்ளது.

அஜா என்னும் சொல் பிறப்பற்ற அல்லது அனாதி என்னும் பொருளைப் பெற்றிருப்பதால் அஞ்ஞானமானது அனாதியானது (தொடக்கமற்றது) என்பதைக் குறிப்பிடுவதாகவும் உள்ளது.

**इयं समष्टिरुत्कृष्टोपाधितया विशुद्धसत्त्वप्रधाना ॥ ३७ ॥**

இயம் ஸமஷ்டி: உத்க்ருஷ்ட-உபாதிதயா விசுத்த ஸத்வப்ராதானா ॥ 37 ॥

இந்த ஸமஷ்டியானது (அஞ்ஞானம்) தலைசிறந்ததற்கு [1] உபாதியாக [2] இருப்பதால் மிகவும் தூய்மையான [3] ஸத்துவ குணத்தை [4] முக்கியமாகப் பெற்றிருக்கும்.

1. பரம்பொருள் என்பது பொருளாகும்.

2. ஒரு வஸ்துவின் பாகமாக இல்லாமல் மற்றும் அந்த வஸ்துவின் உண்மையான இயல்பை மறைத்து, அதில் தன்னுடைய இயல்புகளை ஏற்றும் இரண்டாவது வஸ்து அந்த முதல் வஸ்துவிற்கு உபாதியாகும். உதாரணம் ஸ்படிகமணியின் அருகிலுள்ள செந்நிறம் உடைய செம்பருத்திப் பூவானது, ஸ்படிகமும் செந்நிறமாகத் தோற்றமளிக்குமாறு செய்துவிடுகிறது. எங்கும் பரந்து உள்ள ஆகாயத்தைக் குடமானது தன்னுடைய வட்டமான எல்லைக்குள்

*உட்படுத்திக் கொள்வதைப் போலத் தோன்றுகிறது. செம் பருத்திப்பூவானது ஸ்படிகத்திற்கு உபாதியாகும். குடமானது ஆகாயத்திற்கு உபாதியாகும். அதைப்போன்றே அஞ்ஞான மானது பிரம்மத்திற்கு உபாதியாகும்.*

*3. ரஜோ குணமும், தமோ குணமும் இல்லை என்பது பொருள் இல்லை. அவை மிகவும் குறைந்து காணப்படு கின்றன என்று பொருள் ஆகும்.*

*4. எனவே இந்த ஸமஷ்டி-அஞ்ஞானத்தால் பரம் பொருளை மோகம் அடையச் செய்யவியலாது. அதைப் போன்றே பிணைப்பிற்கும் உட்படுத்துவதற்கு இயலாது. 51-ஆம் சூத்திரத்தில் கூறப்படும் பரிபாஷையைப் பயன் படுத்திக் கூற வேண்டும் எனின் இதற்கு மறைக்கும் சக்தி இல்லை. விக்ஷேப சக்தி மட்டுமே உள்ளது (ஒடுங்கி, விரியும் சக்தி).*

**एतदुपहितं चैतन्यं सर्वज्ञत्वसर्वेश्वरत्वसर्वनियन्तृत्वादि-गुणकमव्यक्तमन्तर्यामी जगत्कारणमीश्वर इति च व्यपदिश्यते सकलाज्ञानावभासकत्वात्।'यः सर्वज्ञः सर्ववित्' (मु. उ. १.१.९) इति श्रुतेः ॥ ३८ ॥**

ஏத துபஹிதம் சைதன்யம் ஸர்வஜ்ஞத்வ ஸர்வேச்வரத்வ-ஸர்வநியந்த்ருத்வாதிகுணகம் 'அவ்யக்தம்'-'அந்தர்யாமீ'-'ஜகத்காரணம்'-'ஈஸ்வர' இதி ச வ்யபதிச்யதே ஸகல-அஞ்ஞான ஆவபாஸகத்வாத், 'ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித்' (முண். உ. 1.1.9) இதி ச்ருதே ॥ 38 ॥

*(அஞ்ஞானத்திரளுடன் சேர்ந்துள்ள பிரம்மமானது) இதை*[1] *உபாதியாகப் பெற்றுள்ள சைதன்னியம்*[2]

'ஸர்வஜ்ஞுத்வம்',[3] 'ஸர்வவேச்வரத்வம்',[4] 'ஸர்வநியந்த்ருத்வம்'[5] போன்ற குணங்களைப்[6] பெற்றிருக்கும். மற்றும் 'அவ்யக்தம்',[7] 'அந்தர்யாமீ',[8] 'ஜகத்காரணம்',[9] 'ஈஸ்வர:'[10] என்றும் அழைக்கப்படுகிறது. ஏனெனில் இது எல்லா அஞ்ஞானங்களையும் விளக்கமடையச் செய்கிறது.[11] 'யார் அனைத்தையும் அறிந்தவனோ, அனைவரையும் அறிந்தவனோ'[12] என்னும் முண்டக உபநிஷதத்திலுள்ள வாக்கியத்தால் இவ்விதம் அறியப் படுகிறது *(1.1.9)*.

1. ஸமஷ்டி அஞ்ஞானத்தை.

2. பிரம்ம வஸ்து.

3. அசையும் மற்றும் அசையாப் பொருட்களுடன் கூடிய இவ்வுலகத்திற்கு சாட்சியாக இருப்பதால் ஸர்ஜஞுத்வன்.

4. கர்மங்களுக்குத் தகுந்த பலனை அளிப்பதால் ஸர்வேச்வரத்வம்.

5. எல்லா ஜீவர்களையும் அவரவருடைய கர்மங்களைச் செய்யும்படி ஆணையிடுவதால், ஊக்கப்படுத்துவதால் ஸர்வநியந்த்ருத்வ.

6. தூய்மையான சைதன்னிய வடிவினனாக விளங்கும் பிரம்ம வஸ்துவிற்கு, இந்தக் குணங்கள் உபாதியின் பொருட்டு வந்துள்ளனவே தவிர, தானாக வரவில்லை என்பதை மறக்கக் கூடாது.

7. இவ்வுலகின் நாமம், வடிவம் வெளிப்படுத்துவதற்கு முன்பு இருந்த சூட்சுமமான நிலை.

8. ஜீவிகளின் இதயத்தில் இருந்துகொண்டு, புத்தியை பலப்படுத்துகிறது.

*9.* இந்த உலகத்திற்கு, பானைக்கு மண்ணைப் போல முதற் காரணமாகிறது, (அதே பானைக்கு) குயவனைப் போல நிமித்த காரணமாகவும் ஆகியிருப்பதால் 'ஜகத் காரணம்' அல்லது உலகம் என்னும் வெளிப்பாட்டிற்கு பாம்பிற்கு கயிற்றைப்போல நிலைத்திருப்பதால் 'ஜகத் காரணம்'.

*10.* எல்லாவற்றையும் ஆள்வதால் ஈஸ்வரன்.

*11.* தனித்த அஞ்ஞானமானது, ஜீவசைதன்னியத்தால் விளக்கமடைவதைப்போல திரளான அஞ்ஞானமானது ஈஸ்வரசைதன்னியத்தால் விளக்கமடைகிறது.

*12.* எல்லாவற்றையும் பொதுவாக அறிந்து இருப்பதால் 'ஸர்வஞ்ஜன்', தனிப்பட்ட முறையிலும் அறிந்து இருப்ப தால் 'ஸர்வவித்'.

இன்னும் வேறு சில சுருதி வாக்கியங்களையும் இங்கு உதாரணமாகக் காட்டலாம்.

'ஏஷஸேதுர்விதரண:', 'இவ்வுலகங்கள் பிரிந்து போகாமல் சேர்த்துப்பிடிக்கும் கரை போன்றவர்' (பிரு. உ. *4.4.22*).

'ஏஷ த ஆத்மா அந்தர்யாமீ அம்ருத: ।', 'அவன் தான் அந்தர்யாமியாகவும் அழிவற்ற ஆத்மாவாகவும் விளங்குகிறான்' (பிரு. உ. *3.7.3*).

'மஹத: பரம் அவ்யக்தம்', 'மகிமை வாய்ந்ததான ஆத்மாவைவிட அவ்யக்தம் வலிமை வாய்ந்தது' (க. உ. *1.3.11*).

'ய: பர: மஹேச்வர:', 'யார் மிகச் சிறந்தவனோ அவனே பரமேச்வரன்' (ம. நா. உ. *12.17*).

**ईश्वरस्येयं समष्टिरखिलकारणत्वात्कारणशरीरमानन्द-प्रचुरत्वात्कोशवदाच्छादक त्वाच्चानन्दमयकोशः सर्वो-परमत्वात्सुषुप्तिरत एव स्थूलसूक्ष्मप्रपञ्चलयस्थानमिति च उच्यते ॥ ३९ ॥**

ஈச்வரஸ்ய இயம் ஸமஷ்டி: அகிலகாரணத்வாத் காரணசரீரம் ஆனந்த ப்ரசுரத்வாத் கோசவத் ஆச்சாதகத்வாச்ச ஆனந்தமய கோச: ஸர்வோ பரமத்வாத் ஸுஷுப்தி அத ஏவ ஸ்தூல ஸூக்ஷ்ம ப்ரபஞ்சலய-ஸ்தானமிதி ச உச்யதே ॥ 39 ॥

ஈஸ்வரனுக்கு (உபாதியாக உள்ள) இந்த அஞ்ஞானத்தின் தொகுதியானது எல்லாவற்றிற்கும் காரணமாக இருப்பதால், 'காரணசரீரம்'[1] என்றும், ஆனந்தம் நிறைந்ததாகவும் மற்றும் உறையைப்போல (பிரம்ம சைதன்னியத்தை) மறைத்து இருப்பதால் 'ஆனந்தமய கோசம்'[2] என்றும், அனைத்தும் அதில் ஒடுங்குவதால் 'ஸுஷுப்தி'[3] என்றும், அதனாலேயே ஸ்தூல-ஸூக்ஷ்ம உலகங்களின் 'லயஸ்தானம்'[4] என்றும் கூறப்படுகிறது.

உபாதியின் தொடர்பைப் பெற்றுள்ள சைதன்னியத்திற்கு அதாவது ஈஸ்வரனுக்குச் சாத்திரங்களில் புகழ்பெற்று விளங்கும் பெயர்களைக் கூறியாகி விட்டது. இப்பொழுது அந்த ஸமஷ்டி உபாதிக்கு இருக்கும் பெயர்களை விவரித்துள்ளார்.

*1. அத்வைதமானது ஆத்ம சைதன்னியத்திற்கு உபாதியின் தொடர்புடைய மூன்று சரீரங்களை ஏற்றுக்கொண்டுள்ளது. ஸ்தூல சரீரம், ஸூக்ஷ்ம சரீரம் மற்றும் காரண சரீரம்.*

முன்பு செய்த கர்மங்களுக்குத் தகுந்தாற்போல பெற்றுள்ள, ஐம்பெரும்பூதங்களால் ஏற்படுத்தப்பட்டுள்ள பெற்றோரால் கொடுக்கப்பட்டுள்ள இன்ப-துன்பங்களை அனுபவிப்பதற்கு மூலமாக உள்ள இந்த சரீரம்தான் 'ஸ்தூல சரீரம்' ஆகும். ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து பிராணன்கள், மனம் மற்றும் புத்தி என்னும் இந்தப் பதினேழும் சேர்ந்து 'ஸூக்ஷ்ம சரீரம்' அல்லது 'இலிங்க சரீரம்' என்று அழைக்கப்படுகிறது. இது ஸூக்ஷ்மமான பூதங்களால் ஆனது மற்றும் இன்ப-துன்பங்கள் போன்ற அனுபவங்களுக்குச் சாதனமாக உள்ளது. அஞ்ஞானமே அவித்யையே 'காரணசரீரம்' எனப்படுகிறது.

2. உடல், மனம் போன்ற அனாத்ம வஸ்துக்கள் ஆத்மாவை கோசத்தைப்போல, உறையைப்போல அல்லது பையைப் போல மூடி மறைத்து விடுவதால், ஐயத்திற்கு இடமின்றி ஆத்மஞானத்திற்குத் தடையாக இருப்பதால் கோசங்கள் எனப்படுகின்றன. இத்தகைய கோசங்கள் ஐந்து உள்ளன. அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம் மற்றும் ஆனந்தமய கோசம் ஆகும். எலும்பு, இரத்தம், சதை போன்றவற்றால் செய்யப்பட்ட, அன்னத்தால் ஊட்டமளிக்கப்படும் உடல்தான் அன்னமய கோசம் ஆகும். பிராணன், அபானன், போன்ற ஐந்து வாயுக்களே பிராணமய கோசம் ஆகும். சங்கல்பம்-விகல்ப வடிவமான மனம்தான் மனோமய கோசம் ஆகும் (சங்கல்பம்-விகல்பம் மனத்தில் தோன்றும் எண்ணம், மனம் எடுக்கும் தீர்மானம். சந்தேகம், கற்பித்துக் கொள்ளுதல் போன்றவை). ஆராய்ந்து அறியும் தன்மையை உடைய புத்திதான் விஞ்ஞானமய கோசமாகும். விழிப்பு நிலையில் விரும்பும் பொருட்களை அனுபவித்துக் கொண்டும், கனவு நிலையில் நல்ல கனவுகளுடன் அயர்ந்த உறக்க நிலையிலும் ஏற்படும் ஆனந்தமே, இன்பமே ஆனந்த மய கோசமாகும்.

ஸ்தூல சரீரம் அன்னமய கோசத்தையும், ஸூக்ஷ்ம சரீரம் பிராணமய, மனோமய, விஞ்ஞானமய கோசங்களையும், காரண சரீரம் ஆனந்தமய கோசத்தையும் உட்கொண்டுள்ளன. இந்த விவரங்கள் அனைத்தையும் ஜீவசைதன்னியத்தின் உபாதி என்னும் கண்ணோட்டத்துடன் கொடுக்கப் பட்டுள்ளது. இதை ஸமஷ்டி உபாதியின் தொடர்பினால் ஈஸ்வர சைதன்னியத்திற்கும் பொருத்திக் கூறவியலும்.

3. நம்முடைய ஸுஷுப்திக்கு ஈஸ்வர ஸுஷுப்தியானது சமமானதாக உள்ளது. இது உண்மையில் மகாப்ரளயமாகும்.

4. ஆகாயம் போன்ற ஸூக்ஷ்மமான பூதங்களும் அவைகளினால் தோற்றமுறும் நிலையற்ற ஸ்தூல உலகமும் இதில் ஒடுங்குவதால் 'லயஸ்தானம்' ஆகும்.

## வ்யஷ்டி அஞ்ஞானம்

**यथा वनस्य व्यष्ट्यभिप्रायेण वृक्षा इत्यनेकत्वव्यपदेशो यथा वा जलाशयस्य व्यष्ट्यभिप्रायेण जलानीति तथाऽज्ञानस्य व्यष्ट्यभिप्रायेण तदनेकत्वव्यपदेशः 'इन्द्रो मायाभिः पुरुरूप ईयते' (ऋग्वे. ९.४७.१८) इत्यादिश्रुतेः ॥ ४० ॥**

யதாவனஸ்ய வ்யஷ்டி அபிப்ராயேண 'வ்ருக்ஷா' இதி அனேகத்வவ்யபதேச யதா வா ஜலாசயஸ்ய வ்யஷ்டி அபிப்ராயேண 'ஜலானி' இதி ததா அஞ்ஞானஸ்ய வ்யஷ்டி-அபிப்ராயேண ததனேகத்வ-வ்யபதேச: 'இந்த்ரோ மாயாபி: புருரூப ஈயதே (ரி. ஸம். 9.47.18) இத்யாதி ச்ருதே: ॥ 40 ॥

எப்படி காட்டிற்கு வ்யஷ்டியின் (தனித்தனியாக இருக்கிறது) கண்ணோட்டத்தில் பார்க்கும் பொழுது 'மரங்கள்' என்று பன்மையில் கூறும் வழக்கம் உள்ளதோ அல்லது குளத்திற்கு (நீர்த்திவலைகள் என்னும்) வ்யஷ்டியின் கண்ணோட்டத்தில் கூறும் வழக்கம் உள்ளதோ, அதைப் போன்றே அஞ்ஞானத்திற்கும் (பல மனிதர்களிடம் உள்ளது என்னும்) வ்யஷ்டியின் கண்ணோட்டத்தில் பார்க்கும்பொழுது அது பலவாகும் என்று பன்மையில் கூறும் வழக்கம் உள்ளது. 'இந்திரன் மாயையால் பல உருவங்கள் உடையவனாகத் தோற்றிக் கொள்கிறான்' (ரி. ஸம். 9.47.18) போன்ற சுருதியிலிருந்து உணரப்படுகிறது.

இந்திரன் என்றால் பரமாத்மா. மாயை என்றால் விக்ஷேப சக்தியாகும் (ஒடுங்கி, விரியும் சக்தி). இதன் மூலம் அவன் பல உருவங்களை உடையவனாகத் தோற்றிக் கொள்கிறான். இவை தென்படும் உருவங்களே தவிர உண்மையல்ல.

இதே கருத்தைக் கொடுக்கும் மற்றொரு சுருதி வாக்கியம் உள்ளது.

'ய ஏகோ ஜாலவான் ஈசத ஈசனீபி:', 'தன்னைப் போன்று வேறு ஒருவன் இல்லாத மாயாவியானவன் தன்னுடைய சக்திகளால் ஆள்கிறானோ' (சுவே. உ. 3.1).

**अत्र व्यस्तसमस्तव्यापित्वेन व्यष्टिसमष्टिताव्यपदेशः ॥**

அத்ர வ்யஸ்த-ஸமஸ்த-வ்யாபித்வேன வ்யஷ்டி ஸமஷ்டி வ்யபதேச ॥ 41 ॥

*இங்கு (அதாவது இந்த அஞ்ஞானத்தின் விஷயத்தில்) வ்யஷ்டி (அல்லது) ஸமஷ்டி என்று கூறும் பழக்கமானது (அந்த அஞ்ஞானமானது) தனித்தனியாக உள்ள பொருளில் அல்லது சமுதாயத்தில் (திரளில்) பரவியுள்ளது என்னும் காரணத்தினால் ஆகும்.*

*மரங்களைப்போல தனித்தனியாக இருப்பதுடன் தொடர்புபடுத்தும்பொழுது வ்யஷ்டி என்றும், காட்டைப் போல தொகுதியுடன் திரளுடன் தொடர்புபடுத்தும் பொழுது ஸமஷ்டி என்றும் கூறும் பழக்கம் உள்ளது என்பது கருத்து ஆகும்.*

**इयं व्यष्टिर्निकृष्टोपाधितया मलिनसत्त्वप्रधाना ॥४२ ॥**

இயம் வ்யஷ்டி: நிக்ருஷ்ட உபாதிதயா மலினஸத்வ-ப்ரதானா ॥ 42 ॥

*கீழான நிலையில் இருப்பதுடன்[1] (நிக்ருஷ்ட) சேர்ந்து உபாதியாக இருப்பதால் இந்த வ்யஷ்டியானது (அஞ்ஞானமானது) அழுக்குடன்[2] கூடிய ஸத்துவத்துடன் இனம் கண்டு கொள்ளப்பட்டுள்ளது.*

*1. எல்லாவற்றிலும் வல்லவனும், எல்லா ஆற்றல்களையும் உடைய ஈசுவரனுடன் ஒப்பிட்டால் ஜீவனானவன் அல்பமானவனாகவும் அல்ப ஆற்றலை உடையவனாகவும் இருப்பதால் கீழானவனாக இருக்கிறான். வ்யஷ்டி-அஞ்ஞானமானது அவனுக்கு உபாதியாக உள்ளது (அவனுடன் சேர்ந்துள்ளது).*

*2. ஜீவனிடம் சைதன்யஸ்வரூபமானது மறைக்கப் பட்டு இருப்பதால், அஞ்ஞானத்தாலே சூழப்பட்டுள்ள*

ஆற்றலானது அதிகமாகத் தென்படுகிறது. அதனால் ஸத்துவ குணமானது, ரஜோ குணம், தமோ குணம் போன்றவற்றால் மாசு அடைந்து உள்ளது என்று அறிய வேண்டும்.

**एतदुपहितं चैतन्यमल्पज्ञत्वानीश्वरत्वादिगुणकं प्राज्ञ इत्युच्यत एकाज्ञानावभासकत्वात् ॥ ४३ ॥**

ஏதுதுபஹிதம் சைதன்யம் அல்பஜ்ஞத்வ அனீச்வரத்வாதி குணகம் 'ப்ராஜ்ஞ' இதி உச்யதே ஏக-அஞ்ஞான-அவபாஸ-கத்வாத் ॥ 43 ॥

இத்துடன் (ஜீவனின் அஞ்ஞானத்துடன்) சேர்ந்துள்ள சைதன்னியமானது, குறைந்த அறிவுடையதாகவும் ஆளும் ஆற்றல் இல்லாமலும் உள்ளது. தனிப்பட்ட ஒவ்வொரு ஜீவனின் அஞ்ஞானத்தை ஒளிரச் செய்வதால் இது 'ப்ராஜ்ஞன்' என்று அழைக்கப்படுகிறது.

ஜீவ சைதன்னியத்தின் ஆற்றலிற்கு வ்யஷ்டி அஞ்ஞானம்தான் காரணமாக உள்ளது. அது இந்த ஒரு அஞ்ஞானத்தை மட்டும் பெற்றுத் திகழ்கிறது. அதாவது தன்னுடைய அஞ்ஞானத்திற்கு மட்டுமே சாட்சியாக உள்ளது. எனவேதான் அது அல்பஞானத்துடன் உள்ளது. மற்றும் ஆற்றல் அற்றதாகவும் உள்ளது (அனீச்வரத்வம்). இந்த சைதன்னியமானது இங்கு 'ப்ராஜ்ஞா' என்று அழைக்கப்படுகிறது.

மாண்டூக்ய உபநிஷதம் (3.4 மற்றும் 5) விழிப்பு நிலை, கனவு நிலை, அயர்ந்த உறக்க நிலை என்னும் மூன்று நிலைகளுடன் தொடர்புடைய ஜீவனை

முறையாக விச்வம், தைஜஸன் மற்றும் ப்ராஜ்ஞன் என்று அழைக்கிறது. அங்கு உயர்ந்த நிலையைக் குறிப்பிடுவதற்காக 'ப்ராஜ்ஞன்' என்னும் சொல்லானது பயன்படுத்தப்பட்டுள்ளது. ப்ராஜ்ஞன் என்னும் சொல் லைப் பொதுவாக,

'ப்ரகர்ஷேண ஜானாதி இதி ப்ரஜ்ஞ: ப்ரஜ்ஞ ஏவ ப்ராஜ்ஞ ।', 'நன்றாக அறிந்துகொண்டிருப்பதால் ப்ரஜ்ஞன் ஆவான். ப்ரஜ்ஞனே ப்ராஜ்ஞன்' என்று விவரிக்கப்படுவது உண்டு (ஶ்ரீசங்கரபகவத் பாதர் மாண்டூக்ய விளக்கவுரை 5).

'ப்ரஜ்ஞப்தி மாத்ரம் அஸ்ய ஏவ அஸாதாரணம் ரூபம் இதி ப்ராஜ்ஞ ।', 'உயர்ந்த ஞானமானது இவனுடைய அசாதாரணமான ரூபமாக இருப்பதால் ப்ராஜ்ஞன் எனப்படுகிறான்' என்று கூறியுள்ளார்.

ஆனால் இங்கு இந்த விளக்கமானது பொருத்தம் உடையதாக இல்லை. அதனால்தான் வித்வன்மனோ ரஞ்சனீ விளக்கவுரையில் இந்தச் சொல்லானது 'ப்ராயேண அஜ்ஞ:', 'பெருமளவிற்கு மூடன்' என்று விளக்கப்பட்டுள்ளது.

**अस्य प्राज्ञत्वमस्पष्टोपाधितयानतिप्रकाशकत्वात् ॥**

அஸ்ய ப்ராஜ்ஞத்வம் அஸ்பஷ்ட்ட உபாதிதயா அனதி பிரகாசகத்வாத் ॥ 44 ॥

மாசடைந்து இருப்பதால், அதிகமான ஒளியை வீசாமலிருப்பதால் இந்தச் சைதன்னியமானது 'ப்ராஜ்ஞ' என்று அழைக்கப்பட்டுள்ளது.

ப்ராஜ்ஞனின் (ப்ராஜ்ஞனுடன் சேர்ந்துள்ள) உபாதியாக உள்ள அஞ்ஞானத்தில் ரஜோ குணமும், தமோ குணமும் அதிகமாக இருப்பதால் சைதன்னியத்தின் அனுபவமானது தெளிவாக இருக்காது. அதனால்தான் ஞான ஒளியானது குறைவாக உள்ளது.

**अस्यापीयमहङ्कारादिकारणत्वात्कारणशरीरमानन्द-प्रचुरत्वात्कोशवदाच्छादकत्वाच्चानन्दमयकोशः सर्वो-परमत्वात्सुषुप्तिरत एव स्थूलसूक्ष्मशरीरप्रपञ्चलयस्थानमिति च उच्यते ॥ ४५ ॥**

அஸ்யாபி இயம் அகங்காராதிகாரணத்வாத் காரண-சரீரம் ஆனந்த ப்ரசுரத்வாத் கோசவத் ஆச்சாத கத்வாச்ச ஆனந்த-மயகோசக: ஸர்வோபரமாத்வாத் ஸுஷுப்தி: அதஏவ ஸ்தூல சூக்ஷ்ம சரீரபிரபஞ்சலயஸ்தானம் இதி ச உச்யதே ॥ 45 ॥

இவனுடைய இந்த (அஞ்ஞானம்) கூட அகங்காரம்[1] போன்றவற்றிற்குக் காரணமாக இருப்பதால் காரண சரீரம் என்றும் ஆனந்தத்தை அதிகமாகப் பெற்றிருப்பதால் மற்றும் உறையைப் போல (சைதன்யஸ்வரூபத்தை) மறைத்துக் கொண்டிருப்பதால் ஆனந்தமய கோசம் என்றும் அனைத்தும் இதில் ஒடுங்குவதால் ஸுஷுப்தி என்றும்[2] அதனாலேயே ஸ்தூல (பருப்பொருள்-கருப்பொருள்), சூக்ஷ்ம சரீரங்களில் லயஸ்தானம்[3] என்றும் கூறப்படுகிறது.

இதற்கு முன்பு 39-ஆம் ஸூத்திரத்தில் ஈஸ்வரனின் உபாதியாக உள்ள அஞ்ஞானத்தின் இலட்சணங்களும்,

பெயர்களும் தெரியப்படுத்தப்பட்டுள்ளன. இப்பொழுது அதே அஞ்ஞானமானது, வ்யஷ்டியின் கண்ணோட்டத்தில் ஜீவனுடன் தொடர்புபடுத்தப்படும் பொழுது அதனுடைய இலட்சணங்கள் என்ன, பெயர்கள் என்ன என்பது விவரிக்கப்படுகின்றது.

*1. இங்கு அகங்காரம், அந்தகரணம் போன்றவை குறிப்பிடப்பட்டுள்ளன.*

*2. விழிப்பு நிலை மற்றும் கனவு நிலையில் ஏற்படும் அனுபவங்கள் எல்லாம் ஸுஷுப்தி நிலையில் இலயமாகின்றன.*

*3. விழிப்பு நிலையில் ஸ்தூல சரீரத்தைக் குறித்த கவனமானது, கனவு நிலையில் இல்லாமல் இருப்பதால் ஸ்தூல சரீரமானது ஸூக்ஷ்ம சரீரத்தில் ஒடுங்குகிறது என்று கூறலாம். அதைப் போன்றே ஸுஷுப்தியில் மனோமயமான உலகம் இல்லாமல் இருப்பதால் ஸூக்ஷ்ம சரீரமும் ஒடுங்கி உள்ளது என்று கூறலாம். இதனுடைய ஒடுங்குமிடமானது (லயஸ்தானமானது) ஸுஷுப்திக்குக் காரணமாக உள்ள அஞ்ஞானம் மட்டுமே ஆகும். மற்ற விவரங்களுக்கு 39-ஆம் ஸூத்திரத்தைப் பார்க்கவும்.*

## ஈசுவரனும் ப்ராஜ்ஞனும்

**तदानीमेतावीश्वरप्राज्ञौ चैतन्यप्रदीप्ताभिरतिसूक्ष्माभिरज्ञानवृत्तिभिरानन्दमनुभवतः 'आनन्दभुक् चेतोमुखः प्राज्ञः' (माण्डू. उ. ५) इति श्रुतेः सुखमहमस्वाप्सम् न किञ्चिदवेदिषमित्युत्थितस्य परामर्शोपपत्तेश्च ॥ ४६ ॥**

ததானீம் ஏதௌ ஈச்வரப்ராஜ்ஞௌ சைதன்யப்ரதீப்தாபி அதிஸூக்ஷ்மாபி: அஞ்ஞானவ்ருத்தி பி: ஆனந்தம் அனுபவத: 'ஆனந்த புக் சேதோமுக: ப்ராஜ்ஞ' (மாண். உ. 5) இதி ச்ருதே: 'ஸுகமஹம் அஸ்வாப்ஸம் ந கிஞ்சிதவேதிஷம்' இத்யுத்தி தஸ்ய பராமர்சோபபத்தேச்ச: ॥ 46 ॥

*அப்பொழுது (கனவற்ற தூக்க நிலையில்) இந்த ஈசுவரன், பிராஜ்ஞன் என்னும் இருவரும் சைதன்னியத் தால் ஒளிரவைக்கப்பட்டுள்ள மிகவும் ஸூக்ஷ்மமான இயக்கத்தால் இன்பத்தை அனுபவிக்கின்றனர். 'ஆனந் தத்தை அனுபவிப்பவனும், அறிவின் முகமாக உள்ள வனும்' (மாண். உ. 5) என்னும் சுருதியின் கூற்றாலும், அயர்ந்த உறக்கத்திலிருந்து எழுந்தவன் 'நான் நன்றாக உறங்கினேன். எதுவுமே தெரியாது' என்று நினைவு படுத்திக் கொள்வது (இவ்விதத்தில் அஞ்ஞானச் செயல் களை ஏற்றுக் கொண்டால் மட்டும்) பொருத்தமானதாக இருப்பதாலும் இவ்விதம் அறியப்படுகிறது.*

*அயர்ந்து உறங்கும் பொழுது அந்தகரணமானது (மனம்) ஒடுங்கியிருப்பதால் அதன் மூலம் ஆக வேண் டிய ஞானத்திற்கு அல்லது ஆனந்த அனுபவத்திற்கு வாய்ப்பு இல்லாமல் இருப்பதால் ப்ராஜ்ஞனிற்கு ஆனந்தமய கோசமும் ப்ராஜ்ஞன் என்னும் பெயரும் எப்படிக் கொடுக்கப்பட்டது? என்னும் மறுப்பிற்கு இங்கு பதில் குறிப்பிடப்பட்டுள்ளது.*

*அந்த நிலையில் (பிரளயத்தில் அல்லது ஸுஷுப்தி நிலையில்) மனம் (அந்தகரணம்) இல்லாமல் இருந் தாலும் அதன் மூலமான அஞ்ஞானம் இருக்கிறது. இந்த*

அஞ்ஞானமானது ஸூக்ஷ்மமாக, தெளிவற்ற செயல் களின் மூலம் தோன்றிய வண்ணமே இருக்கிறது. அதில் ஈஸ்வரன் அல்லது ஜீவனின் சைதன்னியமானது பிரதி பலித்துக் கொண்டே இருக்கிறது. ஆனந்த ஸ்வரூப மானது பிரதிபலித்துக் கொண்டே இருப்பதால் ஆனந்த அனுபவத்தையும் அறிவதற்கு இரண்டாம் வஸ்து இல்லாமல் இருப்பதால் அஞ்ஞானத்தின் அனுபவமும் ஏற்படுகிறது.

இதை நிரூபிப்பதற்கு சுருதி வாக்கியம் ஒன்றையும் அன்றாட வாழ்வில் ஏற்படும் அனுபவத்தையும் பிரமாணமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

ஸுஷுப்தியில் (அயர்ந்த உறக்க நிலையில்) எத் தகைய சோர்வும் இல்லாமல் ஜீவன் நிம்மதியுடன் இருப்பதால் அவன் 'ஆனந்தபுக்' என்று அழைக்கப் படுகிறான். விழிப்பு நிலை போன்ற நிலைகளில் ஏற் படும் அனுபவங்களின் அறிவிற்குத் (சேதஸ்) துவாரத் தைப் போல இருப்பதால் (முகம்) பிரஜ்ஞை இல்லாம லிருந்தால் அந்த அறிவு ஏற்படவியலாது என்பதால் அவன் பிரஜ்ஞை ரூபனே ஆவான். எனவேதான் அறிவு முகமாக உள்ளான்.

'ஸுஷுப்தி காலே ஸகலே விலீனே தவோऽபிபூத: ஸுகரூபமேதி ।', 'அயர்ந்த உறக்க நிலையில் எல் லாமே ஒடுங்கி இருப்பதால், தமோ குணத்திலிருந்து மீண்டுள்ள (ஜீவன்) இன்பமயமான அனுபவத்தைப் பெறுகிறான்' என்னும் மற்றொரு சுருதியின் வாக்கியத்தை (கை. உ. 13) இங்கு நினைவு படுத்திக்

*கொள்ளலாம். அதைப் போன்றே பிருஹதாரண்யக உபநிஷதத்திலுள்ள 4.3.23,32 என்னும் இவற்றையும் உதாரணமாகக் காட்டலாம்.*

*ஈஸ்வரனின் விஷயத்தில் அஞ்ஞானம் இல்லாமல் இருப்பதால் ஆனந்தம் மட்டும் ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளது.*

**अनयोः समष्टिव्यष्ट्योर्वनवृक्षयोरिव जलाशयजलयोरिव वाभेदः ॥ ४७ ॥**

அனயோ: ஸமஷ்டி-வ்யஷ்ட்டோ: வனவ்ருக்ஷயோரிவ ஜலாசய ஜலயோரிவ வா அபேத: ॥ *47* ॥

*காடு மற்றும் மரங்கள்-இவற்றின் நடுவில் அல்லது குளம் மற்றும் நீர்த்திவலைகளின் நடுவில் (வேறுபாடு இல்லாமல் இருப்பதைப்போல) இந்த ஸமஷ்டி (தொகுதி) மற்றும் வ்யஷ்டி (தனித்த) (அஞ்ஞானங் களின்) நடுவில் கூட வேறுபாடு இல்லை (ஸமஷ்டி-திரள்) (வ்யஷ்டி-தனித்திருப்பது) (தனித்தனி அஞ் ஞானங்களும் அஞ்ஞானத் தொகுதியும் ஒன்றேதான்).*

**एतदुपहितयोरीश्वरप्राज्ञयोरपि वनवृक्षावच्छिन्ना-काशयोरिव जलाशयजलगतप्रति-बिम्बाकाशयोरिव वाभेदः 'एष सर्वेश्वर' (माण्डू. उ. ६) इत्यादि श्रुतेः ॥ ४८ ॥**

ஏததுபஹிதயோ: ஈச்வர ப்ராஜ்ஞயோரபி வன-வ்ருக்ஷ அவிச்சின்ன ஆகாசயோரிவ ஜலாசய-ஜலகத ப்ரதிபிம்ப ஆகாசயோரிவ வா அபேத: 'ஏஷ ஸர்வேச்வர:' (மாண். உ. 6) இத்யாதி ச்ருதே ॥ 48 ॥

வனத்தினால் வரையறுக்கப்பட்டுள்ள ஆகாயத்திற்கும் மரங்களிலிருந்து வரையறுக்கப்பட்டுள்ள ஆகாயத்திற்கும் (வேறுபாடு இல்லாமல் இருப்பதைப் போல), குளத்தில் பிரதிபலிக்கும் ஆகாயத்திற்கும், நீர்த்திவலைகளில் பிரதிபலிக்கும் ஆகாயத்திற்கும் ஒற்றுமை இருப்பதைப்போல (வேறுபாடு இல்லாமல் இருப்பதைப் போல) இந்த (ஸமஷ்டி, வ்யஷ்டி அஞ்ஞானங்களை) உபாதியாகப் பெற்றுள்ள ஈஸ்வரன்-ப்ராஜ்ஞன் என்னும் இருவருக்கும் கூட ஒற்றுமை உள்ளது![1] 'இவன் ஸர்வேச்வரன்' (மாண். உ. 6) போன்ற சுருதி வாக்கியத்தால் இவ்விதம் அறியப்படுகிறது.

1. வேறுபாடு உபாதியால் ஏற்படுகிறது. உபாதியைப் புறக்கணித்தால் மூலவஸ்துவானது உண்மையாக ஒன்று தான். ஈஸ்வரன், ப்ராஜ்ஞன் என்னும் இருவருக்கும் சைதன்ய அம்சத்தினால் ஒற்றுமை இருக்கிறது. நடைமுறைக் கண்ணோட்டத்தில் ஒற்றுமையானது சாத்தியமில்லை என்பது அனுபவத்தால் உணரப்படுகிறது.

அத்வைத வேதாந்த விதியின்படி, ஜீவன், ஈஸ்வர பேதமானது அனாதி என்று ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது.

'ஜீவ ஈசோ விசுத்தா சித் ததா ஜீவேசயோர்பிதா அவித்யா தச்சிதோர்யோக ஷடஸ்மாக மனாதய: ।', 'நம்முடைய சித்தாந்தத்தில் ஜீவன், ஈஸ்வரன், தூய்மையான சித், ஜீவேஸ்வர பேதம், அவித்யை, அவித்யை மற்றும் சித்திற்கும் உள்ள தொடர்பு என்னும் இவ்வனைத்தும் அனாதிகள்.' இந்த சுலோகம் எதில் உள்ளது என்பது தெரியவில்லை.

2. சில பாட முறைகளில் உபநிஷத்தின் வாக்கியத்தை முழுமையாக உதாரணம் காட்டப்பட்டுள்ளது.

## துரீயத்தின் ஸ்வரூபம்

**वनवृक्षतदवच्छिन्नाकाशयोर्जलाश यजलतद्गतप्रति-बिम्बाकाशयोर्वाधारभूतानुपहिताकाश वदनयोरज्ञान-तदुपहितचैतन्ययोराधारभूतं यदनुपहितं चैतन्यं तत्तुरीयमित्युच्यते '(शान्तं) शिवमद्वैतं चतुर्थं मन्यते स आत्मा स विज्ञेयः' (माण्डू. उ. ७) इत्यादिश्रुतेः ॥ ४९ ॥**

வனவ்ருக்ஷ-ததவச்சின்ன-ஆகாசயோ: ஜலாசய-ஜல தத்கத-பிரதிபிம்ப ஆகாசயோர்வா ஆதாரபூத-அனுபஹித ஆகாசவத் அனயோ: அஞ்ஞான-தது பஹிதம் சைதன்யோ-ஆதாரபூதம் யத் அனுபஹிதம் சைதன்யம் தத் துரீயமித்-யுச்யதே '(சாந்தம்) சிவமத்வைதம் சதுர்த்தம் மன்யதே (ஸ ஆத்மாஸ விஜ்ஞேய:)' (மாண். உ. 7) இத்யாதி ச்ருதே ॥ 49 ॥

*காடு மற்றும் மரங்கள் இவற்றால் வரையறுக்கப் பட்ட இரண்டு ஆகாயங்களுக்கும் அல்லது குளம் மற்றும் நீர்த்திவலைகள்-இவற்றில் பிரதிபலிக்கப் பட்ட இரண்டு ஆகாயங்களுக்கும் ஆதாரமாக உள்ள, உபாதி தொடர்பில்லாத ஆகாயத்தைப்போல இந்த இரு வகையான அஞ்ஞானங்களும் (தனித்தனியாக ஜீவர் களிடம் காணப்படும் அஞ்ஞானத்திற்கும், மொத்தமான அஞ்ஞானத் தொகுதிக்கும்) அவற்றை உபாதியாகப் பெற்றுள்ள சைதன்னியங்களுக்கும் (அதாவது ஈசுவரன்-ப்ராஜ்ஞன் என்னும் இருவருக்கும்) ஆதாரமாக உள்ள எத்தகைய உபாதியுமற்ற சைதன்னியமானது*

இருக்கிறதோ (எல்லையற்றதொரு சைதன்னியம்) அதைத் துரீயம் என்றழைக்கின்றனர். 'சாந்தமாக இருப்பவனும், சிவஸ்வரூபனும், இரண்டாவது இல்லாதவனுமான அவனே துரீயம் என்று கருதுகின்றனர். அவனே ஆத்மா, அவனை அறிந்து கொள்ள வேண்டும்.' (மாண். உ. 7) என்பன போன்ற சுருதியிலிருந்தும் இவ்விதமாகத் தெரியவருகிறது.

இதுவரையிலும் உபாதியின் தொடர்பைப் பெற்றுள்ள சைதன்னியத்தின் விஷயத்தைக் குறித்துக் கூறப்பட்டது. இப்பொழுது, உபாதிகளை மீறி உள்ள தூய்மையான சைதன்னியத்தைப் பற்றி விவரிக்கிறார்.

எல்லையற்ற ஆகாயத்தை மஹாகாசம் என்று அழைக்கின்றனர். உபாதிகளால் எல்லைக்கு உட்படுத்தப்பட்டதைப்போல தோன்றும் ஆகாயங்களை அந்த அந்த உபாதியின் பெயரினாலேயே அழைக்கின்றனர். உதாரணம்—வ்ருக்ஷாகாசம், வனாகாசம், ஜலாகாசம், கடாகாசம் போன்றவையாகும். இந்த எல்லா ஆகாயங்களுக்கும் மஹாகாசம்தான் ஆதாரமாகும்; அடிப்படையாகும். அது இல்லை எனின் இவைகளும் இருக்கவியலாது. அதைப் போன்றே, மரங்களுக்கும் காட்டிற்கும், குளத்திற்கும் அவை இருப்பதற்கான வாய்ப்பை அளிப்பதால் மஹாகாசம்கூட ஒரு கண்ணோட்டத்தில் அவைகளுக்கு ஆதாரமாக உள்ளது.

இதைப் போன்றே வ்யஷ்டி, ஸமஷ்டி மற்றும் அஞ்ஞானங்களுக்கும் அவற்றின் தொடர்பை பெற்றுள்ள ப்ராஜ்ஞன்-ஈஸ்வரன் என்னும் சைதன்னியங்

களுக்கும் ஆதாரமாக உள்ள ஏதாவது வஸ்து உள்ளதா? இருக்கிறது. அதுதான் பரப்ரஹ்ம வஸ்து ஆகும்; ஆத்ம வஸ்து ஆகும். இந்த சைதன்னியத்தைத்தான் இங்கு 'துரீயம்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. பாணினியின் சூத்திரங்களில் (3.2.5) கூறப்பட்டுள்ளபடி 'சதுரீய' என்னும் சொல்லே முதல் எழுத்தானது நீக்கப்பட்டு 'துரீயம்' என்று ஆகியிருப்பதால் அதற்கு நான்காவது என்பது பொருளாக உள்ளது.

விழிப்பு, கனவு மற்றும் ஆழ்ந்த உறக்க நிலை என்னும் மூன்று நிலைகளுடன் தொடர்பு கொண்டிருக்கும் பொழுது ஜீவசைதன்னியமானது முறையாக விச்வ (அல்லது வைச்வானர), தைஜஸன் மற்றும் ப்ராஜ்ஞன் என்று அழைக்கப்படுகிறது என்பது முன்பே கூறப்பட்டுள்ளது (43). அதைப் போன்றே ஸமஷ்டி உபாதையுடன் கூடியிருக்கும்பொழுது பிரம்ம சைதன்னியத்திற்கும், மூன்று நிலைகளும், மூன்று பெயர்களும் கற்பிக்கப்பட்டுள்ளது (91, 111 பார்க்கவும்). ஸ்தூல பிரபஞ்சக் கண்ணோட்டத்துடன் பார்க்கும் பொழுது, ஸ்தூல பிரபஞ்சத்தின் ஸமஷ்டி என்று கற்பித்துக் கொள்ளும் பொழுது அது 'விராட்' எனப்படுகிறது. ஸூக்ஷ்ம பிரபஞ்ச கண்ணோட்டத்துடன் பார்க்கும் பொழுது, பிரபஞ்சத்தின் அந்தராத்மா என்று கற்பித்துக் கொள்ளும் பொழுது அது 'ஸூத்ராத்மா' அல்லது 'ஹிரண்யகர்ப்பன்' எனப்படுகிறது. காரண பிரபஞ்சக் கண்ணோட்டத்துடன் பார்க்கும் பொழுது, ஸ்ருஷ்டி, ஸ்திதி, இலயங்களைச் செய்பவனாகக் கருதும்பொழுது அது 'ஈஸ்வரன்' எனப்படுகிறது.

தூய்மையான சைதன்னியமானது இந்த மூன்றிற்கும் அப்பாற்பட்டு, மூன்றிற்கும் ஆதாரமாக இருப்பதால் 'துரீய' அல்லது நான்காவது எனப்படுகிறது.

இங்கு கொடுக்கப்பட்டுள்ள மாண்டூக்ய உபநிஷதத்துடன் கைவல்ய உபநிஷதத்தையும் (18) உதாரணமாகக் காட்டலாம்.

'த்ரிஷு தாமஸு யத்போக்யம் போக்தா போகச்ச
யத்பவேத் । தேப்யோ விலக்ஷண: ஸாக்ஷீ
சின்மாத்ரோஹம் ஸதாசிவ:' ॥

'மூன்று நிலைகளிலும் எது அனுபவிக்கப்படும் பொருள், அனுபவிப்பவர் மற்றும் அனுபவம் என்று கருதப்படுகிறதோ, அதைவிட வேறுபட்ட ஸாட்சியாகவும் கேவல சித்ரூபனுமான சதாசிவனே நான்.'

**इदमेव तुरीयं शुद्धचैतन्यमज्ञानादितदुपहितचैतन्याभ्याम् तप्तायःपिण्डवदविविक्तं सन्महावाक्यस्य वाच्यं विविक्तं सल्लक्ष्यमिति चोच्यते ॥ ५० ॥**

இதமேவ துரீயம் சுத்த சைதன்யம் அஞ்ஞானாதி ததுபஹித சைதன்யாப்யாம் தப்த-அய: பிண்டவத் அவிவிக்தம் ஸன் மஹாவாக்யஸ்ய வாச்யம் விவிக்தம் ஸன் லக்ஷ்யமிதி ச உச்யதே ॥ 50 ॥

நான்காவதாக உள்ள இந்த தூய்மையான சைதன்னியம்தான், அஞ்ஞானம் போன்ற மற்றும் அவற்றுடன் தொடர்பு உடைய இரண்டு சைதன்னியங்கள், இவைகளால் வேறுபடுத்தப்படாமல் இருக்கும்

பொழுது காய்ச்சப்பட்ட இரும்பு குண்டைப்போல (உருண்டையைப்போல) மஹாவாக்கியத்தின் நேரடியான பொருள் என்றும் வேறுபடுத்தப்படும்பொழுது உட்பொருள் என்றும் கூறப்படுகிறது.

ஒரு சொல்லிற்கு பொருளானது மூன்று வகைகளில் இருக்கக்கூடும். நேரடியான பொருள், உட்பொருள் மற்றும் மறைமுகமாக உணர்த்தப்படும் பொருள் ஆகும். இது விச்வநாத கவிராஜன் என்பவரின் 'ஸாஹித்ய தர்பணம்' என்னும் நூலில் வருமாறு விவரிக்கப்பட்டுள்ளது.

> 'வாச்யோர்த்த்தோऽபிதயா போத்யோ லக்ஷ்யோ
> லக்ஷணயாமத: । வ்யங்க்யோ வ்யஞ்சனயா தா:
> ஸ்யுஸ்திஸ்ர: சப்தஸ்ய சக்தய: ॥' *(2.3)*

சொல்லிற்கு நேரடியாகத் தென்படும் பொருள் தான் 'வாச்யார்த்தம்' ஆகும். உதாரணம், 'காம்ஆனய' (பசுவை அழைத்துக் கொண்டு வா). நேரடியான பொருளை உணரவியலாமல் இருக்கும் பொழுது வாடிக்கையாக உள்ளதையோ அதனுடைய நோக்கமாக உள்ள பயனை ஊகித்தோ அறியப்படும் பொருள்தான் லக்ஷ்யார்த்தமாகும். உதாரணம், 'கலிங்க: ஸாஹஸிக:'. கலிங்கம் என்னும் சொல்லானது நாட்டைக் குறிப்பிட்டாலும், இங்கு அந்தப் பொருள் பொருத்தமாக இல்லை என்பதால் கலிங்க நாட்டைச் சேர்ந்தவன் வீரன்' என்றுதான் பொருள் கொள்ள வேண்டும். ஒரு சொல்லிற்குப் பல பொருட்கள் இருக்குமாயின், அவற்றில் ஒன்றை மட்டும் தெளிவு படுத்துவதற்குத் தகுந்த

சொல்லைப் பயன்படுத்தும்பொழுது (மறைமுகமாக) 'வ்யங்க்யார்த்தம்' வெளிப்படுகிறது. உதாரணம், 'ஸசங்கசக்ரோ ஹரி' என்பதில், ஹரி என்னும் சொல் லிற்கு விஷ்ணு, எமன், வாயு, இந்திரன், சந்திரன், சிங்கம், குரங்கு போன்ற பல பொருட்கள் இருக்கும் பொழுது, விஷ்ணு என்னும் சொல்லைத் தெளிவுப் படுத்துவதற்கு ஸசங்கசக்ர: என்று கூறுவதால் இங்கு ஹரி என்னும் சொல்லின் மறைமுகமான பொருளாக 'விஷ்ணு' என்னும் சொல் உள்ளது. 'வ்யங்க்யார்த்தம்' என்னும் சொல் தொழில் நுட்பம், கலை நுட்பம் சார்ந்த சொல்லாகும்.

சுருதிகளின் நோக்கமாக (குறியாக), இலட்சியமாக உள்ள ஆத்மஸ்வரூபம், பிரம்மஸ்வரூபம், ஆத்ம-பிரம்ம ஐக்கியம் என்னும் இவற்றை உணர்த்தும் வாக்கியங்களுக்கு மஹாவாக்கியங்கள் என்பது பெய ராகும். அத்வைத வேதாந்தத்தின் நடைமுறையில் மஹா வாக்கியங்கள் நான்கு என்று பெயர் பெற்றுள்ளன.

'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம', 'ப்ரஜ்ஞானமே பிரம்மன்' (ஐ. உ. 5.3 ரிக்வேதம்).

'அஹம் ப்ரஹ்மாஸ்மி', 'நான் பிரம்மனாக இருக்கிறேன்' (பிரு. உ. 1.4.10, யஜுர் வேதம்).

'தத் த்வம் அஸி', 'அது நீயாக உள்ளாய்' (சாந். உ. 9.8.6, ஸாம வேதம்).

'அயமாத்ம ப்ரஹ்ம', 'இந்த ஆத்மனே பிரம்ம னாகும்' (மாண். உ. 2, அதர்வண வேதம்).

இந்த மஹாவாக்கியங்களுக்கு, நேரடியான பொருள், உட்பொருள் என்னும் இரண்டும் சாத்திய மானதாகும். இரண்டுமே சைதன்னியத்தையே குறிப்பிடுகின்றன. ஆனால் நேரடியான பொருளானது, உபாதியுடன் கூடிய சைதன்னியத்தையும், உட்பொருளானது உபாதியற்ற சைதன்னியத்தையும் குறிப்பிடுகிறது. இதனைத் தெளிவுபடுத்துவதற்கு ஒரு உதாரணத்தைக் கொடுத்துள் ளேன். காய்ச்சப்பட்டுள்ள இரும்பு குண்டைத் தொடும் பொழுது கை சுடுகிறது. இரும்பு குண்டானது கையைச் சுட்டுவிட்டது என்று கூறினாலும் அல்லது காய்ச்சிய இரும்பு குண்டில் உள்ள சூடானது கையைச் சுட்டு விட்டது என்று கூறினாலும், சுடுவது நெருப்பின் அம் சமே தவிர, இரும்பின் அம்சம் அல்ல. முதலில் கூறப் பட்டிருப்பது நடைமுறையிலுள்ள சொல் ஆகும். இதில் நெருப்பின் அம்சமும் கலக்கப்பட்டுள்ளது. இரண்டாவதாகக் கூறப்பட்டிருப்பது தர்க்கத்துடன் தொடர்புடைய சொல்லாகும். இதில் வஸ்துவும், உபாதியும் இணைக்கப்படவில்லை.

அதைப் போன்றே 'தத் த்வம் அஸி'-'அது நீயாக உள்ளாய்' என்னும் மஹாவாக்கியத்தில் 'அது' என்னும் சொல் பிரம்மனையும், 'நீ' என்னும் சொல் ஜீவாத் மனையும் குறிப்பிடுகிறது. 'ஜீவாத்மனே பிரம்மன்' என்பது நேரடியான பொருளாகும். இது ஆத்ம சைதன்னியத்தையும், அதற்கு உயிர்ப்புத் தன்மையை ஏற்படுத்தியுள்ள உடல், புலன்கள், மனம் போன்ற உபாதிகளையும் வேறுபடுத்தாமல் கூறப்பட்டுள்ள சொல்லாகும். 'ஜீவாத்மாவிலுள்ள சைதன்னிய

அம்சமே—இரும்பு குண்டையும், நெருப்பையும் வேறு படுத்தி இருப்பதைப் போல (உலகைப் படைத்தவனான) பிரம்மனின் சைதன்னிய அம்சம்' என்பது லக்ஷ்யார்த்தமாகும். இங்கு உபாதியினால் வஸ்துவை வேறுபடுத்தப்பட்டுள்ளது. மொத்தத்தில் இரு பொருட்களும் சைதன்னியத்தையே கூறுகின்றன.

## அஞ்ஞானத்தின் இரு சக்திகள் மற்றும் அவற்றின் செயல்கள்

**अस्याज्ञानस्यावरणविक्षेपनामकमस्ति शक्तिद्वयम् ॥ ५१ ॥**

அஸ்ய அஞ்ஞானஸ்ய ஆவரண விக்ஷேப நாமகம் அஸ்தி சக்தித்வயம் ॥ 51 ॥

இந்த அஞ்ஞானத்திற்கு ஆவரணம் மற்றும் விக்ஷேபம் என்னும் பெயரை உடைய இரு சக்திகள் உள்ளன.

தானே ஒளிர்பவனாகவும், சித் வடிவினனுமான ஆத்மாவிற்கு, தன் ஸ்வரூபத்தைப் பற்றிய மறதி மற்றும் உடல் போன்ற சாதாரணமான பொருட்களுடன் வேறுபாடற்ற தன்மை போன்ற இவை எப்படி ஏற்பட்டன? பிணைப்பற்றவனும் எதிலும் சாராதவனுமாக விளங்கும் ஆத்மாவிடமிருந்து ஆகாசம் போன்றவை எப்படித் தோன்றின? இந்த முரண்பாட்டை அகற்றுவதற்காக இந்த விளக்கத்தைத் தொடங்கியுள்ளேன்.

எது ஆத்மாவின் சச்சிதானந்த ஸ்வரூபத்தைச் சூழ்ந்து கொண்டுள்ளதோ, மறைத்துள்ளதோ அது

'ஆவரண சக்தி'யாகும். எது உலகத்தை ஆத்மாவிடமிருந்து வெளியிலே இழுக்கிறதோ, அதாவது ஆத்மாவிடமிருந்து உலகமானது வெளியில் வருமாறு அல்லது தெளிவாகக் காணும்படி வெளிப்படுத்துகிறதோ அது 'விக்ஷேப சக்தி'யாகும். இந்த இரண்டும் ஒரே அஞ்ஞானத்தின் இரு முகங்களே தவிர சுதந்திரமான சக்திகள் இல்லை.

**आवरणशक्तिस्तावदल्पोऽपि मेघोऽनेकयोजनायतमादित्यमण्डलमवलोकयितृनयनपथपिधायकतया यथाच्छादयतीव तथाज्ञानं परिच्छिन्नमप्यात्मानमपरिच्छिन्नमसम्सारिणमवलोकयितृबुद्धिपिधायकतयाच्छादयतीव तादृशं सामर्थ्यम् । तदुक्तं—'घनच्छन्नदृष्टिर्घनच्छन्नमर्कं यथा मन्यते निष्प्रभं चातिमूढः । तथा बद्धवद्भाति यो मूढदृष्टेः स नित्योपलब्धिस्वरूपोऽहमात्मा ॥' इति (हस्तामलकम् १०) ॥**

ஆவரணசக்தி: தாவத்: அல்ப: அபிமேக-அனேக யோஜனாய தம் ஆதித்யமண்டலம் அவலோகயித்ரு-நயனபத பிதாயகதயா யதா ஆச்சாதயதி இவ ததா அஞ்ஞானம் பரிச்சின்னமபி ஆத்மானம் அபரிச்சின்னம் அஸம்ஸாரிணம் அவலோகயித்ரு-புத்தி பிதாயகதயா ஆச்சாதயதி இவ தாத்ருசம் ஸாமர்த்யம் । ததுக்தம்—'கனச்சன்ன த்ருஷ்டிர்கனச்சன்ன மர்கம் யதா மன்யதே நிஷ்ப்ரபம் சாதிமூட: । ததா பத்தவத்பாதியோ மூட த்ருஷ்டே: ஸ நித்யோ பலப்தி ஸ்வரூபோऽஹமாத்மா ॥ ' இதி (ஹஸ். ஸ்தோ. 10)

ஆவரண சக்தி—மேகம் சிறியதாக இருந்தாலும் பல யோஜனைகளுக்குப் பரந்துபட்டதாக உள்ள சூரிய மண்டலத்தைப் பார்த்துக் கொண்டிருப்பவனின் பார்வையை மறைப்பதன்மூலம் எப்படி (சூரிய மண்டலத்தை) மறைத்து விடுவதைப் போல தோன்று கிறதோ அதைப் போன்றே வரையறைக்கு உட்பட் டிருப்பினும் அஞ்ஞானமானது வரையறையற்றவனும், பிறப்பு இறப்பு அற்றவனுமான ஆத்மாவைப் பார்த்துக் கொண்டிருப்பவனின் புத்தியை மறைப்பதன்மூலம் எப்படி மறைத்து விடுவதைப் போலத் தோன்றுகிறதோ அத்தகைய சாமர்த்தியமாகும். அது வருமாறு விவரிக்கப்பட்டுள்ளது.

'மிகவும் முட்டாளான ஒருவன், தன்னுடைய பார்வையானது மேகத்தால் மறைக்கப்பட்டிருக்கும் பொழுது (எப்படி) மேகத்தால் மறைக்கப்பட்டிருக்கும் சூரியனை ஒளியற்றவன் என்று எண்ணுகின்றானோ அதைப் போன்றே (அறியாதவனின்) மூடபுத்திக்கு யார் பிணைப்பிற்கு ஆட்பட்டவன் என்று தென்படு கிறானோ, அந்த நித்யஞான ஸ்வரூபனாக உள்ள ஆத்மாவே நான்!' (ஹஸ். ஸ்தோ. 10).

ஆத்மாவானவன் எல்லையற்றவன். தானே ஒளிர் பவன். சித்ரூபன். அகண்டமான பரிபூர்ணமான ஸ்வரூப னாவான். அஞ்ஞானமோ, எல்லைக்கு உட்பட்டது. ஜடம். தமோ குணம் உடையது. இந்த அஞ்ஞான மானது அத்தகைய ஆத்மாவை எப்படி மறைக்க வியலும்? இந்தச் சந்தேகமானது ஒரு உதாரணத்தின் மூலம் அகற்றப்பட்டுள்ளது.

மேகமானது சூரியனை மறைப்பதில்லை. அதைப் பார்த்துக் கொண்டிருப்பவனின் பார்வையின் வழியை மறைக்கிறது. சூரியன் எப்பொழுதும் ஒளிர்ந்து கொண்டே இருக்கிறது. அதைப் போன்றே ஆத்மாவும் எப்பொழு தும் ஒளிர்ந்து கொண்டிருந்தாலும் சூழ்ந்துள்ள அஞ் ஞானத்தின் சக்தியானது நம்முடைய புத்தியை மறைத்துக் கொண்டிருப்பதால் அவனை (ஆத்மா) நம் முடைய அனுபவத்தால் அறிவதற்கு இயலுவதில்லை. ஆத்மாவிற்குப் பந்தமோ அல்லது மோக்ஷமோ இல்லை. புத்தியின் மீது கவிழ்ந்துள்ள அஞ்ஞானத்தினால் அவ் விதம் தோன்றுகிறது.

**अनया आवृतस्यात्मनः कर्तृत्वभोक्तृत्वसुखित्वदुःखित्वादिसम्सारसम्भावनापि भवति यथा स्वाज्ञानेनावृतायां रज्वां सर्पत्वसम्भावना ॥ ५३ ॥**

அனயா ஏவ ஆவரண சக்த்யா அவச்சினஸ்ய ஆத்மண: கர்த்ருத்வ போக்த்ருத்வ ஸுகது:க்கமோஹாத்மக—துச்ச-ஸம்ஸாரபாவனா அபி ஸம்பாவ்யதே யதா ஸ்வ அஞ்ஞானேன அம்ருதாயாம் ரஜ்ஜ்வாம் ஸர்பத்வ ஸம்பாவனா ॥ 53 ॥

சூழ்ந்துள்ள இந்த ஆவரண சக்தியினால் எல்லைக்கு உட்பட்டதைப் போலத் தோன்றும் ஆத்மா விற்கு செய்பவன் (கர்த்தா), அனுபவிப்பவன் (போக்தா) இன்பம், துன்பம், மோகம் என்னும் இவற் றின் இயல்பை உடைய துச்சமான உலகியலைச் சார்ந் துள்ள தன்மையும்கூட-தன்னுடைய அஞ்ஞானத்தி னால் கயிற்றைப் பாம்பு என்று கருதும் எண்ணமானது சூழ்ந்து ஏற்படுவதைப்போல ஏற்படுகிறது.

கயிறானது—அஞ்ஞானத்தின் பயனாக விளங்கு கிறது. உண்மையில், அந்த இரண்டுமே ஒன்றுதான். அதனால் அஞ்ஞானமானது கயிற்றை மறைப்பதற்குச் சாத்தியமே இல்லை. அது கயிற்றைப் பார்த்துக் கொண் டிருப்பவனின் ஞானத்தை மறைத்துக் கொண்டுள்ளது. இது ஏற்கனவே மேகத்தை உதாரணமாகக் கொடுத்து விவரிக்கப் பட்டுள்ளது. அதைப் போன்றே அஞ்ஞான மானது ஆவரண சக்தியின்மூலம் ஆத்மாவின் பிணைப் பற்ற தன்மை சித்ஸ்வரூபத்தன்மை போன்ற இயல்பு களை மறைத்து அவனிடம் இல்லாமலுள்ள செய லாற்றுதல், அனுபவித்தல் போன்ற இயல்புகளை ஏற்றி, உலகியல் மனிதனைப் போல மாற்றி விடுகிறது. இது எவ்விதம் சாத்தியமாகும் என்பதை விவரிப்ப தற்குக் கயிறு-பாம்பு உதாரணமானது கொடுக்கப்பட் டுள்ளது. மங்கலான இருளானது கயிற்றின் இயல்பை மறைப்பதோடு மட்டுமின்றி அதைப் பாம்பைப் போல வும் தோன்றுமாறு செய்துவிடுகிறது. இந்த இரண்டாம் அம்சத்தை விக்ஷேப சக்தி என்று அழைக்கிறார்கள். இது அடுத்த ஸூத்திரத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

**विक्षेपशक्तिस्तु यथा रज्ज्वज्ञानं स्वावृतरज्जौ स्वशक्त्या सर्पादिकमुद्भावयत्येवमज्ञान-मपि स्वावृतात्मनि स्वशक्त्या-ऽऽकाशादिप्रपञ्चमुद्भावयति तादृशं सामर्थ्यम् । तदुक्तं— 'विक्षेपशक्तिर्लिङ्गादि ब्रह्माण्डान्तं जगत् सृजेत्' इति । (वाक्यसुधा १३) ॥ ५४ ॥**

விக்ஷேபசக்திஸ்து யதா ரஜ்ஜ்வஞானம் ஸ்வாவ்ருத-ரஜ்ஜௌ ஸ்வசக்த்யா ஸர்பாதிகம் உத்பாவயதி ஏவம்

அஜ்ஞானமபி ஸ்வாவ்ருதாத்மனி விக்ஷேப சக்த்யா ஆகாசாதி-ப்ரபஞ்சம் உத்பாவயதி தாத்ருசம் ஸாமர்த்யம் தத்துக்தம்— 'விக்ஷேபசக்திர்லிங்காதி-ப்ரஹ்மாண்டாந்தம் ஜகத் ஸ்ருஜேத்' (வா. ஸு. 13) இதி ॥ 54 ॥

*விக்ஷேப சக்தி என்பது, எப்படி கயிற்றைக் குறித்துள்ள அஞ்ஞானமானது[1] தன்னால் மறைக்கப்பட்டுள்ள கயிற்றின் மீது, தன் சக்தியினால் பாம்பு போன்றவற்றை ஏற்படுத்துகிறதோ, அதைப் போன்றே அஞ்ஞானமும் (தன்னுடைய சொந்த சக்தியால்) தன்னால் மறைக்கப்பட்டுள்ள ஆத்மாவின் மீது விக்ஷேப சக்தியால் ஆகாசம் போன்ற உலகத்தைத்[2] தோற்றுவிக்கும் திறமையாகும். அது 'விக்ஷேப சக்தியானது', இலிங்க சரீரத்திலிருந்து பிரம்மாண்டம் வரையிலுள்ள உலகத்தைத் தோற்றுவிக்கிறது' (ஸூக்ஷ்மமான பொருட்களிலிருந்து அண்டபகிரண்டங்கள் ஈறாக உள்ள அனைத்தையும் இந்த விக்ஷேபசக்தியானது தோற்றுவிக்கிறது) என்று கூறப்பட்டுள்ளது (வா. ஸு. 13).[3]*

*பிணைப்பற்றவனும், சித்ரூபனுமான ஆத்மா, இந்த சராசர உலகத்தை எப்படித் தோற்றுவிக்கிறான்? இந்தச் சிக்கலை விடுவிப்பதன் பொருட்டு அஞ்ஞானத்தின் விக்ஷேப சக்தியை விவரிக்க வேண்டியுள்ளது.*

*1. ரஜ்ஜ்வஞ்ஞானம்' என்னும் சொல்லானது நடைமுறைக் கண்ணோட்டத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது. எங்கும் நிறைந்துள்ள சைதன்னியமானது உபாதியாக உள்ள கயிற்றால் எல்லைக்கு உட்பட்டவனைப் போலத் தென்படும் பொழுது அதைக் கயிறு என்று நடைமுறையில்*

கூறுகிறோம். அஞ்ஞானம் என்னும் சொல்லானது, எந்த சைதன்னியமானது கயிற்றிற்கு ஆதாரமாக இருக்கிறதோ, அதனுடன் தொடர்பு உடையது ஆகும்.

2. தைத்திரீய உபநிஷதத்தில் (2.1) படைப்பின் வரிசை முறையானது வருமாறு விவரிக்கப்பட்டுள்ளது.

'தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மன ஆகாச: ஸம்பூத: ।
ஆகாசாத்வாயு: । வாயோரக்னி: । அக்னேராப: அத்ப்ய:
ப்ருதிவீ । ப்ருதிவ்யா ஓஷதய: । ஓஷதீப்யோ஽ன்னம் ।
அன்னதாத்புருஷ: ॥' 1.2

'நம்மில் ஆன்மாவாக உள்ள (இறைவனிடமிருந்து) ஆகாயம் தோன்றியது. ஆகாயத்திலிருந்து காற்று, காற்றிலிருந்து நெருப்பு, நெருப்பிலிருந்து நீர், நீரிலிருந்து பூமி, பூமிலிருந்து செடி, கொடிகள், செடிகொடிகளிலிருந்து உணவு உணவிலிருந்து மனிதன் தோன்றினான் (இதுதான் படைப்பின் வரிசை முறையாகும்).'

3. ஸ்ரீ சங்கராச்சாரியாருடைய த்ருக்-திருச்ய-விவேகம் என்னும் நூலானது வாக்யஸுதா என்றும் அழைக்கப்படுகிறது. இது பாரதி தீர்த்தர் அவர்கள் எழுதிய நூல் என்று சிலர் கூறுகின்றனர்.

ஆத்மனானவன் பிணைப்பற்றவனாகவும் சித்ரூபனாகவும் இருப்பினும் கூட, ஆவரண-விக்ஷேப சக்தியுடன் கூடிய அஞ்ஞானத்தை உபாதியாகப் பெற்று இருக்கும் பொழுது, ஜகத்காரணன் என்று கருதப்படுகிறான் என்பது ஒட்டு மொத்தமான கருத்தாகும்.

'வித்வன்மனோரஞ்சனீ' என்னும் நூலிற்கு விளக்கவுரை எழுதியுள்ள ஸ்ரீராமதீர்த்தர் இந்த இடத்தில் ஸர்வஜ்ஞாத்ம முனிவரின் 'ஸம்க்ஷேபசாரீரகத' என்னும் நூலிலிருந்து (1.20) ஒரு சுலோகத்தை உதாரணமாகக் காட்டி உள்ளார்.

'ஆச்சாத்ய விக்ஷிபதி ஸம்ஸ்ᄀப்ரதாத்ம ரூபம்
ஜீவேச்வரத்வ ஜகதாக்ருதி பிர்ம்ருஷ்டைவ ।
அஞ்ஞானமாவரண விப்ரமசக்தி யோகாத் ஆத்மத்வமாத்ர
விஷயாச்ரயதாபலேன ॥'

'ஆத்மாவை மட்டுமே விஷயமாகவும், மூலமாகவும் கொண்டு, அதன் சக்திகளுடன் சேர்ந்து இருப்பதால் அஞ்ஞானமானது, ஒளி பொருந்தியதாகத் திகழும் ஆத்ம ரூபத்தை மறைத்து, பொய்யாகவே ஜீவன், ஈசுவரன், உலகம் போன்ற வடிவங்களால் விக்ஷேபத்தை ஏற்படுத்துகிறது.'

**शक्तिद्वयवदज्ञानोपहितं चैतन्यं स्वप्रधानतया निमित्तं स्वोपाधिप्रधानतयोपादानञ्च भवति ॥ ५५ ॥**

சக்தித்வயவத்-அஞ்ஞான-உபஹிதம் சைதன்யம் ஸ்வப்ரதானதயா நிமித்தம் ஸ்வோபாதிப்ரதானதயா உபா-தானம் ச பவதி ॥ 55 ॥

இரண்டு சக்திகளுடன் சேர்ந்துள்ள அஞ்ஞானத்தை உபாதியாகப் பெற்றுள்ள சைதன்னியமானது (அஞ்ஞானத்துடன் கூடியுள்ள) தன்னைப் பொறுத்த மட்டில் நோக்குமிடத்து (உலகத்திற்கு) நிமித்த காரணமாகவும், தன்னுடைய உபாதியாக உள்ள அஞ்ஞானத்துடன் கூடிய நிலையில் பார்க்கும் பொழுது உபாதான காரண மாகவும் ஆகிறது (முதல் காரணம்).

பானைக்கு மண் முதல் காரணம் ஆகும். குயவன் நிமித்த காரணம் ஆவான். துணிக்குப் பஞ்சு அல்லது நூல் முதல் காரணம் ஆகும். நெய்பவன் நிமித்த காரணம் ஆவான். அதைப் போன்றே இந்த உலகத்திற்கு

முதற் காரணம் எது? நிமித்த காரணம் எது? சைதன்னியம் நிமித்த காரணமாகவோ அல்லது முதற்காரணமாக அல்லது இரண்டுமாக ஆவதற்கு இயலுமா? சைதன்னியமானது அபின்ன-நிமித்த உபாதான காரணம் என்பது வேதாந்தத்தின் கருத்து ஆகும். படைப்புச் செயலில் அஞ்ஞானத்துடன் உள்ள சைதன்னியம்தான் முக்கியமானதாக உள்ளது என்று எண்ணும் பொழுது அது நிமித்த காரணமாகக் கருதப்படுகிறது. உபாதியாக உள்ள அஞ்ஞானத்தை முக்கியமாகக் கருதும் பொழுது இந்த அஞ்ஞானமே உபாதான காரணமாக இருந்தாலும் (முதற்காரணம்), சைதன்னியத்தின் ஆதாரம் இல்லாமல் அது இருக்கவியலாது என்பதால் சைதன்னியமும் உபாதான காரணமாகக் (முதற் காரணமாக) கருதப் படுகிறது.

இந்த உலகில் பொதுவாக உபாதானம் மற்றும் நிமித்தம் என்பவை வேறு வேறாக உள்ளன. உபாதானமானது ஜடம். நிமித்தமானது சேதனமாகும். ஆனால் இந்த இரண்டும் எப்பொழுதுமே வேறு வேறாக இருக்க வேண்டும் என்னும் நியமம் எதுவும் இல்லை. இது அடுத்த சூத்திரத்தில் உதாரணத்தின் மூலம் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

**यथा लूता तन्तुकार्यं प्रति स्वप्रधानतया निमित्तं स्वशरीरप्रधानतयोपादानञ्च भवति ॥ ५६ ॥**

யதா லூதா தந்துகார்யம் ப்ரதி ஸ்வப்ரதானதயா நிமித்தம் ஸ்வசரீரப்ரதானதயா உபாதானம் ச பவதி ॥ 56 ॥

உதாரணம்—சிலந்தியானது தன்னுடைய வலையின் விஷயத்தில் தன்னைப் பொறுத்தமட்டில் நிமித்த காரணமாக உள்ளது. மற்றும் தன்னுடைய உடலை வைத்து நோக்கும்பொழுது உபாதான காரணமாக உள்ளது.

சிலந்தியானது வலையைத் தன்னிடமிருந்து தானே தோற்றுவிக்கிறது. உயிரற்ற உடலால் தன்னிடமிருந்து தானே வலையைத் தோற்றுவிக்கவியலாது. உடலின் உதவியின்றி உயிராலும் அச்செயலைச் செய்யவியலாது. அந்த இரண்டும் இருந்தால்தான் வலையைத் தோற்றுவிக்க இயலும். வலையைத் தோற்றுவிப்பதற்குத் தேவையான பொருளானது அதனுடைய உடலிலிருந்தே கிடைப்பதால் அது உபாதான காரணம் ஆகிறது. செய்யும் செயலும் அதனாலேயே நடப்பதால் அது நிமித்த காரணமாகவும் உள்ளது.

இங்கு கொடுக்கப்பட்டுள்ள சிலந்தியின் உதாரணத்தின் மூலம் முண்டக உபநிஷதத்தில் உள்ளது (1.1.7).

'யதோர்ணநாபி: ஸ்ருஜதே க்ருஹ்ணதே ச
யதா ப்ருதிவ்யாம் ஓஷதய: ஸம்பவந்தி ।
யதா ஸத: புருஷாத் கேசலோமானி
ததாக்ஷராத் ஸம்பவதீஹ விச்வம் ॥'

'எவ்வாறு சிலந்தி தன்னிடமிருந்து வலைநூலை வெளிப்படுத்தவும், தன்னிடம் அடக்கிக் கொள்ளவும் செய்கிறதோ, எவ்வாறு பூமியிலிருந்து செடி, கொடிகள் தோன்றுகின்றனவோ, வாழும் மனிதனிடம் எவ்வாறு முடி வளர்கிறதோ அவ்வாறே அழிவற்ற இறைவனிடமிருந்து இந்தப் பிரபஞ்சம் தோன்றுகிறது' (1.1.7).

*பிரம்மஸூத்திரத்தில் (1.4.23)*

*'ப்ரக்ருதிச்ச ப்ரதிஜ்ஞா-த்ருஷ்டாந்த அனுபரோதாத்' என்னும் ஸூத்திரத்தில் பிரம்மன், அபின்ன, நிமித்த, உபாதான காரணம் என்னும் வாதத்தை முன்வைத்துள்ளது.*

## ஸ்ருஷ்டிக்ரம—ஸூக்ஷ்ம பூதங்கள்

**तमःप्रधानविक्षेपशक्तिमदज्ञानोपहितचैतन्यादाकाश आकाशाद्वायुर्वायोरग्निरग्नेरा-पोऽद्भ्यः पृथिवी चोत्पद्यते 'एतस्मादात्मन आकाशः सम्भूतः' (तै. उ. २.१.२) इत्यादिश्रुतेः ॥ ५७ ॥**

தம: ப்ரதான விக்ஷேபசக்திமத் அஞ்ஞானோபஹித-சைதன்யாத் ஆகாச: ஆகாசாத்வாயு: வாயோரக்னி: அக்னே ராப: ஆதப்ய: ப்ருதிவீ ச உத்பத்யதே ॥ ஏதஸ்மாதாத்மன ஆகாச: ஸம்பூத: (தை. உ. 2.1.2) இத்யாதி ச்ருதே ॥

*தமோ குணத்தை முதன்மையாகப் பெற்றுள்ள விக்ஷேப சக்தியுடன் சேர்ந்துள்ள அஞ்ஞானத்தை உபாதி யாகப் பெற்றுள்ள சைதன்னியத்தால் ஆகாயமும் ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்னி யும், அக்னியிலிருந்து நீரும், நீரிலிருந்து பூமியும் தோன்றுகின்றன. 'இந்த ஆத்மாவிடமிருந்து ஆகாயம் ஏற்பட்டது' (தை. உ. 2.1.2) போன்ற சுருதி வாக்கியத் தால் இவ்விதம் அறியப்படுகிறது.*

*ஆவரணம் மற்றும் விக்ஷேபம் என்னும் இரு சக்திகளுடன் சேர்ந்துள்ள அஞ்ஞானத்தை உபாதியாகப்*

பெற்றுள்ள சைதன்னியமே (பிரம்மமே) இவ்வுலகிற்கு அபின்ன-நிமித்த-உபாதான காரணம் என்று கூறியாகி விட்டது. இப்பொழுது பிரம்மனிடமிருந்து இந்த உலகம் எப்படித் தோன்றுகிறது என்னும் விவரமானது விவரிக்கப்படுகிறது.

ஜடமாக உள்ள இயற்கை அமைதியே இவ்வுலகத் திற்கு மூல காரணமாகும் என்பது சாங்கியர்களின் சித்தாந்தமாகும். ஆகாயம் போன்ற ஒன்பது திரவியங் களை (மூலப்பொருட்களை) நித்தியமானது என்று கருதும் நியாயக் கோட்பாட்டாளர்கள் அவைகளின் ஒருங்கிணைவால் இவ்வுலகமானது தோன்றி உள்ளது என்று கூறுகின்றனர். இந்தக் கோட்பாடுகள் அனைத் தும் பிரம்ம சூத்திரத்தில் (1.1.5; 2.2.1,11,17) மறுக்கப் பட்டுள்ளது.

வேதாந்தக் கோட்பாட்டின் படி சைதன்னிய வடிவ மாகத் திகழும் பிரம்மம்தான் ஜகத்காரணம் ஆகும். 'புருஷ ஏவேதம் ஸர்வம்', 'இவ்வனைத்தும் புருஷனே' (ரி. ஸம். 10.90.2).

'யதோ வா இமானி பூதானி ஜாயந்தே யேன ஜாதானி ஜீவந்தி யத்ப்ரயந்த்ய பிஸம் விசந்தி தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்மேதி ॥'

'எதிலிருந்து இந்தப் பிராணிகள் தோன்றுகின்ற னவோ, அதைப்போன்றே தோன்றியவை எல்லாம் எதனால் வாழ்கின்றனவோ மற்றும் மரணத்திற்குப் பிறகு எதனிடம் ஒடுங்குகின்றனவோ அதை அறிந்து கொள். அது பிரம்மன்' (தை. உ. 3.1).

'அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே।', 'நான் அனைத்திற்கும் பிறப்பிடம், என்னிடமிருந்தே அனைத்தும் (தன் செயலில்) தொடக்கம் கொள்கின்றன' (கீதை 10.8). இத்தகைய சுருதி, ஸ்ம்ருதி வாக்கியங்கள் இந்த வாதத்தை உறுதி செய்கின்றன.

சைதன்னியத்திலிருந்து ஆகாயம் தோன்றுகிறது. சைதன்னியம் முழுமையாக உள்ள ஆகாயத்திலிருந்து வாயு உண்டாகிறது. இதைப் போன்றே மற்றவையும் தோன்றுகின்றன என்று அறிய வேண்டும். சைதன்னியத்தின் உதவியின்றி படைப்பு நிகழவியலாது.

*1.* படைப்பைக் குறித்து விவரிக்கும் வேறு சில சுருதி வாக்கியங்களை இங்கு உதாரணமாகக் காட்டலாம்.

'ஸ ப்ராணமஸ்ருஜத ப்ராணாச்ச்ரத்தாம் கம்
வாயுர்ஜ்யோதிராப:
ப்ருதி வீந்த்ரியம் மன: । அன்னமன்னாத்வீர்யம்
தபோ மந்த்ரா: கர்மலோகா: லோகேஷு ச நாம ச ॥'

'அந்தப் புருஷன் பிராணனைப் படைத்தான். பிராணனிலிருந்து புத்தி, ஆகாசம், காற்று, நெருப்பு, நீர், பூமி, புலன்கள், மனம், உணவு ஆகியவை தோன்றின. உணவிலிருந்து ஆற்றல், தவம், மந்திரங்கள், கிரியைகள், உலகங்கள் எல்லாம் தோன்றின. உலகங்களில் பெயர்கள் படைக்கப்பட்டன' (பிர. உ. 6.4).

'ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மன:
ஸர்வேந்த்ரியாணி ச
கம் வாயுர்ஜ்யோதிராப: ப்ருதிவீ விச்வஸ்ய தாரிணீ ॥'

'பிராணன், மனம், புலன்கள், ஆகாயம், காற்று, நெருப்பு, நீர் அனைத்தையும் தாங்குகின்ற பூமி எல்லாம் அந்த இறைவனிலிருந்தே தோன்றின' (முண். உ. 2.1.3).

'ததைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி
தத்தேஜோऽஸ்ருஜத, தத்தேஜ ஐக்ஷத பஹுஸ்யாம்
ப்ரஜாயேயேதி ததபோऽஸ்ருஜத ॥'

'அந்த ஸத் வஸ்துவானது நான் பலவாக ஆவேன். வெகுவாக வளர்வேன் என்று யோசித்தது. அது ஒளியைத் தோற்றுவித்தது. அந்த ஒளிரூபமான ஸத், "நான் பலவாக ஆவேன்" என்று யோசித்து நீரைத் தோற்றுவித்தது' (சாந். உ. 6.2.3).

**तेषु जाड्याधिक्यदर्शनात्तमःप्राधान्यं तत्कारणस्य । तदानीं सत्त्वरजस्तमांसि कारणगुणप्रक्रमेण तेष्वाकाशादिषूत्पद्यन्ते ॥ ५८ ॥**

தேஷு ஜாட்யாதிக்ய தர்சனாத் தம: ப்ராதான்யம் தத்காரணஸ்ய! ததானீம் ஸத்வ ரஜஸ்த மாம்ஸி காரண-குணப்ரக்ரமேண தேஷு ஆகாசாதிஷு உத்பத்யந்தே ॥ 58 ॥

அவைகளில் [1] ஜடத்தன்மையானது அதிகமாகக் காணப்படுவதால், அவற்றின் காரணமும் (cause) தமோ குணங்களையே முதன்மையாகப் பெற்றிருக்க வேண்டும். அப்பொழுது, [2] ஸத்துவம், ரஜோ, தமோ என்னும் காரணத்தின் குணங்கள் (காரியங்களில்) (effect) முறையாகக் காணப்படும் என்னும்

விதிமுறையால், நியாயத்தினால்[3] அந்த ஆகாயம் போன்றவற்றில்[4] தோன்றுகிறது.

1. ஆகாயம் போன்றவற்றில்.

2. படைப்பு நடைபெறும்பொழுது.

3. காரணத்தில் எந்த எந்த குணங்கள் எந்தெந்த விதி முறையில் மற்றும் எந்த அளவிற்கு இருக்குமோ அதே விதி முறையில் மற்றும் அதே அளவில் காரியத்திலும் காணப் படும்.

4. ஆகாயம் போன்ற ஐந்து சூட்சும பூதங்களில் ஸத்துவம் போன்ற மூன்று குணங்கள் இருந்தாலும் அவை களில் தமோ குணத்தின் இயல்புதான் அதிகமாக உள்ளது. பஞ்ச பூதங்களை ஒன்றுடன் ஒன்று ஒப்பிட்டால் ஆகாயத் தில் ஸத்துவ அம்சம் அதிகமாகவும், பூமியில் தமோ குண மானது அதிகமாகவும் உள்ளது.

**एतान्येव सूक्ष्मभूतानि तन्मात्राण्यपञ्चीकृतानि चोच्यन्ते ॥**

ஏதானி ஏவ ஸூக்ஷ்ம பூதானி தன்மாத்ராணி அபஞ்சீக்ருதானி ச உச்யந்தே ॥ 59 ॥

இவைகளே[1] 'ஸூக்ஷ்ம பூதங்கள்'[2] தன்மாத்திரை கள்[3] மற்றும் அபஞ்சீக்ருதங்கள்[4] (கலக்கப்படாத) என்று அழைக்கப்படுகின்றன.

1. ஆகாயம் போன்ற பூதங்களே.

2. காரியத்திற்குப் பயன்படும் நிலையில் இல்லாமல் இருப்பதால் ஸூக்ஷ்ம பூதங்கள் எனப்படுகின்றன.

3. தன்மாத்ர-இது மட்டுமே ஸ்வரூபமாக மட்டுமே ஆகியிருப்பது ஆகும். ஆகாயத்தின் மூலபூத குணமானது

சப்தம் (ஒலி) ஆகும். எனவே ஆகாயம் இந்த நிலையில் சப்த குணத்தை மட்டுமே வெளிப்படுத்தும்.

4. மற்ற பூதங்களுடன் ஒன்றுடனொன்று கலக்காமல் இருப்பவையாகும். பஞ்சீகரணமானது 100-ம் ஸூத்திரத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

**एतेभ्यः सूक्ष्मशरीराणि स्थूलभूतानि चोत्पद्यन्ते ॥ ६० ॥**

ஏதேப்ய: ஸூக்ஷ்ம சரீராணி ஸ்தூல பூதானி ச உத்பத்யந்தே ॥ 60 ॥

இவைகளிடமிருந்து ஸூக்ஷ்ம சரீரங்களும் ஸ்தூல பூதங்களும் தோன்றுகின்றன.

## ஸூக்ஷ்ம சரீரத்தின் லக்ஷணங்கள்

**सूक्ष्मशरीराणि सप्तदशावयवानि लिङ्गशरीराणि ॥ ६१ ॥**

ஸூக்ஷ்ம சரீராணி ஸப்த தச அவயவானி லிங்க-சரீராணி ॥ 61 ॥

பதினேழு அவயவங்கள் உள்ள இலிங்க சரீரங்களே ஸூக்ஷ்ம சரீரங்கள் ஆகும்.

ஜீவாத்மா ஸ்தூல உடலில் இருக்க வேண்டுமெனின் இலிங்க சரீரத்தை ஆதாரமாகக் கொண்டுதான் இருக்க வேண்டும். இதன்மூலம் ஜீவாத்மனின் இருப்பை அறிவியலுமாதலால் இதற்கு இலிங்க சரீரம் என்பது பெயராகும். 'லிங்க்யதே ஜ்ஞாப்யதே ப்ரத்யகாத்ம ஸத்பாவ: ஏபிரிதி ।', 'இவற்றால் ஜீவாத்மனின் இருப்பானது தெரிந்து கொள்ளப்படுகிறது; நினைவு கூரப்படுகிறது.'

**अवयवास्तु ज्ञानेन्द्रियपञ्चकं बुद्धिमनसी कर्मेन्द्रियपञ्चकं वायुपञ्चकं चेति ॥ ६२ ॥**

அவயவாஸ்து ஞானேந்த்ரிய பஞ்சகம் புத்தி மனஸீ கர்மேந்த்ரிய பஞ்சகம் வாயுபஞ்சகம் சேதி ॥ 62 ॥

*இலிங்க சரீரத்தின் உறுப்புக்களாக ஐந்து ஞானேந்திரியங்கள், புத்தி, மனம், ஐந்து கர்மேந்திரியங்கள் மற்றும் ஐந்து வாயுக்களும் விளங்குகின்றன.*

*வேறு சில விளக்கங்களில் 17 அவயவங்கள் வருமாறு குறிப்பிடப்பட்டு உள்ளன. ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து பஞ்சேந்திரியங்கள், ஐந்து ஸூக்ஷ்ம பூதங்கள், பிராணன் மற்றும் மனம் ஆகும்.*

## ஞானேந்திரியங்கள்

**ज्ञानेन्द्रियाणि श्रोत्रत्वक्चक्षुर्जिह्वाघ्राणाख्यानि ॥ ६३ ॥**

ஞானேந்த்ரியாணி ச்ரோத்ர-த்வக்-சக்ஷு-ஜிஹ்வா-க்ராணாக்யானி ॥ 63 ॥

*காது, தோல், கண், நாக்கு, மூக்கு என்பவையே ஞானேந்திரியங்கள் ஆகும் (செவி, தோல், கண், நாக்கு, நாசி).*

*வெளியிலுள்ள பொருட்களைக் குறித்த அறிவானது இவைகளால் ஏற்படுவதால் இவை ஞானேந்திரியங்கள் என்று அழைக்கப்படுகின்றன.*

ஆகாயம் போன்ற பஞ்சபூதங்களின் தோற்ற முறைக்கு பொருந்துகிற வகையில் இங்கு இந்திரியங் கள் கூறப்பட்டுள்ளன.

**एतान्याकाशादीनां सात्त्विकाम्शेभ्यो व्यस्तेभ्यः पृथक् पृथक् क्रमेणोत्पद्यन्ते ॥ ६४ ॥**

ஏதாநி ஆகாசாதீநாம் ஸாத்திவ காம்சேப்ய: வ்யஸ்-தேப்ய: ப்ருதக் ப்ருதக் க்ரமேண உத்பத்யந்தே ॥ 64 ॥

இவை[1] ஆகாயம் போன்றவற்றின் தனித்தனியாக உள்ள ஸத்துவம் போன்ற இயல்புகளால் வேறு வேறாகி மற்றும் முறைப்படத் தோன்றுகின்றன.[2]

1. இந்த ஞானேந்திரியங்கள்.

2. ஆகாயத்தின் ஸத்துவ அம்சத்தினால் காது, வாயுவின் ஸத்துவ அம்சத்தினால் தோல், அக்னியின் ஸத்துவ அம்சத்தி னால் கண், நீரின் ஸத்துவ அம்சத்தினால் நாக்கு, பூமியின் ஸத்துவ அம்சத்தினால் மூக்கும் தோன்றியுள்ளன.

**बुद्धिर्नाम निश्चयात्मिकान्तःकरणवृत्तिः ॥ ६५ ॥**

புத்திர்நாம நிச்சயாத்மிக-அந்த: கரண வ்ருத்தி ॥ 65 ॥

வெளியிலுள்ள (பாஹ்யேந்திரியங்கள்) புலன் களின் பின்னணியில் இருந்து கொண்டு அவற்றின் செயல்களை ஒருங்கிணைத்து, நமக்கு உள்ளே இருந்து ஞானத்தை ஏற்படுத்துகின்ற உள்ளே உள்ள புலனையே அந்தகரணம் என்று அழைக்கின்றனர். தண்ணீரில் அலைகள் இருப்பதைப் போல இந்த அந்தகரணத்தில்

எழும் அலைகளை 'வ்ருத்தி'கள் என்று அழைக்கின்றனர். விருத்திகளின் இயல்புகளுக்குத் தகுந்தாற்போன்று அந்தகரணமானது சித்தம், புத்தி, மனம் மற்றும் அகங்காரம் என்னும் நான்கு வகைகளில் மாறுபடுகின்றன.

'இது இப்படி, அப்படி அல்ல' என்று வஸ்துவின் அல்லது விஷயத்தைக் குறித்து உறுதியான ஞானத்தை ஏற்படுத்தும் அந்தகரண விருத்திதான் புத்தியாகும்.

**मनो नाम सङ्कल्पविकल्पात्मिकान्तःकरणवृत्तिः ॥ ६६ ॥**

மனோநாம ஸங்கல்ப-விகல்பாத்மிக-அந்த-கரண-வ்ருத்தி: ॥ 66 ॥

*மனம் என்பது சங்கல்பம்-விகல்ப ஸ்வரூபத்தை உடைய அந்தகரணத்தின் செயல்பாடுகள் ஆகும்.*

*சங்கல்பம் என்றால் எண்ணுதல், சிந்தித்தல் போன்றவையாகும். விகல்பம் என்றால் சந்தேகம் ஆகும். அந்தகரணத்தின் மாறுதல்கள் ஒரு விஷயத்தைக் குறித்து அல்லது ஒரு செயலைக் குறித்து இந்த வடிவிலே எழும் பொழுது அது மனம் என்று அழைக்கப் படுகிறது.*

**अनयोरेव चित्ताहङ्कारयोरन्तर्भावः ॥ ६७ ॥**

அனயோரேவ சித்த-அகங்காரயோ: அந்தர்பாவ: ॥ 67 ॥

*இந்த இரண்டிலேயே சித்தமும், அகங்காரமும் அடங்கியுள்ளன (சித்தம் புத்தியிலும், அகங்காரம் மனத்திலும்).* [1]

1. புத்தி, மனம் என்னும் இரண்டிலேயே.

**अनुसन्धानात्मिकान्तःकरणवृत्तिः चित्तम् ॥ ६८ ॥**

அனுஸந்தானாத்மிக-அந்தகரண-வ்ருத்தி: சித்தம் ॥ 68 ॥

அனுஸந்தானத்தின் ஸ்வரூபத்தை உடைய அந்த கரணத்தின் வேறுபட்ட நிலைதான் சித்தம் ஆகும். அனுஸந்தானம் என்றால் முன்பு நடந்ததை நினைவு படுத்திக் கொள்வது ஆகும். நினைவுபடுத்திக் கொள் வது சித்தத்தின் முக்கியமான இலட்சணமாகும்.

**अभिमानात्मिकान्तःकरणवृत्तिः अहङ्कारः ॥ ६९ ॥**

அபிமானாத்மிக அந்த: கரண-வ்ருத்தி: அஹங்கார: ॥ 69 ॥

'தான்', 'தன்னுடையது' என்று எண்ணும் அகங் காரமானது, அந்தகரணத்தின் ஒரு சிறிய மாற்றம் ஆகும். சில பாடமுறைகளில் 68 மற்றும் 69-ஆம் ஸூத்திரங்கள் காணப்படவில்லை. வேதாந்தத்தின் படி, அந்தகரணமானது திரவப்பொருளைப் போல பாயும் இயல்புடையது ஆகும். நாம் பானை ஒன்றைப் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது அந்தகரணமானது நம்முடைய கண்ணின் மூலமாக வெளியிலே பாய்ந்து, அந்தப் பானையின் வடிவத்தைப் பெற்று, அதை நம்முடைய அறிவின் முன்பாகத் தள்ளுகிறது. அது பானை என்னும் பொதுவாக அறிவு ஏற்படும் பொழுது அல்லது அது பானைதானா, இல்லையா என்னும் சந்தேகம் ஏற்படும் பொழுது அந்தகரணத்தின் இந்த மாறுபாடானது மனம் என்று அழைக்கப்படுகிறது. அது பானைதான் என்னும் உறுதியான ஞானம் ஏற்படும்

பொழுது இந்த மாறுபாடானது சித்தம் என்றும், அந்தப் பானையுடன் 'என்னுடையது' என்னும் தொடர்பைக் கற்பித்துக் கொள்ளும்பொழுது அகங்காரம் என்றும் கூறப்படுகிறது.

**एते पुनराकाशादिगतसात्त्विकाम्शेभ्यो मिलितेभ्य उत्पद्यन्ते ॥ ७० ॥**

ஏதே புன: ஆகாசாதிகத ஸாத்விக காம்சேப்ய: மிலிதேப்ய: உத்பத்யந்தே ॥ 70 ॥

*பிறகு இவை[1] (கூட) ஆகாசம் போன்றவற்றிலுள்ள ஸத்துவ அம்சங்களின்[2] ஒருங்கிணைவினால் தோன்று கின்றன.*

*1. மனம், புத்தி, சித்தம் மற்றும் அகங்காரம்.*

*2. இவ்விதத்தில் நான்கு வகைகளாக உள்ள அந்த கரணமானது ஞானேந்திரியங்களுடன் கூடிச் செயலாற்று கிறது. ஞானேந்திரியங்களோ, ஐந்து ஸூக்ஷ்ம பூதங்களின் ஸத்துவ அம்சத்தினால் முறையாக தோன்றுகின்றன. அத னால் அந்தகரணத்தில் ஐந்து பூதங்களின் ஸத்துவ அம்சமானது இருக்க வேண்டும். அவ்வளவுதான். புத்தியும் மனமும் கூட பௌதீக வஸ்துக்கள் என்பது கவனிக்கத்தக்க அம்சமாகும்.*

**एतेषां प्रकाशात्मकत्वात्सात्त्विकाम्शकार्यत्वम् ॥ ७१ ॥**

ஏதேஷாம் ப்ரகாசாத்மகத்வாத் ஸாத்விகாம்சகார்யத்வம் ॥

*இவைகளுக்கு[1] ஒளிரும் இயல்பு இருப்பதால்[2] (ஸூக்ஷ்ம பூதங்களின்) ஸத்துவ அம்சங்களின் விளைவு கள் ஆகும்.*

*1.* புத்தி, மனம், சித்தம் அகங்காரம் என்னும் இவைகளுக்கு.

*2.* 'தத்ர ஸத்வம் நிர்மலத்வாத் ப்ரகாசக-மனாமயம் ।', 'ஸத்துவ குணமானது பரிசுத்தத் தன்மையால் ஒளி பொருந்தியதாகவும் இடர் செய்யாததுமாகவும் உள்ளது' (கீதை 14-6).

எனவே எங்கு ஒளிரும் இயல்பு உள்ளதோ அங்கு ஸத்துவமானது இருக்க வேண்டும்.

## பஞ்சகோசங்கள்—விஜ்ஞானமய கோசம்

**इयं बुद्धिर्ज्ञानेन्द्रियैः सहिता विज्ञानमयकोशो भवति ॥**

இயம் புத்தி: ஞானேந்த்ரியை: ஸஹிதா விஜ்ஞானமய கோசோ பவதி ॥ 72 ॥

ஞானேந்திரியங்களுடன் கூடியுள்ள இந்த புத்தியானது (சைதன்னியத்திற்கு) 'விஞ்ஞானமய கோசமாக' ஆகிறது (39-ஆம் ஸூத்திரத்தின் இரண்டாவது குறிப்பைப் பார்க்கவும்).

**अयं कर्तृत्वभोक्तृत्वसुखित्वदुःखित्वाद्यभिमानत्वेनेहलोकपरलोकगामी व्यवहारिको जीव इत्युच्यते ॥ ७३ ॥**

அயம் கர்த்ருத்வ-போக்ருத்வ-ஸுகித்வ-து:கத்வாதி அபிமானத்வேன-இஹ லோக-பரலோககாமீ வ்யாவஹாரிகோ ஜீவ: இதி உச்யதே ॥ 73 ॥

(இந்த விஞ்ஞானமய கோசமானது)[1] (தான்) செய்பவன், அனுபவிப்பவன், மகிழ்ச்சியாக இருக்கிறேன்,

துயரமாக இருக்கிறேன் போன்ற அபிமானத்தைப்[2] பெற்றிருப்பதால் (தன்னைப்பற்றி எண்ணுவதால்) பரலோகத்திற்குச் சென்றுகொண்டும், இகலோகத் திற்கு வந்துகொண்டும் இருப்பதால் புலன்களால் உணரத்தக்க ஜீவன்[3] என்று அழைக்கப்பட்டுள்ளது.

1. அதாவது விஞ்ஞானமய கோசத்தில் பிரதிபலிக்கும் ஆத்மா அல்லது சைதன்னியம் அல்லது அதை உபாதியாகப் பெற்றுள்ள சைதன்னியமாகும்.

2. ஆத்மா அவனே பிணைப்பற்றவனாகவும், சித்ரூப னாகவும் இருக்கிறான். உடல், புலன்கள் போன்றவற்றில் அபிமானத்தைக் கற்பித்துக் கொள்ளும் பொழுது செய்பவன் போன்ற எண்ணங்கள் எழுகின்றன.

தைத்திரீய உபநிஷதம்,

'விஞ்ஞானம் யஜ்ஞம் தனுதே! கர்மாணி தனுதேऽபிச ।', 'விஞ்ஞானமே (புத்தியே) வேள்வியைச் செய்கிறது. செயல்களைச் செய்வதற்கும் அடிப்படையாக உள்ளது' என்று கூறுகிறது.

3. பாரமார்த்திக ஸ்வரூபத்திற்கு மாறாக உள்ள புலன் களால் உணரத்தக்க ஸ்வரூபமானது இங்கு விவரிக்கப்பட் டுள்ளது. தத்துவக் கண்ணோட்டத்தில் ஜீவன் பிரம்மனே ஆவான். புத்தி என்னும் உபாதியின் தொடர்பினால் மட்டுமே அவனுக்குச் செய்பவன் போன்றவை ஏற்படுத்தப்பட்டுள்ளன.

'ஸ ஸமான: ஸன்னுபௌ லோகாவனுஸஞ்சரதி த்யாயதீவ லேலாயதீவ ।', 'அவன் புத்திக்குச் சமமாக இருந்துகொண்டு இகலோகம், பரலோகம் என்னும் இரண்டு உலகங்களின் நடுவிலும் சஞ்சரிக்கிறான். அவன் தியானம் செய்வது போலும் ஊசலாடுவது போலும் இருக்கிறான்' என்று பிருஹதாரண்யக உபநிஷதம் (4.3.7) விவரித்துள்ளது.

ஸ்ரீசங்கரர் தம்முடைய பிரம்ம ஸூத்திர விளக்க உரையில் (2.3.30) வருமாறு கூறியுள்ளார்.

'பரமார்த்ததஸ்து ந ஜீவோ நாம புத்தி உபாதி ஸம்பந்த-பரிகல்பித-ஸ்வரூப வ்யதிரேகேண அஸ்தி ।', 'தத்துவக் கண்ணோட்டத்தில் புத்தி என்னும் உபாதியின் தொடர்பால் கற்பிக்கப்பட்டுள்ள ஸ்வரூபத்தைவிட வேறுபட்டுள்ள ஜீவன் என்பதே இல்லை.'

## மனோமய கோசம்

**मनस्तु ज्ञानेन्द्रियैः सहितं सन्मनोमयकोशो भवति ॥ ७४ ॥**

மனஸ்து ஜ்ஞானேந்திரியை: ஸஹிதம் ஸன் மனோமயகோசோ பவதி ॥ 74 ॥

மனமானது ஞானேந்திரியங்களுடன் ஒருங்கிணைந்து மனோமய கோசமாகிறது.

## கர்மேந்திரியங்கள்

**कर्मेन्द्रियाणि वाक्पाणिपादपायूपस्थाख्यानि ॥ ७५ ॥**

கர்மேந்த்ரியாணி வாக்-பாணி-பாத-பாயு-உபஸ்த-ஆக்யானி ॥ 75 ॥

வாக்கு, கை, பாதம், குதம், ஜனன உறுப்பு என்று கூறப்படுபவை கர்மேந்திரியங்கள் (அல்லது செயற் கருவிகள்) ஆகும்.

**एतानि पुनराकाशादीनां रजोम्शेभ्यो व्यस्तेभयः पृथक् पृथक् क्रमेणोत्पद्यन्ते ॥ ७६ ॥**

ஏதானி புன: ஆகாசாதீனாம் ரஜோம்ஸேப்ய வ்யஸ்தேப்ய ப்ருதக் ப்ருதக் க்ரமேண உத்பத்யந்தே ॥ 76 ॥

*மீண்டும் இவை[1] தனித்தனியாக ஆகாயம் போன்ற வற்றின் ரஜோ குணத்தின் அம்சங்களால் வேறு வேறாக மற்றும் முறையைத் தோன்றுகின்றன.[2]*

*1. கர்மேந்திரியங்கள்.*

*2. ஆகாயத்தின் ரஜோ குணத்தால் வாக்கும், வாயுவின் ரஜோ குணத்தால் கைகளும், அக்னியின் ரஜோ குணத்தால் பாதங்களும், நீரின் ரஜோ குணத்தால் குதமும், பூமியின் ரஜோ குணத்தால் ஜனன உறுப்பும் தோன்றுகின்றன.*

## ஐந்து பிராணன்கள்

**वायवः प्राणापानव्यानोदानसमानाः ॥ ७७ ॥**

வாயவ: ப்ராண-அபான-வ்யான-உதான-ஸமானா: ॥

*பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்னும் இவை ஐந்து வாயுக்கள் ஆகும்.*

**प्राणो नाम प्राग्गमनवान्नासाग्रस्थानवर्ती ॥ ७८ ॥**

ப்ராணோ நாம ப்ராக்க மனவான் நாஸாக்ரஸ்தான-வர்த்தீ ॥ 78 ॥

*மேல் நோக்கிச் செல்வதும், (மற்றும்) மூக்கின் நுனியிலிருக்கும்[1] வாயுவிற்குப் பிராணன் என்பது பெயராகும்.*

*1. பிராணனிற்கு இதயம்தான் இருப்பிடம் என்று தைத்திரீய ப்ராஹ்மணத்தில் (3.10.8.5) கூறியிருந்தாலும் அது*

கண்கூடாக மூக்கின் நுனியில் உணரப்படுவதால், இவ்விதம் கூறப்பட்டுள்ளது.

**अपानो नामावाग्गमनवान्पाय्वादिस्थानवर्ती ॥ ७९ ॥**

அபானோ நாம ஆவாக்க மனவான் பாயாவாதி-ஸ்தானவர்த்தீ ॥ 79 ॥

கீழ் நோக்கிச் செல்லும்[1] மற்றும் குதம் போன்ற இடங்களில் உள்ள[2] வாயுவிற்கு அபானன் என்பது பெயராகும்.

1. நாபியிலிருந்து கீழ் நோக்கிச் செல்லும்.

2. ஜனன உறுப்புக்கள் போன்றவற்றில் இருக்கும் வாயுவாகும். நம் உடலில் கழிவுப் பொருட்கள் வெளியேறுவதற்கும் இந்த வாயுதான் காரணமாக உள்ளது.

**व्यानो नाम विष्वग्गमनवानखिलशरीरवर्ती ॥ ८० ॥**

வ்யானோ நாம விஷ்வக்க மனவான், அகிலசரீரவர்த்தீ ॥

எல்லாப் பக்கங்களிலும் போகின்ற, (மற்றும்) உடலில் எல்லாப் பக்கங்களிலும் உள்ள வாயுவிற்கு (உயிர்ச் சத்திற்கு) வியானன் என்பது பெயராகும்.

சாந்தோக்ய உபநிஷதம் (1.3.3 மற்றும் 5) பின்வருமாறு கூறுகிறது.

*'அதய: ப்ராணாபானயோ: ஸந்தி: ஸ வ்யான:*
*யானி அன்யானி வீர்யவந்தி கர்மாணி யதா அக்னே:*
*மந்தனம் அஜே ஸரணம் த்ருடஸ்ய தனுஷ: ஆயமனம்*
*அப்ராண னன் அனபானன் தானி கரோதி ।'*

'எது பிராணன்-அபானன்களின் நடுவிலே உள்ளதோ அது வியானன் ஆகும். அக்னியைக் கடைதல், இலக்கை நோக்கிப் பாய்தல், உறுதியாக உள்ள வில்லை வளைத்தல் போன்ற மிகவும் முயற்சியுடன் செய்ய வேண்டியுள்ள வேறு செயல்களை மூச்சு விடாமல், மூச்சை இழுத்துக் கொள்ளாமல் செய்கிறான்.'

**उदानो नाम कण्ठस्थानीय ऊर्ध्वगमनवानुत्क्रमणवायुः ॥**

உதானோ நாம கண்டஸ்தாnீய: ஊர்த்வகமனவான் உத்க்ரமண வாயு ॥ 81 ॥

மேல் நோக்கிச் செல்லும் (மற்றும் வெளியிலும் செல்லும்) தன்மையுடையது. இது தொண்டையில் நிலைபெற்றுள்ளது. உடலைவிட்டு உயிர் பிரிந்து செல்லும் பொழுது உதவிபுரியும் (உயிர்ச் சத்திற்கு) வாயுவிற்கு உதானன் என்று பெயர்.

மரணம் ஏற்படும் பொழுது ஜீவன், உடலை விட்டு வெளியேறுவதற்கு உத்க்ரமணம் அல்லது உத்க்ராந்தி என்பது பெயராகும். ஜீவன் கண் போன்ற எந்த துவாரத்தின் மூலமாகவும் வெளியேறலாம். இருப்பினும் தொண்டையானது பொதுவாக ஜீவன் உடலை விட்டு வெளியேறும் இடமாக உள்ளது.

**समानो नाम शरीरमध्यगताशितपीतान्नादिसमीकरणकरः ॥**

ஸமானோ நாம சரீர மத்யகத-ஆசித-பீத-அன்னாதி-ஸமீகரண கர: ॥ 82 ॥

இது உடலின் நடுப் பகுதியில் உள்ளது. உண்ட உணவையும் குடித்த நீர் போன்றவற்றையும் சமமாகக்

*கலந்து செரிக்க வைக்க வைக்கும் வாயுவிற்கு சமானன் என்று பெயர்.*

*உண்ட உணவு செரிப்பதற்கு இந்த வாயுவே காரணமாக உள்ளது.*

**समीकरणन्तु परिपाककरणं रसरुधिरशुक्रपुरीषादिकरणमिति यावत् ॥ ८३ ॥**

ஸமீகரணம் து பரிபாககரணம் ரஸ-ருதிர-சுக்ரபுரீஷாதிகரண மிதி யாவத் ॥ 83 ॥

*ஸமீகரணம் என்றால் (உணவை) செரிக்க வைத்து அன்னரஸம், இரத்தம், வீர்யம் போன்ற வடிவங்களாக மாற்றுவது ஆகும்.*

*சில பாடமுறைகளில் இந்த ஸூத்திரம் காணப் படவில்லை. உண்மையாக இந்த ஐந்து பிராணன்களும் ஒரே பிராணனின் செயலாற்றும் முறையின் வேறு பாடுகள் ஆகும். எனவே வேறு பெயரைப் பெற் றுள்ளது.*

**केचित्तु नागकूर्मकृकलदेवदत्तधनञ्जयाख्याः पञ्चान्ये वायवः सन्तीति वदन्ति ॥ ८४ ॥**

கேசித்து நாக-கூர்ம-க்ருகல-தேவதத்த-தனஞ்ஜயாக்யா பஞ்ச அன்யே வாயவ: ஸந்தீதி வதந்தி ॥ 84 ॥

*வேறு சிலர்[1] நாகன், கூர்மன், க்ருகலன், தேவதத்தன், தனஞ்ஜயன் என்னும் பெயருள்ள இன்னும் ஐந்து வாயுக்கள் உள்ளன என்று கூறுகின்றனர்.*

*1. சாங்கியக் கோட்பாட்டாளர்கள்.*

**तत्र नाग उद्गिरणकरः । कूर्म उन्मीलनकरः । कृकलः क्षुत्करः । देवदत्तो जृम्भणकरः । धनञ्जयः पोषणकरः ॥ ८५ ॥**

தத்ர நாக: உத்கிரணகர: । கூர்ம: உன்மீலனகர: । க்ருகல: க்ஷுத்கர: । தேவதத்த: ஜ்ரும்பணகர: । தனஞ்ஜய: போஷணகர: ॥ 85 ॥

அவற்றில் நாகன் என்பது வாந்தி அல்லது ஏப்பத்தை ஏற்படுத்துகிறது. கூர்மன் கண்ணிமைகளை மூடித் திறக்குமாறு[1] செய்கிறது. க்ருகலன் என்பது தும்மலை[2] ஏற்படுத்துகிறது. தேவதத்தன் கொட்டாவி விடுமாறு செய்கிறது. தனஞ்ஜயன் உடலை நன்கு வளர்க்கிறது.

*1. கூர்மன் என்னும் பிராணனானது கண்ணிமைகளை மூடவும், திறக்கவும் செய்கிறது.*

*2. 'க்ஷுத்' என்றால் தும்மலாகும். க்ஷுதாகர-என்னும் பாடத்தை ஏற்றுக்கொண்டால், 'பசியை ஏற்படுத்துகிறது' என்று மொழி பெயர்க்க வேண்டும்.*

இந்த ஐந்து வாயுக்களும் முன்பு கூறிய பஞ்ச பிராணன்களிலேயே அடக்கமாகி உள்ளன. நாகன் உதானனிலும், கூர்மன் வ்யானனிலும், க்ருகலன் ஸமானனிலும், தேவதத்தன் அபானனிலும், தனஞ்ஜயன் மீண்டும் ஸமானனிலும் அடக்கமாகி உள்ளன.

**एतेषां प्राणादिष्वन्तर्भावात्प्राणादयः पञ्चैवेति केचित् ॥**

ஏதேஷாம் ப்ராணாதிஷு அந்தர்பாவாத் ப்ராணாதய: பஞ்ச ஏவேதி கேசித் ॥ 86 ॥

இவை பிராணன் போன்ற ஐந்து வாயுக்களிலேயே அடங்கியிருப்பதால் மொத்தம் ஐந்து பிராணன்களே உள்ளன என்று சிலர் கருதுகின்றனர்.

**एतत्प्राणादिपञ्चकमाकाशादिगतरजोम्शेभ्यो मिलितेभ्य उत्पद्यते ॥ ८७ ॥**

ஏதத் ப்ராணாதி பஞ்சகம் ஆகாசாதிகத ரஜோ அம்சேப்ய: மிலிதேப்ய: உத்பத்யதே ॥ 87 ॥

இந்த ஐந்து பிராணன்களும் ஆகாயம் போன்ற வற்றில் உள்ள ரஜோ குணத்தின் அம்சங்கள் ஒருங் கிணைவதால் தோன்றுகிறது.

எனவே பிராணன் போன்றவை பௌதீகப் பொருட்கள் ஆகும் (Material Objects).

## பிராணமய கோசம்

**इदं प्राणादिपञ्चकं कर्मेन्द्रियैः सहितं सत्प्राणमयकोशो भवति । अस्य क्रियात्मकत्वेन रजोम्शकार्यत्वम् ॥ ८८ ॥**

இதம் ப்ராணாதி பஞ்சகம் கர்மேந்திரியை: ஸஹிதம் ஸத் ப்ராணமயகோசோ பவதி । அஸ்ய க்ரியாத்மகத்வேன ரஜோऽம்சகார்யத்வம் ॥ 88 ॥

கர்மேந்திரியங்களுடன் (செயற்கருவிகளுடன்) இந்த ஐந்து பிராணன்களும்[1] சேர்ந்து பிராணமய கோசம் எனப்படுகிறது. இதனுடைய இயக்கம், செயல் பாடு போன்றவை ரஜோ குணத்திலிருந்து தோன்றி யுள்ளன என்று உணரப்படுகிறது.

*1. உடலில் மற்றும் உடலால் நடைபெறும் எல்லா நிகழ்வுகளுக்கும் ஐந்து வாயுக்கள்தான் காரணமாகும்.*

## ஸூக்ஷ்ம சரீரம்

**एतेषु कोशेषु मध्ये विज्ञानमयो ज्ञानशक्तिमान् कर्तृरूपः । मनोमय इच्छाशक्तिमान् करणरूपः । प्राणमयः क्रियाशक्तिमान् कार्यरूपः । योग्यत्वादेवमेतेषां विभाग इति वर्णयन्ति । एतत्कोशत्रयं मिलितं सत्सूक्ष्मशरीरमित्युच्यते ॥ ८९ ॥**

ஏதேஷு கோசேஷு மத்யே விஞ்ஞானமயோ ஞானசக்திமான் கர்த்ரு ரூப: । மனோமய: இச்சாசக்திமான் கரணரூப: ப்ராணமய: க்ரியாசக்திமான் கார்யரூப: । யோக்யத்வா தேவம் ஏதேஷாம் விபாக: இதி வர்ணயந்தி । ஏதத்கோசத்ரயம் மிலிதம் ஸத் ஸூக்ஷ்மசரீரம் இத்யுச்யதே ॥ 89 ॥

*இந்த கோசங்களுக்கிடையில் ஞானசக்தியை உடைய விஞ்ஞானமய கோசமானது 'செய்பவன்' (கர்த்தா) ஆகிறது.[1] இச்சாசக்தியை உடைய மனோமய கோசமானது செயல்படும் கருவியாகிறது.[2] கிரியா சக்தியை உடைய (இயங்கும் சக்தியுடைய) பிராணமய கோசமானது காரியம் ஆகிறது.[3] அவைகள் செய்யும் செயல்களின் தகுதிக்கு[4] ஏற்றாற்போல இவ்விதம் பகுக்கப்பட்டுள்ளன என்று கூறுகின்றனர். இந்த மூன்று கோசங்களும் சேர்ந்து 'ஸூக்ஷ்ம சரீரம்'[5] என அழைக்கப்படுகிறது.*

*1. புத்தி அல்லது விஞ்ஞானமானது ஆத்மாவிற்கு மிகவும் அருகில் இருப்பதால் அதற்கு ஞானசக்தியானது*

இருப்பதைப் போலத் தோன்றுகிறது. பிருஹதாரண்யக உப நிஷதம் வருமாறு கூறுகிறது.

'யோऽயம் விஜ்ஞானமய: ப்ராணேஷு ஹ்ருதியந்தர் ஜ்யோதி: புருஷ: ।', 'விஞ்ஞானமயமானவனும், புலன் களின் நடுவில் இருப்பவனும், புத்தியில் இருப்பவனும், தானே ஒளிர்பவனுமாகிய இந்தப் புருஷன் (ஆத்மா) ஆவான்.'

விஞ்ஞானமய கோசத்துடன், வேறுபாடு அற்ற தன்மை யைக் கற்பித்துக் கொண்டிருப்பதால் ஆத்மாவிற்குச் செய லாண்மையையும் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இந்தச் செய லாற்றும் தன்மையை விஞ்ஞானமய கோசத்திற்கும் பொருத்திக் கொள்ள இயலும்.

2. இச்சை என்றால் காமம் ஆகும். காமம், சந்தேகம், சங்கல்பம் இவ்வனைத்தும் மனம்தான் (பிரு. உ. 8.12.3) என்று சுருதி வாக்கியம் இருப்பதால் இச்சையானது மனத் தின் செயல்பாடுதான். எனவேதான் மனோமயகோசத்திற்கு இச்சா சக்தியானது கூறப்பட்டிருக்கிறது. மனமானது புலன் களுடன் சேர்ந்திருக்கும்பொழுது மட்டுமே நமக்கு அறிவு ஏற்படுவதால் மனமானது கருவியாகிறது.

3. 'தேரில் குதிரை கட்டப்பட்டிருப்பதுபோல இந்த உடலில் பிராணனானது கட்டப்பட்டுள்ளது' (சாந். உ. 12.3). தேருக்கு இயக்கமானது குதிரையினால் ஏற்படுவதைப் போல, இந்த உடலிற்குக் கிரியா சக்தியானது இயங்கும் ஆற்றலானது பிராணத்தின்மூலம் ஏற்படுகிறது.

4. சக்தியும், ஸ்வரூபமும் இவற்றிற்கு உள்ளதைப் போல.

5. ஜீவனானவன், ஸூக்ஷ்ம சரீரத்துடன் ஒருங்கிணைந்தே உடலை விடுகிறான். வேறு ஒரு உடலைப் பெறுகிறான்.

**अत्राप्यखिलसूक्ष्मशरीरमेकबुद्धिविषयतया वनवज्जलाशयवद्वा समष्टिरनेकबुद्धिविषयतया वृक्षवज्जलवद्वा व्यष्टिरपि भवति ॥ ९० ॥**

அத்ராபி அகில ஸூக்ஷ்ம சரீரம் ஏகபுத்திவிஷயதயா வனவத் ஜலாசயவத் வா ஸமஷ்டி:, அனேகபுத்தி விஷயதயா வ்ருக்ஷவத் ஜலவத் வா வ்யஷ்டிரபி பவதி ॥ 90 ॥

*இங்கும் எல்லா ஸூக்ஷ்ம சரீரங்களையும் மொத்தமாக ஒன்று என்னும் கண்ணோட்டத்துடன் பார்க்கும் பொழுது காட்டைப்போல அல்லது குளத்தைப்போல ஸமஷ்டி ஆகிறது. பல என்னும் கண்ணோட்டத்துடன் பார்க்கும் பொழுது மரத்தைப் போல அல்லது நீர்த்திவலையைப் போல வ்யஷ்டி ஆகிறது.*

*அஞ்ஞானமானது எப்படி வ்யஷ்டியாக அல்லது ஸமஷ்டியாகக் கருதப்படுகிறதோ, அதைப்போன்றே வ்யஷ்டி அல்லது ஸமஷ்டியின் கண்ணோட்டத்துடன் ஸூக்ஷ்ம சரீரங்களையும் கருதலாம்.*

## ஹிரண்யகர்ப்ப(ன்)

**एतत् समष्ट्युपहितं चैतन्यं सूत्रात्मा हिरण्यगर्भः प्राणश्चेत्युच्यते सर्वत्रानुस्यूतत्वाज्ज्ञानेच्छाक्रियाशक्तिमदुपहितत्वाच्च ॥ ९१ ॥**

ஏதத் ஸமஷ்டி-உபஹிதம் சைதன்யம் ஸூத்ராத்மா ஹிரண்யகர்ப: ப்ராணச்ச இத்யுச்ய தே: ஸர்வத்ர அனுஸ்யூ தத்வாத் ஞான இச்சாக்ரியா சக்திமத் உபஹிதத்வாச்ச ॥ 91 ॥

இந்த ஸமஷ்டியுடன் சேர்ந்துள்ள சைதன்னிய மானது இந்த ஸமஷ்டியை (ஸூக்ஷ்ம சரீரத்தை) உபாதி யாகிப் பெற்றுள்ள சைதன்னியமானது, 'ஸூத்ராத்மா' வானது[1] ஹிரண்யகர்ப்பன்[2] மற்றும் 'ப்ராணன்'[3] என்று அழைக்கப்படுகிறது. ஏனெனில் அது அனைத் திலும் உள்உறைகிறது. மற்றும் ஞான சக்தி, இச்சா சக்தி, கிரியா சக்திகளுடன் சேர்ந்துள்ள (மூன்று கோசங் களை)[4] உபாதியாகப் பெற்றுள்ளது.

1. பூக்களின் அல்லது மணிகளின் நடுவில் இருக்கும் நூலைப் போல எல்லா ஜீவிகளின் ஸூக்ஷ்ம சரீரங்களிலும் ஊடுருவியிருப்பதால் அவன் 'ஸூத்ராத்மா' ஆவான். பிருஹதாரண்யக உபநிஷதம் வருமாறு கூறுகிறது.

'வாயுர்வை கௌதம தத் ஸூத்ரம், வாயுனா வை
கௌதம ஸூத்ரேணாயஞ்ச லோக: பரச்ச லோக:
ஸர்வாணி ச பூதானி ஸந்த்ருப்தானி பவந்தி ॥'

'கௌதமரே, வாயுதான் அந்த ஸூத்ரமாகும். வாயு என் னும் அந்த ஸூத்ரத்தினால்தான் இவ்வுலகமும், பரலோக மும் எல்லாப் பிராணிகளும் கோர்க்கப்பட்டுள்ளன.'

2. 'ஹிரண்யகர்ப: ஸமவர்ததாக்ரே' (ரி. ஸம். 10.121.1) என்னும் இந்த ரிக்கிற்கு விளக்கமளிக்கும் பொழுது ஸ்ரீஸாயணர் வருமாறு கூறியுள்ளார்.

'ஹிரண்மயஸ்ய அண்டஸ்ய கர்பபூத: ப்ரஜாபதி: ஹிரண்யகர்ப: ।', 'தங்கத்தைப் போலுள்ள (பிரபஞ்சம் என்னும்) முட்டைக்குக் கர்ப்பத்தைப் போலுள்ள பிரஜாபதி தான் ஹிரண்யகர்பன் ஆவான்.'

சாத்திர நூல்களில், ஸூக்ஷ்ம நிலையிலுள்ள, படைப் பிற்கு முற்பட்ட உலகமானது, ஒளிர்ந்து, கொண்டிருக்கும்

தங்க முட்டைக்கு உவமிக்கப்பட்டுள்ளது. அதைத் தன்னுடைய கர்ப்பத்தில் வைத்துக் கொண்டிருக்கும், படைப்புத் தொழிலைச் செய்யும் பிரஜாபதிதான் (பிரம்மா) ஹிரண்ய கர்பன் ஆவார்.

'ஹிரண்யகர்பம் ஜனயாமாஸ பூர்வம்' என்னும் சுவேதாஸ்வதர உபநிஷதத்திலுள்ள மந்திரத்திற்கு எழுதியுள்ள விளக்கவுரையில் ஸ்ரீசங்கரர் வருமாறு கூறியுள்ளார். 'ஹிதம் ரமணீயம் அத்யுஜ்ஜ்வலம் ஞானம்கர்ப: அந்தஸ்ஸார: யஸ்ய தம் ।', 'இதமானதும், (அதாவது) விரும்பத்தக்கதும், ஆனந்தத்தை ஏற்படுத்துவதும், மிகவும் ஒளிர்வதுமான ஞானமானது யாரிடம் முழுமையாகவும், செறிவாகவும் உள்ளதோ அத்தகையவனே ஹிரண்யகர்ப்பன் ஆவான்.'

எனவே ஹிரண்யகர்ப்பன் உலகைப் படைப்பவனும் மற்றும் ஞானவடிவினனும் ஆவான். ஞானத்துடன் இச்சையும் இருப்பதால் அவன் இச்சா சக்தி வடிவினனாகவும் இருக்கிறான்.

3. உலகத்தைப் படைக்கும்பொழுது அவனுடைய கிரியா சக்தியானது முதன்மையாகக் காணப்படுவதால் அவன், 'ப்ராண'னாகவும் இருக்கிறான்.

'கதம் ஏகோ தேவ:? ப்ராண இதி ।' 'அந்த ஒரு தேவதை எது? ப்ராணனாகும்' (பிரு. உ. 3.9.9).

மூலத்தில் ப்ராண இதி ச என்று 'ச'காரத்தைப் பயன்படுத்தி இருப்பதால், பிரஜாபதி, நான்முகன் (பிரம்மா) போன்ற மற்ற பெயர்களையும் கிரகித்துக் கொள்ள வேண்டும்.

4. விஞ்ஞானமய, மனோமய, பிராணமய கோசங்கள்.

**अस्यैषा समष्टिः स्थूलप्रपञ्चापेक्षया सूक्ष्मत्वात्सूक्ष्मशरीरं विज्ञानमयादिकोशत्रयं जाग्रद्वासनामयत्वात्स्वप्नोऽतएव स्थूलप्रपञ्चलयस्थानमिति चोच्यते ॥ ९२ ॥**

அஸ்யைஷா ஸமஷ்டி: ஸ்தூலப்ரபஞ்சாபேக்ஷயா ஸூக்ஷ்மத்வாத் ஸூக்ஷ்மசரீரம் விஞ்ஞானமயாதிகோசத்ரயம் ஜாக்ரதா வஸனாமயத்வாத் ஸ்வப்ன: அத ஏவ ஸ்தூல ப்ரபஞ்சலயஸ்தானமிதி ச உச்யதே ॥ 92 ॥

அதனுடைய[1] இந்த ஸமஷ்டியானது (அதாவது) விஞ்ஞானமய கோசம் போன்ற மூன்று கோசங்களும், ஸ்தூல உலகத்துடன் ஒப்பிடப்பட்டால் ஸூக்ஷ்மமாக இருப்பதால் ஸூக்ஷ்ம சரீரம் என்றும், விழிப்புநிலையின்[2] ஸம்ஸ்காரங்களுடன் (பதிவுகளுடன்) சேர்ந்து இருப்பதால் கனவு என்றும், அதனாலேயே ஸ்தூல உலகத்தின் லயஸ்தானம்[3] என்றும் கூறப்படுகிறது (ஸ்தூல உலகம் ஒடுங்கும் இடமாகவும் உள்ளது).

1. ஹிரண்யகர்ப்பனுடைய.

2. ஹிரண்யகர்ப்பனின் விழிப்புநிலை. இது இனி வரும் பகுதிகளில் விராட் என்று கூறப்பட்டுள்ளது. நம்முடைய விழிப்பு நிலையில் ஏற்படும் அனுபவங்களின் பதிவுகள் கனவு நிலையில் வெளிப்படுகின்றன. அவ்வளவு தான். அதைப் போன்றே நம்முடைய விழிப்பு நிலையை ஒத்துள்ள விராட் அலையின் பதிவுகள் ஹிரண்யகர்ப்பனில் வெளிப்படுகின்றன. இது விழிப்பு நிலையும், ஸமஷ்டியும் சந்திக்கும் இடமாகும்.

3. ஹிரண்யகர்ப்ப நிலையில் பிரபஞ்சமானது ஸூக்ஷ்ம வடிவத்துடன் ஒடுங்கியிருக்கும். விழிப்பு நிலையில்

நம்முடைய அனுபவங்கள், கனவு நிலையில் ஸூக்ஷ்ம வடிவத்தில் ஒடுங்கியிருப்பதைப் போன்றது ஆகும்.

## தைஜஸன்

**एतद्व्यष्ट्युपहितं चैतन्यं तैजसो भवति तेजोमयान्तः करणोपहितत्वात् ॥ ९३ ॥**

ஏதத்-வ்யஷ்டி-உபஹிதம்-சைதன்யம் தைஜஸோ பவதி தேஜோமய அந்த: கரண-உபஹிதத்வாத் ॥ 93 ॥

ஒவ்வொரு தனித்த ஸூக்ஷ்ம சரீரத்துடன் தொடர்பு கொண்டுள்ள சைதன்னியமே தைஜஸன் எனப்படுகிறது. ஏனெனில் அது ஒளிமயமாக உள்ள அந்த கரணத்துடன் தொடர்பு கொண்டுள்ளது.

அந்தகரணமானது ஸத்துவ குணத்தை முதன்மையாகப் பெற்றிருப்பதால் ஒளிமயமானதாக உள்ளது. இத்துடன் தொடர்பு கொண்டிருப்பதால்தான் வ்யஷ்டி சைதன்னியமானது தைஜஸன் எனப்படுகிறது.

**अस्यापीयं व्यष्टिः स्थूलशरीरापेक्षया सूक्ष्मत्वादिति हेतोरेव सूक्ष्मशरीरं विज्ञानमयादिकोशत्रयं जाग्रद्वासना-मयत्वात्स्वप्नोऽतएव स्थूलशरीरलयस्थानमिति चोच्यते ॥ ९४ ॥**

அஸ்ய அபி இயம் வ்யஷ்டி: ஸ்தூல சரீர-அபேக்ஷயா ஸூக்ஷ்மத்வாத் இதி ஹேதோ: ஏவ ஸூக்ஷ்மசரீரம் விஞ்ஞானமயாதிகோசத்ரய ஜாக்ரதாவஸனாமயத்வாத் ஸ்வப்ன: அத ஏவ ஸ்தூலசரீரலயஸ்தான மிதி ச உச்யதே ॥ 94 ॥

தைஜஸனின் ஸமஷ்டியும் கூட அதாவது விஞ் ஞானமய கோசம் போன்ற மூன்று கோசங்களும் ஸ்தூல சரீரத்தை விட ஸூக்ஷ்மமாக உள்ளது என்னும் காரணத்தினாலேயே ஸூக்ஷ்ம சரீரம் என்றும், விழிப்பு நிலையின் பதிவுகளுடன் சேர்ந்திருப்பதால் கனவு என்றும், அதனாலேயே ஸ்தூல சரீரமானது ஒடுங்கும் இடம் என்றும் கூறப்பட்டுள்ளது.

**एतौ सूत्रात्मतैजसौ तदानीं मनोवृत्तिभिः सूक्ष्मविषया-नन्नुभवतः 'प्रविविक्तभुक्तैजसः' (माण्डू. उ. ४) इत्यादिश्रुतेः ॥**

ஏதௌ ஸூத்ராத்ம-தைஜஸௌ ததானீம் மனோ-வ்ருத்திபி: ஸூக்ஷ்மவிஷயான் அனுபவத: 'ப்ரவிவிக்தபுக் தைஜஸ:' (மாண். உ. 4) இத்யாதி ச்ருதே: ॥ 95 ॥

அப்பொழுது[1] ஸூத்ராத்மாவும், தைஜஸனும் மனத்தின் செயல்பாடுகளால்[2] ஸூக்ஷ்ம விஷயங்களை அனுபவிக்கின்றனர். 'தைஜஸன் கனவுநிலையில் மன வுலகை அனுபவிக்கிறான்' என்பன போன்ற[3] சுருதி வாக்கியங்களால் இவ்விதம் அறியப்படுகிறது.

1. கனவு நிலையில்.

2. ஏனெனில் அப்பொழுது வெளிப்பொருட்கள் இருப்பதில்லை.

3. கனவில் காணும் பொருட்கள் வெறும் தோற்றங் களே தவிர (ப்ராதிபாஸிகம்) உண்மையானவை அல்ல. பொருட்கள் நேரடியாக உணரப்படுவதால் கனவானது வெறும் நினைவிற்குக் கொண்டு வருவது இல்லை. அது ஸுஷுப்தி நிலையும் இல்லை. ஏனெனில் ஸுஷுப்தி

நிலையில் எதுவுமே உணரப்படுவது இல்லை. அதைப் போன்றே அது விழிப்பு நிலையும் அல்ல. ஏனெனில் அங்கு உணரப்படும் பொருட்களும் தேச, கால, நிமித்தங்களின் கண்ணோட்டத்தில் மெய்யியல்பு இல்லை. எனவேதான் பிருஹதாரண்யக உபநிஷதம் வருமாறு கூறுகிறது.

'நந தத்ர ரதா ந ரதயோகா ந பந்தானோ பவந்தி
அத ரதான் பத: ஸ்ருஜதே ।।' *(பிரு. உ. 4.3.10)*

'கனவில் தேர்களோ, அவற்றில் கட்டப்படும் குதிரைகள் போன்ற பிராணிகளோ, தெருக்களோ இருப்பதில்லை. ஆனால் அவன் தேர்களையும், பிராணிகளையும், தெருக் களையும் ஏற்படுத்திக் கொள்கிறான்.'

3. 'தஸ்மாதேச ப்ரவிவிக்த. ஆஹாரதர இவைவ பவதி ।।', 'அதனால் இந்த ஸ்தூல சரீரத்தை விட, இலிங்க சரீரமானது மிகவும் நுட்பமான உணவைப் பெறுகிறது' என்று பிருஹ தாரண்யக உபநிஷதம் கூறுகிறது *(4.2.3)*.

**अत्रापि समष्टिव्यष्ट्योस्तदुपहितसूत्रात्मतैजसयोर्वन-वृक्षवत्तदवच्छिन्नाकाशवच्च जलाशयजलवत्तद्गतप्रति-बिम्बाकाशवच्चाभेदः ।। ९६ ।।**

அத்ராபி ஸமஷ்டி வ்யஷ்டோ: ததுபஹிதஸூத்ராத்ம தைஜஸயோ: வனவ்ருக்ஷவத் ததவச்சின்ன ஆகாசவச்ச ஜலாசய-ஜலவத் தத்கத ப்ரதிபிம்ப ஆகாசவச்ச அபேத: ।। 96 ।।

இங்கும் காடு மற்றும் அதிலுள்ள மரங்களைப் போல அல்லது குளம் மற்றும் அதிலுள்ள நீரைப்போல ஸமஷ்டியும், வியஷ்டியும் வேறு வேறானவை அல்ல. காடு மற்றும் அதிலுள்ள மரங்களால் வரையறுக்கப் பட்ட ஆகாயத்தைப்போல, குளத்திலும் அதிலுள்ள

*நீரிலும் பிரபதிபலிக்கும் ஆகாயத்தைப் போலவும் ஸூத்ராத்மா—தைஜஸன் என்னும் இவை வேறுவேறு அல்ல.*

**एवं सूक्ष्मशरीरोत्पत्तिः ॥ ९७ ॥**

ஏவம் ஸூக்ஷ்ம சரீரோத்பத்தி: ॥ 97 ॥

*இவ்விதத்தில் ஸூக்ஷ்ம சரீரங்கள் தோன்றுகின்றன.*

### ஸ்தூல பூதங்கள்

**स्थूलभूतानि तु पञ्चीकृतानि ॥ ९८ ॥**

ஸ்தூலபூதானி து பஞ்சீக்ருதானி ॥ 98 ॥

*ஆனால்[1] ஸ்தூல பூதங்கள் (பருப்பொருட்கள்) ஐந்து வகையான கலவையால் தோன்றியுள்ளன.*

*1. இங்குள்ள 'து'—'ஆனால்' என்னும் சொல்லானது ஸூக்ஷ்ம பூதங்களுக்கும், ஸ்தூல பூதங்களுக்கும் உள்ள வேறு பாட்டைக் குறிக்கிறது.*

### பஞ்சீகரணம்

**पञ्चीकरणं त्वाकाशदिपञ्चस्वेकैकं द्विधा समं विभज्य तेषु दशसु भागेषु प्राथमिकान्पञ्चभागान्प्रत्येकं चतुर्धा समं विभज्य तेषां चतुर्णां भागानां स्वस्वद्वितीयार्धभागपरित्यागेन भागान्तरेषु योजनम् ॥ ९९ ॥**

பஞ்சீகரணம் து ஆகாசாதிபஞ்சஸு ஏகைகம் த்விதா ஸமம் விபஜ்ய தேஷு தசஸு பாகேஷு ப்ராதமிகான்

பஞ்சபாகான் ப்ரத்யேகம் சதுர்தாஸமம் விபஜ்ய, தேஷாம் சதுர்ணாம் பாகானாம் ஸ்வஸ்வ த்விதீயார்த பாக பரித்யாகேன பாகாந்தரே ஷு யோஜனம் ॥ 99 ॥

*பஞ்சீகரணம் என்றால் ஆகாயம் போன்ற ஐந்து மூலப் பொருட்களில் (ஸூக்ஷ்ம பூதங்களில்) ஒவ்வொன்றும் இரு சமமான பகுதிகளாகப் பிரிக்கப்படுகின்றன. இவ்விதமாக ஏற்பட்டுள்ள பத்து பகுதிகளில் முதல் ஐந்து பகுதிகள் ஒவ்வொன்றும் நான்கு சமமான பகுதிகளாகப் பிரிக்கப்படுகின்றன. இதன் பிறகு, ஒவ்வொரு மூலப்பொருளின் ஒரு பாதியை விட்டுவிட்டு, மற்றப் பாதியுடன் மற்ற நான்கு மூலப் பொருட்களின் நான்கு பகுதிகளிலிருந்து ஒரு பகுதியானது சேர்க்கப் படுகிறது.*

*படைப்பின் தொடக்கத்தில் தோன்றிய ஸூக்ஷ்ம பூதங்கள் (பஞ்சபூதங்கள்) ஒன்றுடனொன்று சேராமலிருப்பதால் செயல்பாடுகள் நிறைந்த உலகிற்குத் தகுந்த பொருட்களைத் தோற்றுவிக்கும் திறமையற்று விளங்குகின்றன. பஞ்சீகரணத்தால் அவை வெளிப்படும் தன்மையைப்பெற்று செயலாற்றும் தகுதியைப் பெறுகின்றன.*

*இங்கு விவரிக்கப்பட்டுள்ள இந்த பஞ்சீகரணம் என்பதை இவ்விதமாகப் பகுத்து ஆராய்ந்து வருமாறு குறிப்பிடலாம்.*

*(பகுதி) ஸ்தூலபூமி = 1/2 ஸூக்ஷ்மபூமி + 1/8 நீர் + 1/8 நெருப்பு + 1/8 வாயு + 1/8 ஆகாயம் இன்னும் எஞ்சியுள்ள மற்ற பூதங்களின் விஷயத்திலும் இவ்விதத்திலேயே அறிந்துகொள்ள வேண்டும்.*

**तदुक्तं—**

**'द्विधा विधाय चैकैकं चतुर्धा प्रथमं पुनः ।**
**स्वस्वेतरद्वितीयांशैर्योजनात्पञ्च पञ्चते ॥'**
**(पञ्चदशी १.२७) इति ॥ १०० ॥**

தது்க்தம்—

த்விதா விதாய சைகைகம் சதுர்தா ப்ரதமம் புன: ॥
ஸ்வஸ்வேதரத்விதீயாம் சைர்யோஜனாத் பஞ்ச பஞ்சதே
இதி: ॥

அது இவ்விதம் கூறப்பட்டுள்ளது.

'ஒவ்வொரு ஸூக்ஷ்ம பூதத்தையும் (மூலப் பொருளையும் இரு பகுதிகளாகச் செய்து மீண்டும் அவற்றின் முதல் பாதியின் ஒவ்வொரு பகுதியையும் நான்கு பகுதிகளாகச் செய்து பிறகு ஒவ்வொரு மூலப் பொருளுடைய மறுபாதியுடன் மற்ற மூலப் பொருட் களிலிருந்து பெற்ற நான்கு பகுதிகளில் ஒன்றைச் சேர்த்துவிட்டால் ஒவ்வொரு மூலப் பொருளுமே ஒன் றில் ஐந்து பகுதிகளை உடையதாக ஆகிறது' *(ப. த. 1.27).*

**अस्याप्रामाण्यं नाशङ्कनीयं त्रिवृत्करणश्रुतेः पञ्चीकरण-स्याप्युपलक्षणत्वात् ॥ १०१ ॥**

அஸ்ய அப்ராமாண்யம் ந அசங்கனீயம் த்ரிவ்ருத்-கரணச்ருதே பஞ்சீகரணஸ்ய அபி உபலக்ஷணாத்வாத் ॥ 101 ॥

இதற்கு (இந்தக் கலப்பு முறைக்கு) ஆதாரம் இல்லை என்று சந்தேகம் கொள்ளுதல் கூடாது.

ஏனெனில் த்ரிவ்ருத்கரணத்தைக் (மூன்று கலவை) குறித்துக் கூறும் சுருதியானது பஞ்சீகரணம் (ஐந்து கலவை) என்பதையும் குறிப்பாக உணர்த்துகிறது.

சாந்தோக்ய உபநிஷதம் வருமாறு கூறுகிறது. 'தாஸாம் த்ரிவ்ருதம் த்ரிவ்ருதம் ஏகைகாம் கரவாணீதி ஸேயம் தேவதா இமா: திஸ்ரோதேவதா அனேனைவ ஜீவேன ஆத்மனா அனுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரோத் ।', 'அவைகளில் ஒவ்வொன்றையும் மூன்று மூன்றாகச் செய்கிறேன்' என்று ஆலோசித்து, இந்த தேவதை ஜீவாத்மாவின் வடிவத்திலேயே இந்த மூன்று தேவதைகளிடம் (அக்னி, நீர், பூமி) பிரவேசித்து பெயர்களையும், வடிவங்களையும் வேறுபடுத்தியது.'

இதன்படி நம்முடைய பகுப்பு ஆராய்வானது வருமாறு உள்ளது.

*1 ஸ்தூல அக்னி = 1/2 ஸூக்ஷ்ம அக்னி + 1/4 ஸூக்ஷ்ம நீர்+ 1/4 ஸூக்ஷ்ம பூமி.*

மற்றவையும் இவ்விதத்திலேயே ஆகியுள்ளன.

சுருதிகளில் பஞ்சீகரணத்தைக் குறித்து நேரடியாகக் கூறப்படவில்லை. த்ரிவ்ருத்கரணத்தை மட்டுமே விவரித்துள்ளது. ஆனால் பஞ்ச பூதங்களின் தோற்றத் தைக் குறித்து தெளிவாகவே பல சுருதிகள் கூறுகின்றன. எனவே த்ரிவ்ருத்கரணத்தின் பின்னணியிலுள்ள தத்துவத்தையே பொருத்தமுறச் செய்து கொண்டு பஞ்சீ கரணத்தை ஏற்றுக் கொள்வதில் எத்தகைய முறையற்ற தன்மையும் இல்லை.

**पञ्चानां पञ्चात्मकत्वे समानेऽपि तेषु च 'वैशेष्यात्तु तद्वादस्तद्वादः' (ब्रह्म. सू. २.४.२२) इति न्यायेनाकाशादि-व्यपदेशः सम्भवति ॥ १०२ ॥**

பஞ்சானாம் பஞ்சாத்மகத்வே ஸமானேऽபி தேஷு ச 'வை சேஷ்யாத்து தத்வாதஸ்தத்வாத: (பிர. ஸூ. 2.4.22) இதி ந்யாயேன ஆகாசாதி வ்யபதேச: ஸம்பவதி ॥ *102* ॥

*ஐந்து மூலப்பொருட்களிலே ஒவ்வொன்றுமே ஐந்து மூலப்பொருட்களின் கலவையைப் பெற்று இருப்பதால் ஒன்று என கருதப்படும் எனினும் ஒரு குறிப்பிட்ட மூலப்பொருளின் பகுதியானது 'அதிக மாக இருப்பதால் அந்தப் பெயர்' (பிர. ஸூ. 2.4.22) என்னும் விதியினால் அவை ஆகாயம் போன்ற வேறு வேறு பெயர்களைப் பெற்று விளங்குகின்றன.*

*ஸ்தூல ஆகாயத்தில், ஆகாயத்தைத் தவிர மற்ற நான்கு ஸூக்ஷ்ம பூதங்களும் கலந்திருப்பதால் அதற்கு ஆகாயம் என்னும் பெயரையே எதற்குக் கொடுக்க வேண்டும்? என்பது கேள்வியாகும். அதில் ஆகாயத் தின் அம்சமானது அதிகமாக இருப்பதால் அவ்வித மாகப் பெயரிடப்பட்டுள்ளது என்பது பதிலாகும்.*

**तदानीमाकाशे शब्दोऽभिव्यज्यते वायौ शब्दस्पर्शावग्नौ शब्दस्पर्शरूपाण्यप्सु शब्दस्पर्शरूपरसाः पृथिव्यां शब्दस्पर्शरूपरसगन्धाश्च ॥ १०३ ॥**

ததானீம் ஆகாசே சப்த: அபிவ்யஜ்யதே, வாயௌ சப்த-ஸ்பர்சௌ, அக்னௌ சப்த-ஸ்ப்ர்ச-ரூபாணி, அப்ஸு

சப்த-ஸ்பர்ச-ரூப-ரஸா: ப்ருதிவ்யாம்-சப்த-ஸ்பர்ச-ரூப-ரஸ-கந்தாச்ச ।। 103 ।।

அப்பொழுது[1] ஆகாயத்தில் ஒலியும் (சப்தமும்), வாயுவிடத்தில் ஒலியும், ஊறும், நெருப்பில், ஒளியும், ஊறும், வடிவமும், நீரில் ஒலியும், ஊறும், வடிவமும், சுவையும், மண்ணில் (பூமியில்) ஒலியும், ஊறும், வடிவமும், சுவையும், மணமும் என்னும் இவையும் வெளிப்படுகின்றன.

*1. பஞ்சீகரணம் என்னும் கலவை நடைபெறும் பொழுது ஸூக்ஷ்ம ஆகாயமானது பஞ்சீகரணத்தின் பலனாக ஸ்தூல ஆகாயமாக ஆகும் பொழுது, அதில் இருந்த ஒலியின் இயல்பானது வெளிப்படுகிறது. அதைப் போன்றே ஸ்தூல வாயுவில் அதன் இயல்பான ஊறும், அதன் காரணப் பொருளான ஆகாயத்தின் இயல்பான ஒலியும் வெளிப்படுகின்றன. மற்ற பூதங்களின் விஷயங்களிலும் இதைப் போன்றே அறிய வேண்டும்.*

## பதினான்கு உலகங்களின் தோற்றம்

**एतेभ्यः पञ्चीकृतेभ्यो भूतेभ्यो भूर्भुवःस्वर्महर्जनस्तपः सत्यमित्येतन्नामकानामुपर्युप-रिविद्यमानानामतलवितलसुतलरसातलतलातलमहातलपातालनामकानामधोऽधोविद्यमानानां लोकानां ब्रह्माण्डस्य तदन्तर्गतचतुर्विधस्थूलशरीराणां तदुचितानामन्नपानादीनां चोत्पत्तिर्भवति ।। १०४ ।।**

ஏதேப்ய: பஞ்சீக்ருதேப்ய: பூதேப்ய: பூ: புவ: ஸ்வ: மஹ: ஜன: தப: ஸத்யம் இதி ஏதன்னாமகானாம் உபரி உபரிவித்ய

மானானாம், அதல-விதல-ஸுதல-ரஸாதல-தலாதல-மஹாதல-பாதால-நாமகானாம் அதோ அதோ வித்யமானானாம் லோகானாம் ப்ரஹ்மாண்டஸ்ய ததந்தர்கத-சதுர்விதஸ்தூல சரீராணாம் தது சிதானாம் அன்னபானாதீனாம் ச உத்பத்திர் பவதி ॥ 104 ॥

இந்த முறையில் கலவை செய்யப்பட்ட பஞ்ச பூதங்களிலிருந்து பூ, புவ, ஸுவ, மஹ, ஜன, தப, ஸத்யம் என்னும் ஏழு மேல் உலகங்கள் ஒன்றின் மீது ஒன்றாக தோற்றுவிக்கப்படுகின்றன. அதல, விதல, ஸுதல, ரஸாதல, தலாதல, மஹாதல, பாதால என்னும் ஏழு கீழ் உலகங்கள் ஒன்றின் கீழ் ஒன்றாக தோற்று விக்கப்படுகின்றன. இந்தப் பிரம்மாண்டமும், அதி லுள்ள நான்கு வகையான ஸ்தூல சரீரங்களும் மற்றும் அவற்றிற்குத் தக்க உணவு, நீர் போன்றவற்றின் உற்பத்தி யும் ஆகின்றன.

## நான்கு விதமான சரீரங்கள்

**चतुर्विधशरीराणि तु जरायुजाण्डजस्वेदजोद्भिज्जाख्यानि ॥ १०५ ॥**

சதுர்விதசரீராணி து ஜராயுஜ-அண்டஜ-ஸ்வேதஜ-உதிப்ஜ்ஜாக்யாணி ॥ 105 ॥

நான்கு விதமான (ஸ்தூல) சரீரங்கள் ஜராயுஜம், அண்டஜம், ஸ்வேதஜம் மற்றும் உதிப்ஜ்ஜம் என்னும் பெயர்களை உடையனவாகும்.

**जरायुजानि जरायुभ्यो जातानि मनुष्यपश्वादीनि ॥ १०६ ॥**

ஜராயுஜாநி ஜராயுப்ய: ஜாதாநி மனுஷ்ய பச்வாதீநி ॥

கருப்பையிலிருந்து தோன்றியுள்ள மனிதர்கள், பிராணிகள் போன்றவை 'ஜராயுஜம்' ஆகும்.

**अण्डजान्यण्डेभ्यो जातानि पक्षिपन्नगादीनि ॥ १०७ ॥**

அண்டஜாநி அண்டேப்யோ ஜாதாநி பக்ஷி பன்னகாதீநி ॥ 107 ॥

பறவை, பாம்பு, போன்ற இவை முட்டையிலிருந்து தோன்றுகின்றன. அவை அண்டஜம் எனப்படுகின்றன.

**स्वेदजानि स्वेदेभ्यो जातानि यूकमशकादीनि ॥ १०८ ॥**

ஸ்வேதஜாநி ஸ்வேதேப்ய: ஜாதாநி யூகாமசகாதீநி ॥

ஈரத்திலிருந்து தோன்றும் பேன், கொசு போன்றவை ஸ்வேதஜம் எனப்படும்.

**उद्भिज्जानि भूमिमुद्भिद्य जातानि लतावृक्षादीनि ॥ १०९ ॥**

உதிப்ஜ்ஜாநி பூமிம் உத்பத்ய ஜாதாநி லதாவ்ருக்ஷாதீநி ॥

மண்ணிலிருந்து பிறக்கும் மரம், செடி, கொடிகள் போன்றவை உதிப்ஜ்ஜம் எனப்படும்.

**अत्रापि चतुर्विधसकलस्थूलशरीरमेकानेकबुद्धिविषयतया वनवज्जलाशयवद्वा समष्टिर्वृक्षवज्जलवद्वा व्यष्टिरपि भवति ॥**

அத்ராபி சதுர்வித ஸகல ஸ்தூல சரீரம் ஏக அனேக புத்தி விஷயதயா வனவத் ஜலாசயவத்வா ஸமஷ்டி: வ்ருக்ஷவத் ஜலவத்வா வ்யஷ்டிரபி பவதி ॥ 110 ॥

இங்கும் நான்கு வகையான ஸ்தூல சரீரங்களும் காடு அல்லது குளத்தைப்போல தொகுதி என்னும் கண்ணோட்டத்துடன் பார்க்கும் பொழுது ஸமஷ்டி ஆகிறது. மரத்தைப்போல அல்லது நீர்த்திவலைகள் போல தனியானது என்னும் கண்ணோட்டத்துடன் பார்க்கும் பொழுது வ்யஷ்டி ஆகிறது.

## வைச்வானரன் அல்லது விராட்

**एतत्समष्ट्युपहितं चैतन्यं वैश्वानरो विराडित्युच्यते सर्वनराभिमानित्वाद्विविधं राजमानत्वाच्च ॥ १११ ॥**

ஏதத் ஸமஷ்டி-உபஹிதம் சைதன்யம் வைச்வானரோ விராட் இத்யுச்யதே ஸர்வநர அபிமானித்வாத் விவிதம் ராஜமானத்வாச்ச ॥ 111 ॥

ஸ்தூல சரீரங்களின் தொகுதியுடன் (ஸமஷ்டி யுடன்) கூடிய சைதன்னியமானது வைச்வானரன் என் றும் விராட் என்றும் அழைக்கப்படுகிறது. ஏனெனில் அது எல்லா சரீரங்களுடனும் ஒன்றுபட்டிருக்கிறது மற்றும் பலவகையாகவும் தோற்றம் அளிக்கிறது.

சாந்தோக்ய உபநிஷதத்தில் (8.18.1) வைச்வான ரனைக் குறித்து வருமாறு கூறப்பட்டுள்ளது.

'யஸ்து ஏதம் ஏவ ப்ராதேசமாத்ரம் அபிவிமானம் ஆத்மானம் வைச்வானரம் உபாஸ்தே ।'

'ஆனால் ஓரிடத்தில் மட்டும் இருப்பவனும் மதிப்பும், பெருமையுமுடைய இந்த வைச்வானர ஆத்மனை இவ்விதத்தில் உபாசிக்கிறான்.'

சொர்க்க உலகங்கள் போன்ற உலகங்களின் அளவிற்கு அளவுக்கூறை உடையவன் ஆதலால் ஓரிடத்தில் மட்டும் இருப்பவன், எல்லா உயிர்களும் இவனை உள்ளே உறையும் ஆத்மா என்று உணர்வதால் இவன் மதிப்பும் பெருமையும் உடையவன்.

இதற்கு விளக்கவுரை எழுதும் பொழுது ஸ்ரீசங்கரர் வைச்வானர என்னும் சொல்லை வருமாறு விவரித்து உள்ளார்.

'விச்வான் நரான் நயதி புண்யபாபனுரூபாம் கதிம்
ஸர்வாத்மா ஏஷ ஈச்வரோ வைச்வானர: ।'

'எல்லா மனிதர்களையும் புண்ணியம் மற்றும் பாபத்திற்குத் தகுந்தாற்போல, கதிக்கு அழைத்துச் செல்வதால் ஸர்வாத்மனும், ஈச்வரனுமாக உள்ள இவன் வைச்வானரன் ஆவான். ''விச்சோ நர: ஏவ வா ஸர்வாத்மத்வாத்'' அல்லது ஸர்வாத்மனாக இருப்பதால் எல்லா மனிதர்களும் அவனே ஆவான்.'

கீதை வருமாறு கூறுகிறது.

'அஹம் வைச்வானரோ பூத்வா ப்ராணினாம்
தேஹமாச்ரித: ।
ப்ராணாபான-ஸமாயுக்த பசாம் யன்னஞ்
சதுர்விதம் ॥' *(கீதை 15.14)*

'நான் வைச்வானரனாக இருந்து கொண்டு, பிராணிகளின் உடலை இருப்பிடமாகக் கொண்டு,

*பிராணனுடனும் அபானனுடனும் கூடி, நான்கு விதமான உணவை ஜீர்ணம் செய்கிறேன்.'*

**अस्यैषा समष्टिः स्थूलशरीरमन्नविकारत्वादन्नमयकोशः स्थूलभोगायतनत्वाच्च स्थूलशरीरं जाग्रदिति च व्यपदिश्यते ॥ ११२ ॥**

அஸ்யைஷா ஸமஷ்டி: ஸ்தூலசரீரம் அன்னவிகாரத்வாத் அன்மையகோச: ஸ்தூலபோகாயதனத்வாச்ச ஸ்தூலசரீரம் ஜாக்ரத் இதி ச வ்யபதிச்யதே ॥ 112 ॥

*(விராட்டினுடைய) இந்த [1] ஸ்தூல சரீர தொகுதி யானது உணவின் [2] ஒரு மாற்றமாக இருப்பதால் அன்ன மயகோசம் என்றும் பருப்பொருளை (ஸ்தூல போகங் களை) அனுபவிப்பதற்கு இருப்பிடமாக இருப்பதால் இது விழிப்பு நிலையில் (ஜாக்ரத அவஸ்தை) இருப்ப தாகவும் கூறப்படுகிறது.*

*1. விராட்டினுடைய.*

*2. 'அன்னந்வை விராட்', 'விராட்ரூபன் அன்னமே' என்று சுருதி கூறுகிறது (தை. பிராம். 1.6, 3.4). சரீரங்கள், பெற்றோர் உண்ட உணவின் விளைவு ஆகும்.*

**एतद्व्यष्ट्युपहितं चैतन्यं विश्व इत्युच्यते सूक्ष्म-शरीराभिमानमपरित्यज्य स्थूलशरीरादिप्रविष्टत्वात् ॥ ११३ ॥**

ஏதத் வ்யஷ்டி உபஹிதம் சைதன்யம் விச்வ இத்யுச்யதே ஸூக்ஷ்ம சரீர அபிமானம் அபரித்யஜ்ய ஸ்தூலசரீராதி ப்ரவிஷ்டத்வாத் ॥ 113 ॥

தனித்தனியாக உள்ள (வ்யஷ்டி)[1] ஸ்தூல சரீரத்துடன் இணைந்துள்ள சைதன்னியமானது விச்வன் என்று அழைக்கப்படுகிறது. ஏனெனில் (அது) ஸூக்ஷ்ம சரீரத்தின்மீது உள்ள பிடிப்பை[2] விட்டுவிடாமல் ஸ்தூல சரீரம் போன்றவற்றில்[3] உறைந்துள்ளது.

1. முதலில் கூறப்பட்டுள்ள நான்கு விதமான சரீரங்களில் ஒவ்வொன்றையும்.

2. 'அதே நான்' என்னும் உணர்வு.

3. மூலத்தில், 'ஸ்தூல சரீரம் போன்ற' என்னும் பிரயோகம் உள்ளது. காரண சரீரம், ஸூக்ஷ்ம சரீரம் ஸ்தூல சரீரம் என்னும் மூன்று சரீரங்களின் வரிசையில், ஸ்தூல சரீரமே கடைசியாக இருப்பதால் 'போன்ற' என்னும் சொல்லிற்குத் தனிப்பட்ட பொருள் எதுவும் காணப்படவில்லை.

'வித்வன்மனோரஞ்சனி' என்னும் நூலில் வருமாறு விவரிக்கப்பட்டுள்ளது—ஸூக்ஷ்ம சரீரம் என்றால் காரண சரீரம் ஆகும். அத்துடன் ஒப்பிட்டால் இலிங்க சரீரம் அல்லது ஸூக்ஷ்ம சரீரம் ஸ்தூலமாகும். இந்த இலிங்க சரீரத்துடன் ஒப்பிட்டால் ஸ்தூல சரீரமானது இன்னும் ஸ்தூலமாகிறது. ஜீவாத்மாவிற்கு இந்த மூன்றும் உபாதிகள் ஆகும். ஸமஷ்டியில் புத்தி போன்றவற்றில் பதிவுகளுடன் கூடிய அஞ்ஞானமே அவனுக்கு உபாதியாக உள்ளது. கனவுநிலையில் உலகத்தின் பதிவுகளையும் உட்கொண்டுள்ள இலிங்க சரீரம் தான் உபாதியாகும். விழிப்பு நிலையில் ஸூக்ஷ்ம சரீரத்துடன் இணைந்துள்ள ஸ்தூல சரீரம்தான் உபாதியாகும்.

காரண சரீரம், இலிங்க சரீரம், ஸ்தூல சரீரம் என்னும் இம்மூன்றுடன் அபின்னமாக இருக்கும்பொழுது ஜீவனுக்கு முறையாக ப்ராஜ்ஞன், தைஜஸன், வைச்வானரன் என்பது பெயராகும்.

'விச்வ' என்னும் சொல்லானது 'விசப்ரவேசனே' என்னும் தாதுவிலிருந்து (வேர்ச்சொல்லிலிருந்து) தோன்றியுள்ளது.

இதற்கு முன்பு பல உபாதிகளைப் பெற்றிருந்தாலும் சைதன்யன், அடுத்தடுத்து சரீரங்களில் உட்புகுவதால், இந்த விதத்தில் மூன்று சரீரங்களில் உட்புகுவதால் அவனுக்கு 'விச்வ' என்பது பெயராகும் (ஸ்தூல சரீரம், காரண சரீரம், இலிங்க சரீரம்).

**अस्याप्येषा व्यष्टिः स्थूलशरीरमन्नविकारत्वादेव हेतोरन्नमयकोशो जाग्रदिति चोच्यते ॥ ११४ ॥**

அஸ்ய அபி ஏஷா வ்யஷ்டி: ஸ்தூலசரீரம் அன்னவிகாரத்-வாதேவ ஹேதோ: அன்னமயகோசோ ஜாக்ரதிதி ச உச்யதே ॥

இதற்கும்[1] இந்த வியஷ்டியானது,[2] ஸ்தூல சரீர மானது, உணவின் ஒரு மாற்றமாக உள்ளது என்னும் காரணத்தினாலேயே அன்னமய கோசம் என்றும், விழிப்புநிலையில்[3] இருப்பதாகவும் கூறப்படுகிறது.

1. 'விச்வ'த்திற்கு.
2. உடலைப் பெற்றுள்ள ஒவ்வொரு மனிதனும்.
3. அதனுடைய இருப்பின் அனுபவமானது விழிப்பு நிலையில் மட்டுமே உணரப்படுவதால் இப்பெயர் கொடுக்கப்பட்டுள்ளது.

**तदानीमेतौ विश्ववैश्वानरौ दिग्वातार्कवरुणाश्विभिः क्रमान्नियन्त्रितेन श्रोत्रादीन्द्रियपञ्चकेन क्रमाच्छब्दस्पर्शरूप-रसगन्धानग्नीन्द्रोपेन्द्रयमप्रजापतिभिः क्रमान्नियन्त्रितेन वागादीन्द्रियपञ्चकेन क्रमाद्वचनादानगमनविसर्गानन्दांश्चन्द्रच-**

तुर्मुखशङ्कराच्युतैः क्रमान्नियन्त्रितेन मनोबुद्ध्यहङ्कार-चित्ताख्येनान्तरिन्द्रियचतुष्केण क्रमात्सङ्कल्पनिश्चयाहङ्कार्यचैत्तांश्च सर्वानेतान् स्थूलविषयाननुभवतः 'जागरितस्थानो बहिःप्रज्ञः' (माण्डू. उ. ३) इत्यादिश्रुतेः ॥ ११५ ॥

ததானீம் ஏதௌ விச்வவைச்வானரௌ திக்-வாத-அர்க வருண அச்விபி: க்ரமாத் நியந்த்ரிதேன ச்ரோத்ராதி-இந்த்ரிய பஞ்சகேன க்ரமாத் சப்த-ஸ்பர்ச-ரூப-ரஸ கந்தான், அக்னி, இந்த்ர-உபேந்த்ர-யம-ப்ரஜாபதிபி: க்ரமாத் நியந்த்ரிதேன வாகாதி இந்த்ரிய பஞ்சகேன க்ரமாத் வசன-ஆதான-கமன-விசர்க-ஆனந்தான், சந்த்ர-சதுர்முக-சங்கர-அச்யுதை: க்ரமாத் நியந்த்ரிதேன மனோபுத்தி-அஹங்கார-சித்தாக்யேன அந்தரிந்திரிய சதுஷ்கேண க்ரமாத்-சங்கல்ப-நிச்சய அஹங்-கார்ய சைத்தான் ச ஸர்வான் ஏதான் ஸ்தூலவிஷயாத் அனுபவத: 'ஜாகரிதஸ்தானோ பஹி ப்ரஜ்ஞ (மாண். உ. 3) இத்யாதி ச்ருதே ॥ 115 ॥

அப்பொழுது,[1] விச்வனும், வைச்வானரனும் இந்த எல்லா ஸ்தூல விஷயங்களையும் அனுபவிக்கின்றனர். (அது எப்படி எனின்) திசை, வாயு, சூரியன், வருணன், அச்வினி தேவதைகள்[2] என்னும் இவர்களின் கட்டுப்பாட்டிலுள்ள காது முதலிய ஐம்புலன்களின் மூலம் ஓசை, ஊறு, ஒளி, சுவை, மணம் என்னும் இவற்றை நுகர்கின்றனர். அக்னி, இந்திரன், உபேந்திரன், யமன், பிரஜாபதி என்னும் இவர்களால் முறையான கட்டுப்பாட்டிலுள்ள நாக்கு போன்ற ஐந்து கர்மேந்திரியங்களின் மூலம் முறையே பேசுதல்,

பெற்றுக் கொள்ளுதல், செல்லுதல், வெளியேற்றுதல், இன்பம் எய்துதல் என்னும் இவற்றைச் செய்கின்றனர். சந்திரன், நான்முகன் (பிரம்மா), சிவன், விஷ்ணு இவர்களின் முறையான கட்டுப்பாட்டிலுள்ள, மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் நான்கு உட்புலன்களின் மூலம் முறையாக ஸங்கல்பம், உறுதி, 'நான்' என்னும் உணர்வு, நினைவு என்னும் இவற்றை அனுபவிக்கின்றனர். 'விழிப்பு நிலை என்னும் நிலையுள்ள, புற உலகை உணர்கின்ற' என்பன போன்ற சுருதி வாக்கியங்களும் உள்ளன (மாண். உ. 3).[3]

1. விழிப்பு நிலையில்.

2. இவர்கள் ஐந்து புலன்களை ஆளும் தேவதைகள் ஆவார்கள். இதன்பிறகு வரும் அக்னி, சந்திரன் போன்றவர்களின் விஷயத்திற்கும் இவ்விதமே அறிந்து கொள்ள வேண்டும்.

3. உபநிஷதத்திலுள்ள முழுமையான வாக்கியம் வருமாறு உள்ளது—

'ஜாகரிதஸ்தானோ பஹிஷ்ப்ரஜ்ஞ: ஸப்தாங்க ஏகோநவிம்சதிமுக: ஸ்தூலபுக் வைச்வானர: ப்ரதம பாத: ।'

'ஆத்மாவின் முதல் பரிமாணம் வைசுவானரன் எனப்படுகிறது. இதன் உணர்வு புறமுகமாக உள்ளது. ஏழு அங்கங்களும், பத்தொன்பது வாய்களும் கொண்ட வைசுவானரன் விழிப்பு நிலையில் புற உலகை அனுபவிக்கிறான்' (மாண். உ. 3).

புறமுகமாக உள்ள உணர்வு என்றால், தன்னைக் காட்டிலும் வேறுபட்டு விளங்கும் விஷயத்தில் உணர்வு உள்ளவன் என்பது பொருளாகும். சுவர்க்கம், சூரியன், வாயு, ஆகாயம், நீர், பூமி மற்றும் வேள்வி செய்வதற்கு உரிய அக்னி என்னும்

இவை ஏழும் அங்கங்கள் ஆகும். ஐந்து ஞானேந்திரிங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து பிராணன்கள், மனம், புத்தி, அங்காரம், சித்தம் என்னும் பத்தொன்பது முகங்களாகும். இவற்றினால் ஒலி போன்ற ஸ்தூல விஷயங்களை அனுபவிப்பதால் ஸ்தூல வஸ்துக்களை அனுபவிப்பவனுமாகின்றான்.

**अत्राप्यनयोः स्थूलव्यष्टिसमष्ट्योस्तदुपहितविश्व-वैश्वानरयोश्च वनवृक्षवत्तदव-च्छिन्नाकाशवच्च जलाशय-जलवत्तद्गतप्रतिबिम्बाकाशवच्च पूर्ववदभेदः ॥ ११६ ॥**

அத்ராபி அனயோ: ஸ்தூல வ்யஷ்டி ஸமஷ்ட்யோ: ததுபஹித விச்வ வைச்வானர யோச்ச வனவ்ருக்ஷவத் தத வச்சின்ன ஆகாசவச்ச ஜலாசய ஜலவத் தத்கத ப்ரதிபிம்ப-ஆகாசவச்ச பூர்வவத் அபேத: ॥ 116 ॥

இங்கும், தொகுதியாக உள்ள ஸ்தூல சரீரங்களும் தனித்தனியாக உள்ள ஸ்தூல சரீரங்களும், காட்டிலும் அதிலுள்ள மரங்களைப் போலும், குளத்தையும் அதிலுள்ள தண்ணீரையும் போல வேறு வேறானவை அல்ல. இந்த சரீரங்களுடன் கூடியுள்ள விச்வ வைச்வானரர்களும் தனி மரங்கள், காடு என்னும் இவற்றால் வரையறுக்கப்பட்ட ஆகாயத்தைப் போன்றும் குளம், நீர்த்திவலைகள் என்னுமிவற்றில் பிரதிபலிக்கும் ஆகாயம் போன்றும் ஒன்றாகவே உள்ளனர்.

ஜீவ பிரஹ்மரின் அபேதத்தை (வேறுபாடற்ற தன்மையை) அத்வைத நூல்கள் இரு முறைகளில் விவரிக்கின்றன. பிரகாசாத்மர் என்பவர் எழுதியுள்ள

'பஞ்சபாதிகா விவரண' என்னும் நூலில் அவர் இதை 'விவரண ப்ரஸ்தானம்' என்று குறிப்பிட்டுள்ளார். ஜீவனானவன் பிரம்மனின் பிரதிபிம்பன் ஆவான். பிம்பம், பிரதிபிம்பங்களில் ஒத்த தன்மை இருப்பதைப் போல இந்த இருவருள்ளும் ஒத்ததன்மை உள்ளது. இந்த வாதத்தைப் 'பிரதிபிம்ப வாதம்' என்று அழைக் கின்றனர். வாசஸ்பதி மிச்ரர் அவர்கள் எழுதியுள்ள பாமதீ என்னும் நூலில் அவர் இதை 'பாமதி பிரஸ் தானம்' என்று குறிப்பிட்டுள்ளார். அறியாமையால் ஏற்பட்டுள்ள சரீரம் போன்ற உபாதிகள் ஆத்மனை அல்லது பிரம்மனை, பானையானது ஆகாயத்தை எல்லைக்கு உட்படுத்துவதைப் போல எல்லைக்கு உட் படுத்துகின்றன. பானையினால் எல்லைக்கு உட் படுத்தப்பட்ட ஆகாயமானது உண்மையில் மஹா ஆகாயமாகவே இருப்பதைப்போல பானையை உடைக்கும் பொழுது அதிலிருந்து ஆகாயமானது மஹா ஆகாயத்தில் ஒடுங்குவதைப்போல உபாதிகள் ஒடுங் கும் பொழுது ஜீவனானவன் பிரம்மத்துடன் இணை கிறான். இந்த வாதமானது 'அவச்சேத வாதம்' என்று அழைக்கப்படுகிறது.

96-ஆம் ஸூத்திரத்திலும் மற்றும் இங்கும் கொடுக்கப்பட்டுள்ள உதாரணங்கள், இரண்டு வாதங் களையும் கவனத்தில் கொண்டு கொடுக்கப்பட்டுள்ளன.

**एवं पञ्चीकृतपञ्चभूतेभ्यः स्थूलप्रपञ्चोत्पत्तिः ॥ ११७ ॥**

ஏவம் பஞ்சீக்ருத-பஞ்ச பூதேப்ய: ஸ்தூல பிரபஞ்-சோத்பத்தி: ॥ 117 ॥

ஐந்து விதக் கலவையாக உள்ள பஞ்ச பூதங்களிலிருந்து (மூலப்பருப்பொருட்களிலிருந்து) ஸ்தூல உலகமானது இவ்விதத்தில் தோன்றியுள்ளது.

**एतेषां स्थूलसूक्ष्मकारणप्रपञ्चानामपि समष्टिरेको महान्प्रपञ्चो भवति यथावान्तरवनानां समष्टिरेकं महद्वनं भवति यथा वावान्तरजलाशयानां समष्टिरेको महान् जलाशयः॥ ११८ ॥**

ஏதேஷாம் ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரண-ப்ரபஞ்சானாமபி ஸமஷ்டி: ஏகோ மஹான் ப்ரபஞ்சோ பவதி: யதா ஆவாந்தரவனானாம் ஸமஷ்டி: ஏகம் மஹத்வனம் பவதி யதா வா ஆவாந்தர ஜலாசயானாம் ஸமஷ்டி: ஏகோ மஹான் ஜலாசய: ॥ 118 ॥

சிறு சிறு காடுகள் ஒருங்கிணைந்து ஒரு பெரிய காடாக ஆவதைப்போல அல்லது சிறு சிறு குளங்கள் ஒருங்கிணைந்து பெரிய குளமாக ஆவதைப் போல, இந்த ஸ்தூல - ஸூக்ஷ்ம - காரண உலகங்கள் ஒருங்கிணைந்து ஒரு பெரிய உலகமாகி உள்ளது.

**एतदुपहितं वैश्वानरादीश्वरपर्यन्तं चैतन्यमप्यवान्तरवनावच्छिन्नाकाशवदवान्त-रजलाशयगतप्रतिबिम्बाकाशवच्चैकमेव ॥ ११९ ॥**

ஏததுபஹிதம் வைச்வானராதி-ஈச்வர பர்யந்தம் சைதன்யம் அபி ஆவாந்தரவன-அவச்சின்னம் ஆகாசவத் ஆவாந்தர ஜலாசயகத ப்ரதிபிம்ப ஆகாசவச்ச ஏகமேவ ॥ 119 ॥

*பல சிறிய காடுகளால் எல்லைக்கு உட்படுத்தப் பட்ட ஆகாயமானது எவ்விதம் அவற்றால் ஏற்பட் டுள்ள பெரிய காட்டினால் எல்லைக்கு உட்படுத்தப் பட்டுள்ள ஆகாயத்திலிருந்து வேறானது இல்லையோ. பல சிறிய குளங்களில் பிரதிபலிக்கும் சூரியனானது எவ்விதம் அவற்றால் ஏற்பட்டுள்ள பெரிய குளத்தில் பிரதிபலிக்கும் சூரியனைவிட வேறானது இல்லையோ அதைப்போன்றே, வைச்வானரனிலிருந்து தொடங்கி ஈச்வரன் ஈறாக உள்ள இந்த பெரிய உலகத்துடன் கூடியுள்ள சைதன்னியமானது ஒன்றுதான்.*

**आभ्यां महाप्रपञ्चतदुपहितचैतन्याभ्यां तप्तायःपिण्डवदविविक्तं सदनुपहितं चैतन्यं 'सर्वं खल्विदं ब्रह्म' (छा. उ. ३.१४.१) इति (महा) वाक्यस्य वाच्यं भवति विविक्तं सल्लक्ष्यमपि भवति ॥ १२० ॥**

*ஆப்யாம் மஹாப்ரபஞ்ச-ததுபஹித சைதன்யாப்யாம் தப்த-ஆய: பிண்டவத் அவிவிக்தம் ஸத் அனுபஹிதம் சைதன்யம் 'ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம' (சாந். உ. 3.14.1) இதி வாக்யஸ்ய வாச்யம் பவதி விவிக்தம் ஸத் லக்ஷ்யமபி பவதி ॥ 120 ॥*

*பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்புக் குண்டைப் போல மிகப்பெரிய இவ்வுலகத்திலிருந்து, அத்துடன் இணைந்துள்ள சைதன்னியத்திலிருந்து பிரித்து உணரப் படாமல், இயல்பாகவே எந்த விதமாத உபாதியுமற்ற (சேர்க்கையுமற்ற) சைதன்னியம்தான் 'இவ்வனைத்தும் உண்மையில் ப்ரஹ்மமேயாகும்' (சாந். உ. 3.14.1)*

என்னும் வேத மந்திரத்திற்கு நேரான பொருளாக உள்ளது. அவற்றிலிருந்து பிரிந்து உணரப்படும் பொழுது அந்த மந்திரத்தின் உட்பொருளாக அமைகிறது. 50-ஆம் ஸூத்திரத்திலுள்ள குறிப்பைப் பார்க்கவும்.

**एवं वस्तुन्यवस्त्वारोपोऽध्यारोपः सामान्येन प्रदर्शितः ॥**

ஏவம் வஸ்து நி அவஸ்து-ஆரோப: அத்யாரோப: ஸாமான்யேன ப்ரதர்சித: ॥ 121 ॥

இந்த விதத்தில் (உண்மையாக உள்ள) வஸ்துவில் இல்லாத ஒன்றை ஏற்றுவிக்கும் செய்கையான அத்யா ரோபம் என்பது பொதுவான முறையில் விளக்கப்பட் டுள்ளது.

## ஜீவனின் இயல்பைக் குறித்த பலவகையான கருத்துக்கள்

**इदानीं प्रत्यगात्मनीदमिदमयमयमारोपयतीति विशेषत उच्यते ॥ १२२ ॥**

இதானீம் ப்ரத்யகாத்மனி இதம் இதம் அயம் அயம் ஆரோபயதி இதி விசேஷத: உச்யதே ॥ 122 ॥

இப்பொழுது உள்ளே வீற்றுள்ள ஆத்மாவின்மீது மனிதர்கள் 'நான் இது', 'நான் இது' என்று எவ்விதம் (இவன், இது என்று) ஏற்றிக் கூறுகிறார்கள் என்பது (அத்யாரோபம் செய்வது) விரிவாகக் கூறப்படுகிறது.

இதுவரையில் பிரம்மத்தின்மீது, உலகத்தைக் குறித்து ஏற்றிக் கூறியுள்ளது விவரிக்கப்பட்டது.

இப்பொழுது ஜீவனின் இயல்பைக் குறித்து உள்ள பல வகையான கருத்துக்களைக் குறித்த விவரங்கள் தொடங்கப்பட்டுள்ளன. ப்ரத்யகாத்மன் என்றால் உள்ளே வீற்றுள்ள ஆத்மா என்பது பொருளாகும். உடல், புலன்களைவிட ஸூக்ஷ்மமாக உள்ள ஜீவாத்மனைத்தான் இங்கு ப்ரத்யகாத்மன் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

### சார்வாகர்களின் மதம்

**अतिप्राकृतस्तु 'आत्मा वै जायते पुत्रः' इत्यादिश्रुतेः स्वस्मिन्निव पुत्रेऽपि प्रेमदर्शनात्पुत्रे पुष्टे नष्टे चाहमेव पुष्टो नष्टश्चेत्याद्यनुभवाच्च पुत्र आत्मेति वदति ॥ १२३ ॥**

அதிப்ராக்ருதஸ்து 'ஆத்மா வை ஜாயதே புத்ர:' இத்யாதி ச்ருதே: ஸ்வஸ்மின் இவ புத்ரே அபி ப்ரேமதர்சனாத் புத்ரே புஷ்டே நஷ்டே ச அஹமேவ புஷ்டோ நஷ்டச்ச இத்யாத்யனுபவாச்ச புத்ர: ஆத்மா இதி வததி ॥ 123 ॥

மிகவும் அறியாமை நிறைந்தவன் 'தானே (தன்னிடத்தில்) மகனாகப் பிறக்கிறான்' என்பன போன்ற வேத வாக்கியத்தாலும் ஒருவன் தன் மகனைத் தன்னுடைய ஆத்மாவைப் போலவே விரும்புவதாலும், தன் மகன் ஊட்டம் உள்ளவனாகவோ அல்லது ஊட்டமற்றவனாகவோ இருந்தால் தன்னையும் ஊட்டமுடையவனாகவோ அல்லது ஊட்டமற்றவனாகவோ கருதுவதாலும் ஒரு மனிதன் தன் மகனைத் தன் ஆத்மா என்று கூறுகிறான்.

இதிலிருந்து 127-ஆம் ஸூத்திரம் வரையிலும் சார்வாகர்களின் பலவகையான கொள்கைகள் விவரிக்கப்பட்டுள்ளன. சார்வாகர் என்றால் கேட்ப தற்கு நன்றாக உள்ள (சாரு) சொற்களைப் பேசுபவர்கள் (வாக்) என்பது பொருளாகும். ஆன்மீகம் சார்ந்த தத்துவ ஆராய்ச்சி என்னும் சிக்கலான விஷயத்திற்குச் செல் லாமலே உடல் போன்றவற்றையே ஆத்மா என்று தவறாகக் கருதி, புலன் இன்பங்களையே பரம புருஷார்த்தம் என்று அறிவுறுத்திக் கொண்டுள்ள அவ ருடைய சொற்கள் சாமான்னியமானவர்களுக்குக் கேட் பதற்கு மிகவும் இதமாக இருப்பதால் அவர்களுக்கு இந்தப் பெயர் பொருத்தமானதாகவே உள்ளது. இந்த சார்வாக மதத்தின் மூல புருஷர் பிருஹஸ்பதி என்றும் அவருக்குச் சார்வாகன் என்னும் சீடன் இருந்தான் என்றும் சிலர் கூறுகின்றனர்.

'நான்' என்பதுதான் நமக்கு மிகவும் விரும்பத்தக்க பொருள் என்பதால், எது எதெல்லாம் நமக்கு மிகவும் விருப்பமானவையோ அவ்வனைத்துமே 'நானே' ஆகும். இந்தக் கண்ணோட்டத்துடன் பார்க்கும் பொழுது, மிகவும் மந்தமான அறிவையுடைய மகன் மீது மோகம் கொண்டுள்ளவர்களுக்கு மகன்தான் ஆத்மா ஆகிறான்.

இந்தப் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ள கருத்துக் களை எல்லாம், நூலை எழுதியவர்கள் சுருதி, யுக்தி (Inference) மற்றும் நேரடியான அனுபவம் என்னும் மூன்று பிரமாணங்களை ஆதாரமாகக் கொண்டு கொடுத் துள்ளனர். சார்வாகர் போன்றவர்களுக்கு சுருதியானது

பிரமாணமாக இல்லாமல் இருந்தாலும், வேதாந்திகள் அதனை ஏற்றுக்கொள்வதால் வேத வாக்கியங்கள் உதாரணங்களாகக் காட்டப்பட்டுள்ளன. சில சமயங்களில் ஏளனம் செய்வதற்காக மேற்கோளாகக் காட்டப் படுவது உண்டு. ஆனால் எல்லா இடங்களில் இந்த உதாரணங்கள் பொருத்தமானதாக இருக்காது.

இங்கு கொடுக்கப்பட்டுள்ள கருத்துக்களைக் கொண்டிருந்த சார்வாகர்கள் வரலாறு பூர்வமாக இருந்தனர் என்று கூறுவதற்கு இயலவில்லை. தத்துவ ஆராய்ச்சியின் வளர்ச்சிப் பாதையில் இதுவும் ஒரு கட்டம் என்று உணர வேண்டும்.

**चार्वाकस्तु 'स वा एष पुरुषोऽन्नरसमयः' (तै. उ. २.१.१) इत्यादिश्रुतेः प्रदीप्तगृहात्स्वपुत्रं परित्यज्यापि स्वस्य निर्गमदर्शनात्स्थूलोऽहं कृशोऽहमित्याद्यनुभवाच्च स्थूल-शरीरमात्मेति वदति ॥ १२४ ॥**

சார்வாகஸ்து 'ஸ வா ஏஷ புருஷோऽன்னரஸமய:' (தை. உ. 2.1.1) இத்யாதி ச்ருதே: ப்ரதீப்த க்ருஹாத் ஸ்வபுத்ரம் பரித்யஜ்ய அபி ஸ்வஸ்யநிர்கம தர்சனாத் 'ஸ்தூலோऽஹம்', 'க்ருசோऽஹம்' இத்யாத்யனுபவாச்ச 'ஸ்தூலசரீரம் ஆத்மா' இதி வததி ॥ 124 ॥

ஒரு சார்வாகனோ, 'அந்தப் புருஷன்[1] அன்னரஸத்தால் தோன்றியவன்' (தை. உ. 2.1.1) என்பன போன்ற சுருதி வாக்கியத்தாலும், நெருப்புப்பற்றி எரிந்து கொண்டிருக்கும் வீட்டிலிருந்து (அங்கு) தன்னுடைய

மகனைக் கூட விட்டுவிட்டு, தான் மட்டும் தப்பித்துக் கொண்டு வெளியேறுவது கண்கூடானது என்பதாலும்[2], 'நான் பருத்தவன்', 'நான் மெலிந்தவன்' போன்ற அனுபவம் இருப்பதாலும், ஸ்தூல சரீரம்தான் ஆத்மா என்று கூறுகிறான்.

1. இங்கு உடலே புருஷன் என்று கூறப்பட்டுள்ளது.

2. மகனே ஆத்மாவாக இருக்கும் பட்சத்தில் தன் உயிரைக் கொடுத்தாவது அவனைக் காப்பாற்றி இருக்க வேண்டும். அவ்விதமின்றி, மகனின் உடலைப் பலி கொடுத்தாலும் பரவாயில்லை. தன் உடல் காப்பாற்றப்பட்டால் போதும் என்னும் எண்ணம் காணப்படுவதால் சரீரம்தான் ஆத்மா ஆகும் என்பது கருத்தாக உள்ளது.

இந்த அனுபவங்களில் 'நான்' என்றால் ஸ்தூல சரீரம் ஆகும்.

இங்கு தொடங்கி கூறப்படும் ஒவ்வொரு கருத்தும், முதலில் கூறப்பட்டுள்ள கருத்தைக் காட்டிலும் உயர்ந்தது ஆகும்.

**अपरश्चार्वाकः 'ते ह प्राणाः प्रजापतिं पितरमेत्योचुः' (छा. उ. ५.१.७) इत्यादिश्रुतेरिन्द्रियाणामभावे शरीरचलनाभावात्काणोऽहं बधिरोऽहमित्याद्यनुभवा-च्चेन्द्रियाण्यात्मेति वदति ॥ १२५ ॥**

அபரம் சார்வாக: 'தே ஹ ப்ராணா: ப்ரஜாபதிம் பிதர-மேத்ய ஊசு:' (சாந். உ. 5.1.7) இத்யாதி ச்ருதே: இந்த்ரி-யாணாம் அபாவே சரீரசலனாபாவத் 'காணோऽஹம்' இத்யாத்-யனுபவாச்ச இந்த்ரியாணி ஆத்மா இதி வததி ॥ 125 ॥

*மற்றொரு சார்வாகன் 'அந்தப் பிராணன்கள்[1] தந்தையாகிய பிரம்மதேவரை அணுகிக் கூறின' (சாந். உ.5.1.7) என்பன போன்ற சுருதி வாக்கியம் இருப்பதாலும், புலன்கள் இல்லையெனின் உடலில் இயக்கமானது இருப்பதில்லை என்பதாலும்[2], 'நான் ஒற்றைக் கண்ணை உடையவன்', 'நான் செவிடன்' போன்ற அனுபவம் இருப்பதாலும் புலன்களே ஆத்மா என்று கூறுகிறான்.*

*1. இங்கு பிராணன்கள் என்றால் புலன்கள் ஆகும்.*

*2. புலன்கள் செயலாற்றாமல் இருந்தால் உடலானது இயங்காமலே இருக்கும். உதாரணம் கனவு நிலை மற்றும் அயர்ந்த உறக்க நிலை. ஆத்ம வஸ்துவானது சுதந்திரமான ஸத்தியமாகும். ஆனால் உடலானது தன்னுடைய செயல்களுக்காகப் புலன்களை சார்ந்து இருப்பதால் அது பரதந்திரமாகும் (பரதந்திரம்—பிறரைச் சார்ந்து இருத்தல்). எனவே அது ஆத்மா ஆக இயலாது. புலன்களே ஆன்மா என்னும் இக் கருத்து இந்தச் சார்வாகனின் வாதமாகும். சார்வாகத்திலும் கருத்து வேறுபாடுகள் உள்ளன.*

**अपरश्चार्वाकः 'अन्योऽन्तर आत्मा प्राणमयः' (तै. उ. २.२.३) इत्यादिश्रुतेः प्राणाभाव इन्द्रियादिचलनायोगादहमशनायावानहं पिपासावानित्यादि अनुभवाच्च प्राण आत्मेति वदति ॥ १२६ ॥**

அபரச்சார்வாக: 'அன்யோऽந்தர ஆத்மா ப்ராணமய:' (தை. உ. 2.2.3) இத்யாதி ச்ருதே: ப்ராணாபாவே இந்த்ரியாதி சலன அயோகாத் அஹம் அசனாயாவான் அஹம் பிபாஸாவான் இத்யாதி அனுபவாச்ச ப்ராண: ஆத்மா இதி வததி: ॥ 126 ॥

வேறொரு சார்வாகன் (ஸ்தூல சரீரத்தைவிட) வேறானவனாக இருப்பவனும், உள்ளே உறைபவனுமான, ப்ராணமயமாக உள்ள ஆத்மா' (தை. உ. 2.2.3.) போன்ற சுருதி வாக்கியங்களினாலும், பிராணன் இல்லையெனின் புலன்கள் செயல்படுவதில்லை என்பதாலும், 'நான் பசித்திருக்கிறேன்', 'நான் தாகமுடையவனாக இருக்கிறேன்' போன்ற அனுபவம் இருப்பதாலும் ப்ராணனே ஆத்மா என்று கூறுகிறான்.

புலன்களே ஆத்மாவாக உள்ளது என்னும் கருத்தை எடுத்துக் கொண்டால், பிராணன் உடலை விட்டு அகன்றபிறகு, புலன்கள் ஆத்மா இல்லை. பிராணனே ஆத்மா ஆகும். அதுவுமல்லாமல் பசி, தாகம் போன்றவை பிராணனின் இயல்புகளாக இருந்தாலும், அவற்றை நம்மீது ஏற்றிக் கொள்வதால் 'நாம்' பிராணனே ஆவோம். சுருதியும் இக்கருத்தையே உறுதி செய்கிறது—என்பது இந்தச் சார்வாகனின் கருத்து ஆகும்.

**अन्यस्तु चार्वाकः 'अन्योऽन्तर आत्मा मनोमयः' (तै. उ. २.३.१) इत्यादिश्रुतेर्मनसि सुप्ते प्राणादेरभावादहं सङ्कल्पवानहं विकल्पवानित्याद्यनुभवाच्च मन आत्मेति वदति ॥ १२७ ॥**

அன்யஸ்து சார்வாக: 'அன்யோऽந்தர ஆத்மாமனோமய:' (தை. உ. 2.3.1) இத்யாதி ச்ருதே: மனஸி ஸுப்தே ப்ராணாதே: அபாவாத் அஹம் ஸங்கல்பவான் அஹம் விகல்பவான் இத்யாத்யனுபவாச்ச மன: ஆத்மா இதி வததி ॥ 127 ॥

மற்றொரு சார்வாகன் (பிராணமயனைவிட) 'வேறாக இருப்பவனும், உள்ளே உறைபவனும் மனோ மயனுமான இவனே ஆத்மா' (தை. உ. 2.3.1) போன்ற சுருதி வாக்கியம் இருப்பதாலும், மனமானது அயர்ந்த உறக்கத்தில் இருக்கும் பொழுது பிராணன் போன்றவை ஒடுங்கிவிடுவதாலும், 'நான், நிச்சயம் செய்கிறேன்', 'நான் ஐயம் கொள்கிறேன்' போன்ற அனுபவம் இருப்ப தாலும் மனம்தான் ஆத்மா என்று கருதுகிறான்.

இவனுடைய கருத்தின்படி பிராணனுடைய, ஐந்து பிராணன்களின் செயல்கள் மனத்தைச் சார்ந்து இருக் கும். மனமானது அயர்ந்த உறக்கத்தில் இருக்கும் பொழுது அல்லது மயக்க நிலையில் இருக்கும் பொழுது இவை வெளிப்பட்டு செயலாற்றுவதில்லை. எனவே பிராணனானது ஆத்மா இல்லை. மனத்தின் இயல்புகளான உறுதி செய்தல், ஐயம் கொள்ளுதல் போன்றவற்றை நம்மிடம் ஏற்றிக் கொள்வதால் நாம் உண்மையில் மனமாகவே உள்ளோம். சுருதியும் இதையே விவரிக்கிறது. எனவே மனம்தான் ஆத்மா ஆகும்.

## பௌத்த மதம்

**बौद्धस्तु 'अन्योऽन्तर आत्मा विज्ञानमयः' (तै. उ. २.४.१) इत्यादिश्रुतेः कर्तुरभावे करणस्य शक्त्यभावादहं कर्ताहं भोक्तेत्याद्यनुभवाच्च बुद्धिरात्मेति वदति ॥ १२८ ॥**

பௌத்தஸ்து 'அன்யோऽந்தர ஆத்மா விஞ்ஞானமய:' (தை. உ. 2.4.1) இத்யாதி ச்ருதே: கர்து: அபாவே கரணஸ்ய

சக்தி-அபாவாத் அஹம் கர்தா அஹம் போக்தா இத்யாத்யனு-பவாச்ச புத்தி: ஆத்மா இதி வததி ॥ 128 ॥

பௌத்தனோ, (மனோமயனைவிட) வேறானவனும் இதனுள்ளும் உறைகின்ற ஆத்மா விஞ்ஞானமயன்' (தை. உ. 2.4.1) போன்ற சுருதி வாக்கியம் இருப்பதாலும் 'நான் செய்பவன்' நான் அனுபவிப்பவன் போன்ற அனுபவம் இருப்பதாலும் புத்திதான் ஆத்மா என்று கூறுகிறான்.

வேதத்தின் பிரமாணத்தை ஏற்காதவர்களின் குழுவில் சார்வாகர்களைப் போன்றே பௌத்தரும் சேர்ந்தவர்களாக உள்ளனர். எனவே இங்கு அவர்களின் கருத்து உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளது. அவர்கள் உபநிஷதத்தின் வாக்கியத்தை மேற்கோளாகக் காட்டி இருப்பது வேதாந்தியின் சமாதானத்திற்கு மட்டுமே.

புத்தமதத்தில் நான்கு பிரிவுகள் உள்ளன.

1. மாத்யமிக அல்லது சூனியவாதம்.
2. யோகாசார அல்லது விஞ்ஞானவாதம்.
3. ஸௌத்ராந்திகர்.
4. வைபாஷிகர்.

ஸௌத்ராந்திகர்களும், வைபாஷிகர்களும், புற உலகம் உண்மையானது. அதைப் போன்றே மனமும் உண்மையானது என்று நம்புகின்றனர். மாத்யமிகர்கள் உண்மையான வஸ்துவே இல்லை, எல்லாம் சூனியம் தான் என்று கூறுகின்றனர். இவர்களுடைய வாதமானது 131-ஆம் ஸூத்திரத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

இங்கு விஞ்ஞானவாதிகளின் கருத்தை முன்வைத் திருக்கிறேன். இவர்களுடைய கருத்தின்படி, மற்ற புலன் களைப் போல மனமும் கூட ஒரு புலனே ஆகும். செய் பவன் அல்ல, இதைக் கரணமாகப் பயன்படுத்துவது வேறு ஆகும். அது விஞ்ஞானம் அல்லது புத்தியாகும்.

மனம்தான் செய்பவன் அல்லது ஆத்மா என்று நம்பினால், மனம் எல்லாப் புலன்களுடன் அதே சமயத் திலேயே தொடர்பைப் பெற்றிருப்பதால், அவைகளி லிருந்து வரும் அனுபவங்களும் அதே சமயத்திலேயே ஏற்பட்டு மருள் அடைகிறது. எனவே அதைவிட வேறுபட்ட ஒன்று கண்டிப்பாக இருக்க வேண்டும். அதுதான் புத்தியாகும்.

இங்கு புத்தி என்னும் சொல்லை, பௌத்தர்களின் 'க்ஷணிக விஞ்ஞானம்' அல்லது 'விஞ்ஞானம்' என்னும் பரிபாஷையின் சொல்லிற்குச் சமமாகப் பயன்படுத் தியுள்ளேன். இதன்படி புத்தியானது அந்தகரணத்தின் செயலன்று. அலை அலையாக வந்துகொண்டும், சென்றுகொண்டும் இருக்கும் ஞானத்தொகுதியாகும்.

## மீமாம்சகர்களின் மதம்

**प्राभाकरतार्किकौ तु 'अन्योऽन्तर आत्माऽऽनन्दमयः' (तै. उ. २.५.१) इत्यादिश्रुतेर्बुद्ध्यादीनामज्ञाने लयदर्शनादहमज्ञोऽहमज्ञानीत्याद्यनुभवाच्चाज्ञानमात्मेति वदतः ॥ १२९ ॥**

ப்ராபாகர-தார்கிகௌ து 'அன்யோऽந்தர ஆத்மாऽऽனந்த-மய:' (தை. உ. 2.5.1) இத்யாதி ச்ருதே: புத்யாதீனாம்

அஞ்ஞானே லயதர்சனாத் அஹம் அஜ்ஞ: அஹம் ஞானீ இத்யாத்யனுபவாச்ச அஞ்ஞானம் ஆத்மா இதி வதத: ॥ 129 ॥

பிராபாகர மீமாம்ஸகர்களும்,[1] தார்க்கிகர்களும்[2] '(விஞ்ஞானமயத்தைவிட) வேறானவனும், இதனுள்ளும் உறைகின்ற ஆத்மா ஆனந்தமயன்' (தை. உ. 2.5.1) போன்ற சுருதி வாக்கியங்கள் இருப்பதாலும், புத்தி போன்றவை[3] அஞ்ஞானத்துடன் ஒடுங்கி விடுவது[4] காணப்படுவதாலும் மற்றும் 'நான் அஞ்ஞானி', 'நான் ஞானி'[5] போன்ற அனுபவங்கள் இருப்பதாலும் அஞ்ஞானமே ஆத்மா[6] என்று கூறுகின்றனர்.

1. பூர்வ மீமாம்ஸ தரிசனத்தின் மூல நூலான ஜைமினி அவர்கள் எழுதியுள்ள மீமாம்ஸை ஸூத்திரங்களுக்கு சபர முனிவர் விளக்கவுரை எழுதியுள்ளார். இதற்கு பிரபாகர மிச்ரர் என்பவர் 'ப்ருஹதீ' என்னும் விளக்கவுரையை எழுதியுள்ளார். இவரைப் பின்பற்றுவோர் பிராபாகரர்கள். அதே சபர விளக்கவுரைக்கு சுலோக வார்த்திகம் என்னும் நூலை குமாரில பட்டர் என்னும் மற்றொரு அறிஞர் எழுதியுள்ளார். இவரைப் பின்பற்றுவோர் 139-ஆம் ஸூத்திரத்தில் கூறப்பட்டுள்ள பாட்டர்கள் ஆவார்கள்.

2. நியாயம், வைசேஷிகம் என்னும் தரினங்களை விவரிப்பவர்கள் ஆவார்கள். இவர்கள் தர்க்கத்திற்கு முதன்மையான இடமளித்திருப்பதால் தார்கீகர்கள் ஆவார்கள்.

3. ஞானம், இன்பம், துன்பம், ஆசை போன்றவை.

4. அயர்ந்த உறக்க நிலையில் ஞானம் இருப்பதில்லை. ஆன்மா இருக்கிறது. எனவே ஞானத்தைவிட வேறானதாக உள்ள, ஞானமற்ற 'அந்த ஞானத்தில்' புத்தி போன்றவை ஒடுங்குகின்றன.

5. சில பாடங்களில் அஹமஞ்ஞானி என்றும் வேறு சில பாடங்களில் அஹம் ஞானி என்றும் காணப்படுகிறது.

6. பிராபாகரர்கள் மற்றும் தார்க்கீகர்களின் கருத்துப்படி ஆத்மாவானது ஞானஸ்வரூபன் அல்லன். ஞானமானது ஆத்மாவிற்கு வரத்தக்க, செல்லத்தக்க, ஒரு இயல்பாக உள்ளது. எனவே அவன் ஞானத்தை விட வேறுபட்ட அஞ் ஞானமான ஜடமான வஸ்து.

**भाट्टस्तु 'प्रज्ञानघन एवानन्दमयः' (माण्डू. उ. ५) इत्यादिश्रुतेः सुषुप्तौ प्रकाशाप्रकाशसद्भावान्मामहं न जानामीत्याद्यनुभवाच्चाज्ञानोपहितं चैतन्यमात्मेति वदति ॥ १३० ॥**

பாட்டஸ்து 'ப்ரஞ்ஜான கன ஏவானந்தமய:' (மாண். உ. 5) இத்யாதி ச்ருதே; ஸுஷுப்தௌ ப்ரகாச அப்ரகாச ஸத்பாவாத் மாம் அஹம் ந ஜானாமி இத்யாத்யனுபவாச்ச அஞ்ஞானோபஹிதம் சைதன்யம் ஆத்மா இதி வததி ॥ 130 ॥

குமாரில பட்டரைப்[1] பின்பற்றுபவர்கள் (பாட்ட மீமாம்ஸகர்கள்) 'உணர்வால் நிறைந்தது, ஆனந்தமய மானது'[2] (மாண். உ. 5) போன்ற சுருதி வாக்கியம் இருப்பதாலும், அயர்ந்த உறக்க நிலையில் ஞானம், அஞ்ஞானம் என்னும் இரண்டும் இருப்பதாலும்[3] 'நான் என்னைத் தெரிந்து கொள்ளவில்லை' என்பன போன்ற அனுபவம் இருப்பதாலும், அஞ்ஞானத்தை உபாதி யாகப் பெற்றுள்ள சைதன்னியமே ஆத்மா என்று கூறுகின்றனர்.[4]

1. குமாரில பட்டரைப் பின்பற்றுபவர்கள்.

2. விழிப்பு மற்றும் கனவு நிலையில் ஞானமானது தெளிவாகத் தெரிகிறது. அயர்ந்த உறக்க நிலையில் காணப் படுவதில்லை. அதனால் ப்ரஜ்ஞானமானது செறிந்த அடர்ந்த பூதம் என்று கூறப்பட்டுள்ளது. ஆனந்தமயம் என்று கூறுகை யில் 'மய' என்னும் விகுதியானது அதிகமாக உள்ளது என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்டு உள்ளது. ஆனந்தம் அதிகமாக இருப்பதால் ஆனந்தமயம் எனப்படுகிறது. ஆனால் அத்துடன் ஆனந்தம் இல்லாததும் அதாவது ஜட அம்சமும் இருக்கும்.

3. அயர்ந்த உறக்க நிலையிலிருந்து எழுந்தவன் 'நான் நன்றாக உறங்கினேன்', 'எனக்கு எதுவும் தெரியவில்லை' என்று நினைவுபடுத்திக் கொள்கிறான். 'எனக்கு எதுவும் தெரியவில்லை' என்பது அஞ்ஞானத்தின் அம்சமாகும். நன்றாக உறங்கிய அனுபவத்தை நினைவுப்படுத்திக் கொண் டிருப்பதால் அனுபவம் பெற்ற பொழுது ஞானம் கண்டிப் பாக இருந்திருக்க வேண்டும். இவ்விதத்தில் அயர்ந்த உறக்க நிலையில் ஞானம், அஞ்ஞானம் என்னும் இரண்டுமே இருக்கின்றன.

4. இவர்களுடைய கருத்தின்படி ஆத்மா முழுமையான ஜடவஸ்துவும் இல்லை, ஞானஸ்வரூபனும் இல்லை. அவன் இந்த இரண்டின் கலவையாக இருக்கிறான்.

## சூனியவாதி பௌத்தரின் மதம்

**अपरो बौद्धः 'असदेवेदमग्र आसीत्' (छा. उ. ३.१९.१) इत्यादिश्रुतेः सुषुप्तौ सर्वाभावादहं सुषुप्तौ नासमित्युत्थितस्य स्वाभावपरामर्शविषयानुभावच्च शून्यमात्मेति वदति ॥ १३१ ॥**

அபரோ பௌத்த: 'அஸதேவேதமக்ர ஆஸீத' (சாந். உ. 3.19.1) இத்யாதி ச்ருதே: ஸுஷுப்தௌ ஸர்வாபாவாத் அஹம் ஸுஷுப்தௌ நாஸம் இதி உத்திதஸ்ய ஸ்வ-அபாவ-பராமர்ச-விஷய-அனுபாவச்ச சூன்யம் ஆத்மா இதி வததி ॥ 131 ॥

பௌத்தர்களின் ஒரு சார்பினன்[1] படைப்பிற்கு முன்பு இந்த உலகமானது அஸத்தாகவே இருந்தது[2] *(சாந். உ. 3.19.1)* போன்ற சுருதி வாக்கியத்தாலும், அயர்ந்த உறக்க நிலையில் ஒன்றும் தெரிவதில்லையாத லாலும்,[3] அயர்ந்த உறக்க நிலையிலிருந்து விழித்து எழுந்தவன் 'உறக்கத்தில் நான் இல்லை' என்று தன் னையே இல்லை என்று கூறிக் கொள்ளும் ஓர் அனுபவம் இருப்பதாலும்[4] சூன்யமே ஆத்மா என்று கூறுகிறான்.

1. நிலையற்ற தன்மையை உடைய விஞ்ஞானவாதி யைக் காட்டிலும் வேறுபட்டவனாக விளங்கும் சூனியவாதி.

2. வேதாந்திகளின் கருத்திற்கு ஏற்ப அஸத் என்றால் சூனியமன்று. நாமரூபங்கள் வெளிப்படுவதற்கு முந்தைய நிலையாகும்.

3. அறிபவன் அறியத்தகுந்த பொருள் மற்றும் அறிவு.

4. அயர்ந்த உறக்க நிலையில் எந்த அனுபவமும் ஏற் படுவது இல்லை. விழித்து எழுந்தவுடன் ஏற்படும் நினை வானது அந்த அனுபவத்தை மீண்டும் நினைவு படுத்திக் கொள்வதாகும். எனவே விழிப்பு நிலையில் தோன்றும் இந்த அனுபவமானது தன்னைக் குறித்த எண்ணமற்ற நிலையைப் பரிசீலிக்கும் அனுபவமே தவிர நேராக ஏற்பட்ட அனுபவத்தை நினைவு கூர்வது அல்ல.

## சித்தாந்தம்

**एतेषां पुत्रादीनामनात्मत्वमुच्यते ॥ १३२ ॥**

ஏதேஷாம் புத்ராதீனாம் அனாத்மத்வம் உச்யதே ॥ 132 ॥

இப்பொழுது மகன் போன்றவர்கள் ஆத்மா இல்லை என்பது கூறப்படுகிறது.

இந்த இடத்திலிருந்து ஆத்மஸ்வரூபத்தைக் குறித்த வேதாந்த தத்துவத்தின் விளக்கமானது தொடங்கப் பட்டுள்ளது. அவ்விதம் தொடங்குவதற்கு முன்பு இது வரையிலும் விவரித்த மற்ற கருத்துக்களை மறுக்க வேண்டியுள்ளது. இந்த மறுப்பானது இரு கட்டங்களாகச் செய்யப்பட்டுள்ளது. முதற்கட்டத்தில், இந்தக் கருத்துக்கள் ஒன்றுக்கொன்று எதிரானதாக இருப்பதால் தாமாகவே அகன்று விடுகின்றன என்று கூறி, இரண் டாம் கட்டத்தில் நேராகவே அக்கருத்துக்கள் மறுக்கப் பட்டுள்ளன.

**एतैरतिप्राकृतादिवादिभिरुक्तेषु श्रुतियुक्त्यनुभवाभासेषु पूर्वपूर्वोक्तश्रुतियुक्त्यनुभवा-भासानामुत्तरोत्तरश्रुतियुक्त्य-नुभवाभासैरात्मत्वबाधदर्शनात्पुत्रादीनामनात्मत्वं स्पष्टमेव ॥**

ஏதை: அதிப்ராக்ருதாதிவாதிபி: உக்தேஷு ச்ருதி-யுக்தி-அனுபவ ஆபாஸேஷு பூர்வபூர்வோக்த ச்ருதி-யுக்தி-அனுபவ ஆபாஸானாம் உத்தரோத்தர ச்ருதி-யுக்தி-அனுபவ ஆபாஸ்யை: ஆத்மத்வ பாததர்சனாத் புத்ராதீனாம் அனாத்-மத்வம் ஸ்பஷ்டமேவ ॥ 133 ॥

மிகவும் அறியாமை நிறைந்தவர்கள் போன்ற பலரால் கூறப்பட்ட, ச்ருதி, யுக்தி, அனுபவங்களைப் போலத் தோன்றும் இந்த வாதங்களைத் (தவறாகச்) சொல்லுதல், (தவறான) தர்க்கம், (தவறான) அனு பவங்களிலிருந்து மேற்கோள்கள் போன்றவற்றில், முன்னவரால் கூறப்பட்ட சுருதி, யுக்தி, அனுபவம் ஆகியவை, பின்னால் வந்தவர்களால் கூறப்பட்ட சுருதி, யுக்தி, அனுபவம் ஆகியவற்றால் மறுக்கப் படுவதால் மகன் போன்றவை ஆத்மா அல்ல என்பது தெளிவாகப் புலப்படுகிறது.

**किञ्च प्रत्यगस्थूलोऽचक्षुरप्राणोऽमना अकर्ता चैतन्यं चिन्मात्रं सदित्यादिप्रबलश्रुतिविरोधादस्य पुत्रादिशून्यपर्यन्तस्य जडस्य चैतन्यभास्यत्वेन घटादिवदनित्यत्वादहं ब्रह्मेति विद्वदनुभवप्राबल्याच्च तत्तच्छ्रुतियुक्त्यनुभवाभासानां बाधितत्वादपि पुत्रादिशून्यपर्यन्तमखिलमनात्मैव ॥ १३४ ॥**

கிஞ்ச-'ப்ரத்யக்', 'அஸ்தூல:', 'அசக்ஷு:'—'அப்ராண:', 'அமனா', 'அகர்தா', 'சைதன்யம்', 'சின்மாத்ரம்', 'ஸத்'— இத்யாதி ப்ரபலச்ருதி விரோதாத் அஸ்ய புத்ராதி சூன்ய பர்யந்தஸ்ய ஜடஸ்ய சைதன்ய பாஸ்யத்வேன கடாதிவத் அநித்யத்வாத் அஹம் ப்ரஹ்மேதி வித்யதனுபவப்ராபல்யாச்ச தத்தத்-ச்ருதி-யுக்தி-அனுபவ ஆபாஸானாம் பாதிதத்வாதபி புத்ராதி சூன்யபர்யந்தம் அகிலம் அனாத்மா ஏவ ॥ 134 ॥

மற்றும் 'உள்ளே உறைபவன்', 'பருப்பொரு ளன்று', 'பிராணனன்று', 'மனமன்று', 'கர்த்தாவன்று',

'அது சைதன்யம்', 'தூயஞான உரு', 'அது என்றும் உள்ளது' முதலிய முக்கியமான உபநிஷத வாக்கியங் களால் மறுக்கப்படுவதாலும், மகன் முதற்கொண்டு சூன்யம் வரையிலுள்ள ஜடவஸ்துக்கள் ஆத்ம சைதன்னியத்தால் ஒளிர்வதால் (விளங்குவதால்) பானை போன்றவற்றைப் போல நிலையற்றவை யாதலாலும், 'நான் ப்ரஹ்மம்' என்னும் உண்மையை உணர்ந்தவர்களின் அனுபவமானது (நடைமுறை அனு பவங்களைவிட) முக்கியமாகக் கருதப்படுவதாலும் மற்றும் அந்தந்த சுருதி, யுக்தி, அனுபவம் என்னும் இவற்றைப் போலக் காணப்படுபவை கண்டிக்கப்படுவ தால் மகன் முதல் சூன்யம் வரையிலுள்ள அனைத்துமே அனாத்மாதான் (ஆத்மா அன்று).

மற்ற வாதிகள், தங்கள் தங்கள் கருத்தின்படி ஆத்மா எது என்பதை நிரூபித்துக் காட்டுவதற்குச் சுருதி, யுக்தி மற்றும் அனுபவம் என்னும் மூன்று வகையான பிரமாணங்களைக் கொடுத்துள்ளனர். இம்மூன்றையும் கண்டித்து இப்பொழுது சிந்தாந்தத்தை முன்வைக்க வேண்டியுள்ளது. சித்தாந்தத்திலும் இதே முறையை அனுசரித்து இருப்பினும், அவைகளைவிட முக்கிய மான, தகுதியுள்ள சுருதி, யுக்தி அனுபவங்களை உதாரணம் காட்டியுள்ளேன்.

'கச்சித்தீர: ப்ரத்யகாத்மானமைக்ஷத் ஆவ்ருத்த சக்ஷுரம்ருதத்வ மிச்சன்', 'ஒரு விவேகியானவன் மரணமற்ற தன்மையை விரும்பி, புலன்களை உள் முகமாகத் திருப்பி, உள்ளே உறையும் ஆத்மாவைக் கண்டனன்' (க. உ. 4.1) என்னும் சுருதியானது மகன்,

தன்னிடமிருந்து வேறுபட்டு புறத்திலிருப்பதால் ஆத்மா அல்ல என்று கூறுகிறது. 'அஸ்தூல: அனணு:', 'அது ஸ்தூலமும் இல்லை. ஸூக்ஷ்மமும் இல்லை' (பிரு. உ. 3.8.8) என்னும் சுருதி வாக்கியமானது ஸ்தூல சரீரம் ஆத்மா என்பதை நிராகரிக்கிறது.

'அப்ராணோ ஹ்யமனா சுப்ரோ', 'பிராணன் இல்லாதவர், மனம் இல்லாதவர், தூயவர்' (முண். உ. 2.1.2) என்னும் சுருதி வாக்கியமானது பிராணன், மனம் போன்றவை ஆத்மா அல்ல என்று விவரிக்கின்றது.

'அசக்ஷு: ச்ரோத்ரம் ததபாணிபாதம்' (முண். உ. 1.1.6). 'அவருக்குக் கண்களோ, காதுகளோ, கைகளோ, கால்களோ கிடையாது' என்னும் சுருதி வாக்கியமானது புலன்கள் ஆத்மா அல்ல என்று விவரிக்கிறது.

'அனந்தச்சாத்மா விச்வரூபோ ஹ்யகர்த்தா' (சுவே. உ. 1.9) என்னும் இந்த சுருதி வாக்கியமானது ஆத்மா புத்தியல்ல என்று முழங்குகிறது (அதாவது செய்பவனாகிய விஞ்ஞானமயன் அல்ல).

'ந சாஸ்தி வேத்தா மம சித்ஸதாऽஹம்' (கை. உ. 2.1) என்னும் இந்த சுருதி வாக்கியமானது அஞ்ஞானம் தான் ஆத்மா என்னும் கருத்தைக் கண்டிக்கிறது.

'சின்மாத்ரோऽஹம் ஸதாசிவ:' (கை. உ. 1.18) என்னும் சுருதி வாக்கியமானது 'நான் கேவல அறிவு வடிவினன், என்றும் மங்கள வடிவினன்' என்று ஆத்மா வானது ஜடம் சைதன்யங்களின் கலவை என்பதை மறுக்கிறது.

'தத்ஸத்யம் ஸ ஆத்மா', 'அது சத்தியமானது. அவனே ஆத்மா' (சாந். உ. 6.8.7) 'ஸதேவ ஸௌம்யேத மக்ர ஆஸீத்', 'அன்பிற்கு உரியவனே இந்த உலகமானது படைப்பிற்கு முன்பு ஸத் வஸ்துவாகவே இருந்தது' (சாந். உ. 9.2.1) போன்ற சுருதி வாக்கியங்கள் ஆத்மாவானது சூனியம் அன்று என்று விவரிக்கின்றன.

இந்த விஷயத்தில் பிரதிவாதிகளால் உதாரணங்களாகக் காட்டப்பட்ட, சந்தர்ப்பத்திற்கு ஏற்றதற்ற சுருதி வாக்கியங்களை நிராகரித்து, அவற்றைக் காட்டிலும் முக்கியமான மற்ற சுருதி வாக்கியங்களைக் கொடுத்தாகிவிட்டது. இப்பொழுது யுக்தியின்மூலம் அவர்களுடைய வாதத்தை நிராகரிக்க இயலும் என்று காட்டப்படுகிறது.

மகன் போன்ற வஸ்துக்களை நம் அறிவு உணர வேண்டுமெனின், நம்மிடமுள்ள சைதன்னியத்தால் உணர்த்தப்பட்டால் மட்டுமே நாம் உணர இயலும். இதுவும் கூட பானை போன்ற ஜட வஸ்துக்களைப் போன்றதாகும். தானே விளங்கும் சக்தியற்ற, சைதன்னியத்தால் மட்டுமே வெளிப்படுத்தப்படும் இந்த ஜட வஸ்துக்கள் அழியத்தக்கவை, நிலையற்றவை என்பது அனைவரும் அறிந்ததாகும். எனவே மகன், சரீரம், புலன்கள் போன்றவையும் அழியத்தக்கவை, நிலையற்றவை ஆகும். எனவேதான் ஆத்மாவாக ஆகவியலாது.

இன்னும் அனுபவம்–பிருஹதாரண்யக உபநிஷதத்தில் (1.4.7) பிராணன் போன்றவற்றில் ஆத்மபாவத்தை நிலைநிறுத்தி உபாசிப்பது அஞ்ஞானம் என்றும்,

அனைத்தும் ஆத்மாவிலேயே ஒடுங்குவதால் ஆத்மாவையே உபாசிக்க வேண்டும் என்றும், ஆத்மாவையே அறிய வேண்டும் என்றும், ஆத்மாவை விட வேறாக உள்ள அறியத்தகுந்த வஸ்து வேறு எதுவும் இல்லை என்றும், அதனை அறிந்தவனே உண்மையான அறிஞன் என்றும் கூறப்பட்டுள்ளது. இத்தகைய ஆத்மாவை அல்லது பிரம்மனை அறிந்தவன் பிரம்மமாகவே ஆகிறான். இதைவிடக் கீழ் நிலையிலுள்ள வஸ்துவை அறிந்தவனின் அனுபவத்தைவிட, பிரம்மனை 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்று உணர்ந்தவனின் அனுபவமானது மிகவும் உயர்ந்ததாகும்.

இந்த விதத்தில் சுருதி (scriptural evidence), யுக்தி (reasoning) மற்றும் அனுபவம் (intuition) என்னும் இவற்றால் மற்ற வாதிகளின் கருத்துக்கள் நிராகரிக்கப் பட்டு, வேதாந்தம் ஏற்கத்தக்க சித்தாந்தம் என்று உறுதிபடுத்தப்பட்டுள்ளது.

**अतस्तत्तद्भासकं नित्यशुद्धबुद्धमुक्तसत्यस्वभावं प्रत्यक्चैतन्यमेवात्मवस्त्विति वेदान्तविद्वदनुभवः ॥ १३५ ॥**

அத: தத்தத்-பாஸகம் நித்ய-சுத்த-புத்த-முக்த-ஸத்ய-ஸ்வபாவம் ப்ரத்யக் சைதன்யமேவ ஆத்மவஸ்து இதி வேதாந்த வித்வத் அனுபவ: ॥ 135 ॥

எனவே அவற்றை [1] விளங்க வைக்கும் [2] நித்திய, [3] சுத்த, [4] புத்த, [5] முக்த, [6] ஸத்ய [7] இயல்புள்ள, உள்ளே உறையும் [8] சைதன்னியமே ஆத்மவஸ்து என்பது வேதாந்தத்தை அறிந்தவர்களின் [9] அனுபவமாகும்.

1. மகன், உடல், புலன், மனம், புத்தி, அஞ்ஞானம் என்னும் இவற்றை.

2. ஞானத்திற்குரிய விஷயமாகச் செய்யும்.

3. என்றும் உள்ள, நிலைபெற்ற அல்லது 'நித்ய' என்னும் சொல்லை, சுத்த, புத்த போன்ற சொற்களுக்கு அடைமொழியாகக் கூடப் பயன்படுத்தலாம். நித்திய சுத்த, நித்திய புத்த போன்று பயன்படுத்தலாம்.

4. ஸம்ஸார தர்மங்களிலிருந்து விடுபட்ட.

5. தானே ஞானஸ்வரூபனாக இருப்பான். ஒளி என்றால் விளக்கின் ஒளியைப் போன்றது அல்ல என்பதைக் காட்டுவதற்காக இச்சொல்லானது பயன்படுத்தப்பட்டுள்ளது.

6. எப்பொழுதும் முக்தனாக உள்ள—முதலில் பிணைப்பு இருந்தது. அதன் பிறகு முக்தன் ஆனான் என்பது பொருள் அல்ல.

7. சூனியம் அல்ல என்பது பொருள்.

8. உடல் போன்ற அஞ்ஞானம் நிறைந்த வஸ்துக்களைவிட உட்புறமாக உள்ள.

9. வேதாந்தம்தான் சரியான பிரமாணமாகும். அதை அறிந்தவர்தான் உண்மையான அறிஞர் ஆவார், ஞானி யாவார் என்று அறிய வேண்டும். மற்ற சாத்திரங்களும் ஞானிகளும் சரியல்ல என்பது இங்கு தொனிக்கிறது.

**एवमध्यारोपः ॥ १३६ ॥**

ஏவம் அத்யாரோப: ॥ 135 ॥

இந்த விதத்தில் அத்யாரோபமானது நிறைவுற்றது.

*122-ஆம் ஸூத்திரத்திலிருந்து தொடங்கிய அத்யாரோபம் குறித்த விஷயமானது இங்கு நிறைவுறுகிறது.*

## அபவாதம்

**अपवादो नाम रज्जुविवर्तस्य सर्पस्य रज्जुमात्रत्व-वद्वस्तुविवर्तस्यावस्तुनोऽज्ञानादेः प्रपञ्चस्य वस्तुमात्रत्वम् ॥**

அபவாதோ நாம ரஜ்ஜுவிவர்தஸ்ய ஸர்பஸ்ய ரஜ்ஜுமாத்ரத்வவத் வஸ்து விவர்தஸ்ய அவஸ்துன: அஞ்ஞானாதே: ப்ரபஞ்சஸ்ய வஸ்து மாத்ரத்வம் ॥ 137 ॥

*கயிற்றின் உருத்திரிபான (விவர்த)[1] பாம்பானது வெறும் கயிறாகத்தான் உள்ளது. அதைப் போல வஸ்துவின்[2] உருத்திரிபான, வஸ்து இல்லாத[3] அஞ்ஞானம் போன்ற உலகமெல்லாம்[4] அந்த வஸ்துவைத் தவிர வேறு எதுவும் இல்லை என்பது அபவாதம் ஆகும்.*

*(ஒரு பாம்பு என்று தவறுதலாக உணரப்பட்ட கயிறு, எப்படி அறியப்படுகிறதோ, அதைப் போல அறியாமையிலிருந்து ஆரம்பித்து, வஸ்துவின்மீது (உண்மையின் மீது) ஏற்றப்பட்ட உண்மையற்ற பொருட்களால் ஆன உலகமானது இறுதியில் பிரம்மனைத் தவிர வேறு இல்லை என்று உணரப்படுகிறது. இது அபவாதம் ஆகும்).*

*1. பரிணாமம் மற்றும் விவர்த என்னும் பரிபாஷைச் சொற்கள் அடுத்த ஸூத்திரத்தில் விவரிக்கப்பட்டுள்ளன.*

*2. பரமார்த்த-உண்மையான வஸ்துவின்.*

*3. தற்காலிகமாகத் தோன்றும், உண்மையான வஸ்து இல்லாத.*

4. அஞ்ஞானத்திலிருந்து ஆரம்பித்துத் தோன்றியுள்ள முழு படைப்பு.

तदुक्तम्—
'सतत्त्वतोऽन्यथाप्रथा विकार इत्युदीरितः ।
अतत्त्वतोऽन्यथाप्रथा विवर्त इत्युदीरितः ॥' इति ॥ १३८ ॥

தது க்தம்—
ஸதத்வ தோऽன்ய தாப்ரதா விகார இத்யுதீரித: ।
அதத்வ தோऽன்ய தாப்ரதா விவர்த இத்யுதீரித இதி ॥138 ॥

அது இவ்விதம் கூறப்பட்டுள்ளது: ஒரு பொருள் உண்மையாக வேறு ஒரு முறையில் தோற்றமளிப்பது 'விகாரம்' எனப்படும். அந்தப் பொருள், உண்மை யில்லாமல் வேறு ஒரு முறையில் தோற்றமளிப்பது 'விவர்த' என்று கூறப்படுகிறது.

இங்கு உதாரணமாகக் காட்டப்பட்டுள்ள சுலோகம் எந்த நூலிலிருந்து எடுத்தாளப்பட்டுள்ளது என்பது தெரியவில்லை. 1.2.21 என்ற எண்ணுள்ள வேதாந்த ஸூத்திரத்திற்கு எழுதப்பட்டுள்ள 'பரிமளா' என்னும் விளக்கவுரையில் இதைப் போன்றே ஒரு வாக்கியம் உள்ளது.

'ததத்வ தோऽன்யதாபாவ: பரிணாம: அதத்வதோ அன்யதாபாவ விவர்த ॥

ஒரு வஸ்து மற்றொரு வஸ்துவாக மாறுவது என்பது இரு வகைகளில் ஆகக் கூடும். பால் தயிராக மாறுவது கயிறு பாம்பாக மாறுவது என்பனவாகும். பால் தயிராக ஆகும் பொழுது, தயிர் பாலிலிருந்து

தோன்றியிருந்தாலும் பாலைப் போன்றே உண்மையாக இருந்தாலும், பாலின் முழுமையான பரிணாமம் தயிரில் இருந்தாலும் அந்த இரண்டிற்கும் வேறுபாடு உள்ளது. இத்தகைய மாற்றத்தை 'விகாரம்' அல்லது 'பரிணாமம்' என்று கூறுகின்றனர். மங்கலான இருளில் கயிறு பாம்பாகத் தென்படும் பொழுது, கயிறு உண்மை யில் பாம்பின் உருவத்தில் விளைவைப் பெற்றிருப்ப தில்லை. இது வெறும் தோற்றம் மட்டுமே இத்தகைய மாற்றத்தை 'விவர்த' என்று அழைக்கின்றனர்.

இவ்வுலகம் எவ்விதம் தோன்றியது என்னும் கேள்விக்கு பல வகையான தத்துவப் பிரிவைச் சேர்ந்த வர்கள் பலவகைகளில் பதிலளித்துள்ளனர். நூலி லிருந்து துணி உரு ஆவதைப்போல பஞ்சபூதங்களின் நுண்மையான அணுக்களால் இவ்வுலகம் தோன்றி யுள்ளது என்பது நியாய வைசீஷிக தத்துவப் பிரிவைச் சேர்ந்தவர்களின் கருத்து ஆகும். இதை 'ஆரம்பவாதம்' என்று கூறுகின்றனர். பாலிலிருந்து தயிர் ஆவதைப் போல மண்ணிலிருந்து குடமும் தங்கத்திலிருந்து அணி கலன்களும் ஆவதைப் போல பிரம்மனிடமிருந்து உலகம் தோன்றியுள்ளது என்பது பூர்வமீமாம்ஸகர் களின் கருத்து ஆகும். விசிஷ்டாத்வைத வேதாந்திகள் இதை 'பரிணாம வாதம்' என்று கூறுகின்றனர். அத் வைத வேதாந்திகளின் கருத்துப்படி பிரம்மன் உலகத் தின் வடிவத்தால் உண்மையாகவே மாறுபடுவதில்லை. பாம்பு, கயிற்றில் அஞ்ஞானத்தால் தோன்றுவதைப் போல, உலகமானது பிரம்மனில் அஞ்ஞானத் தால் தோன்றுகிறது. இதை 'விவர்தவாதம்' என்று

கூறுகின்றனர். கயிற்றைக் குறித்த அஞ்ஞானம் அகலும் பொழுது, தோற்றம் அளித்த பாம்பும் இல்லாமல் ஆகி கயிறே மீண்டும் காணப்படுகிறது. அதைப் போன்றே பிரம்மனைக் குறித்து உள்ள அஞ்ஞானம் அகலும் பொழுது, உலகமும் அகன்று, பிரம்மம் மட்டுமே தென் படுகிறது. இதுதான் 'அபவாதம்' ஆகும். அபவாதம் என்றால் கவனிக்காமல் இருப்பது ஆகும் (அலட்சியம் செய்தல்). உலகத்தைக் கவனிக்காமல் இருந்தால் பிரம்மன் தானாகவே தென்படும்.

**तथाहि एतद्भोगायतनं चतुर्विधसकलस्थूलशरीरजातं भोग्यरूपान्नपानादिकमेतदायतन-भूतभूरादिचतुर्दशभुव-नान्येतदायतनभूतं ब्रह्माण्डं चैतत्सर्वमेतेषां कारणरूपं पञ्चीकृतभूतमात्रं भवति ॥ १३९ ॥**

ததாஹி-விதத் போகாயதனம் சதுர்வித-ஸகல-ஸ்தூல-சரீரஜாதம் போக்யரூப-அன்னபானாதிகம் ஏததாயதனபூத-பூராதி சதுர்தசபுவனானி ஏததாயதனபூதம் ப்ரஹ்மாண்டம் ச ஏதத் ஸர்வம் ஏதேஷாம் காரணரூபம் பஞ்சீக்ருத பூதமாத்ரம் பவதி ॥ 139 ॥

விளக்கம்-பொருட்களை அனுபவிப்பதற்கான இடங்களாக உள்ள நான்கு ஸ்தூல சரீர வகைகளும்,[1] உணவு, குடித்தல் போன்ற அனுபவிப்பதற்குத் தக்க பொருட்கள் பலவும், இவற்றைத் தன்னிடத்தில் கொண்டுள்ள பூலோகம்[2] போன்ற பதினான்கு உலகங் களும், இவற்றைத் தன்னிடத்தில் கொண்டுள்ள

பிரம்மாண்டம் என்னும் இந்த அனைத்தும் ஐந்து வகையாகக் கலவை செய்யப்பட்ட காரண நிலையிலுள்ள ஐந்து மூலப் பொருட்களாகவே[3] ஆகின்றன.

1. ஸூத்திரங்கள் 106, 109-ஐப் பார்க்கவும்.
2. ஸூத்திரம் 104-ஐப் பார்க்கவும்.
3. ஸூத்திரம் 99 மற்றும் அடிக்குறிப்பைப் பார்க்கவும்.

**एतानि शब्दादिविषयसहितानि पञ्चीकृतानि भूतानि सूक्ष्मशरीरजातं चैतत्सर्वमेतेषां कारणरूपापञ्चीकृतभूतमात्रं भवति ॥ १४० ॥**

ஏதானி சப்தாதி விஷயஸஹிதானி பஞ்சீக்ருதானி பூதானி ஸூக்ஷ்ம சரீர ஜாதம் ச ஏதத்ஸர்வம் ஏதேஷாம் காரணரூப-அபஞ்சீக்ருதபூத மாத்ரம் பவதி ॥ 140 ॥

ஐந்து வகையாகக் கலவை செய்யப்பட்டுள்ள இந்த ஐந்து மூலப்பொருட்களும், ஒலி போன்றனவும் ஸூக்ஷ்ம சரீரங்கள் என்னும் இவ்வனைத்தும், ஐந்து வகையாகக் கலவை செய்யப்படாமல் உள்ள காரண நிலையிலிருக்கும் மூலப் பொருட்களாகவே ஆகின்றன. 103-ஆம் ஸூத்திரத்தைப் பார்க்கவும்.

**एतानि सत्त्वादिगुणसहितान्यपञ्चीकृतान्युत्पत्तिव्युत्क्रमेणैतत्कारणभूताज्ञानोपहित-चैतन्यमात्रं भवति ॥ १४१ ॥**

ஏதானி ஸத்வாதி-குணஸஹிதானி அபஞ்சீக்ருதானி உத்பத்தி வ்யுத் க்ரமேண ஏதத்காரண பூத அஞ்ஞானோபஹித-சைதன்ய-மாத்ரம் பவதி ॥ 141 ॥

ஸத்துவம் போன்ற குணங்களுடன்,[1] கலவை செய்யப்படாமலுள்ள ஐந்து மூலப் பொருட்களும் படைப்பு முறைக்கு எதிரான முறையாக,[2] இவைகளுக்குக் காரணமாக அஞ்ஞானத்தை உபாதியாகப் பெற்றுள்ள (அஞ்ஞானத்துடன் கூடிய) சைதன்னியம் என்னும் காரணத்தில் ஒடுங்குகின்றன.

1. ஸத்துவ குணம், ரஜோ குணம், தமோ குணம். 34-ஆம் ஸூத்திரத்தைப் பார்க்கவும்.

2. ஆகாயத்திலிருந்து வாயு, வாயுவிலிருந்து அக்னி, அக்னியிலிருந்து நீர், நீரிலிருந்து பூமி, இது படைப்பு முறையாகும். ஒடுங்கும் முறையானது இதற்கு எதிரானதாக இருக்கும். பூமி நீரிலும், நீர் அக்னியிலும், அக்னி வாயுவிலும், வாயு ஆகாயத்திலும், ஆகாயம் அஞ்ஞானத்துடன் இணைந்துள்ள ஆத்ம சைதன்னியத்திலும் ஒடுங்குகின்றது. இவ்விதத்தில் எஞ்சியிருப்பது அஞ்ஞானத்தை உபாதியாகப் பெற்றுள்ள (அஞ்ஞானத்துடன் கூடியுள்ள) ஆத்ம சைதன்னியம் ஒன்றே ஆகும்.

**एतदज्ञानमज्ञानोपहितं चैतन्यं चेश्वरादिकमेतदाधार-भूतानुपहितचैतन्यरूपं तुरीयं ब्रह्ममात्रं भवति ॥ १४२ ॥**

ஏதத் அஞ்ஞானம் அஞ்ஞான-உபஸஹித-சைதன்யம் ச ஈச்வராதி கம் ஏததாதாரபூத-அனுபஹித சைதன்யரூபம் துரீயம் ப்ரஹ்மமாத்ரம் பவதி ॥ 142 ॥

இந்த அஞ்ஞானமும் மற்றும் இதை உபாதியாகப் பெற்றுள்ள (அஞ்ஞானத்துடன் கூடியுள்ள) ஈசுவரன் போன்ற[1] சைதன்னியமும், அஞ்ஞானக் கலப்பு இல்லாததும், எல்லாவற்றிற்கும் ஆதாரமாகவும்

உள்ள சைதன்னியமான துரீய பிரம்மமாகவே[2] ஆகின்றனர்.

1. 38-ஆம் ஸூத்திரத்தைப் பார்க்கவும்.

2. துரீயம் என்றால் நான்காவது ஆகும். 49-ஆம் ஸூத்திரத்தின் அடிக்குறிப்பைப் பார்க்கவும்.

அஞ்ஞானத்தின் பயனாக பாம்பு எப்படிக் கயிற்றிலிருந்து 'தோற்றம் கொண்டதோ', அப்படியே, உபாதியற்று விளங்கும் பிரம்மத்திடமிருந்து இந்த உலகம் 'தோற்றம் கொண்டுள்ளது' என்பதை 'அத்யாரோப'த்தில் கூறியாகிவிட்டது. இப்பொழுது 'அபவாத'த்தில், அஞ்ஞானத்தால் ஏற்பட்டுள்ள உலகத்தைக் 'கவனிக்காமல்' இருப்பதால், எப்படி மூலவஸ்துவான பிரம்மம் எஞ்சியுள்ளது என்பது காட்டப்பட்டுள்ளது. இந்த இரண்டினாலும் நமக்குத் தெரியவருவது:

'ப்ரஹ்ம ஸத்யம் ஜகன்மித்யா ஜீவோ ப்ரஹ்மைவனாபர: ।' என்பதுதான் ஆகும்.

## 'தத்' மற்றும் 'த்வம்' என்னும் சொற்களின் பொருளை ஆராய்தல்

**आभ्यामध्यारोपापवादाभ्यां तत्त्वम्पदार्थशोधनमपि सिद्धं भवति ॥ १४३ ॥**

ஆப்யாம் அத்யாரோப அபவாதாப்யாம் தத் த்வம் பதார்த்த சோதன மபிசித்தம் பவதி ॥ 143 ॥

அத்யாரோபம், அபவாதம் என்னும் இந்த முறையால் 'தத்' மற்றும் 'த்வம்' என்னும் சொற்களின் பொருளானது நன்கு வரையறுக்கப்பட்டதாகிறது.

சாந்தோக்ய உபநிஷதத்தில் 6.8.7-லிருந்து 6.17.3 வரையிலும் ஒன்பது முறைகள் 'தத் த்வம் அஸி', 'அதாக நீ இருக்கிறாய்' என்னும் வாக்கியம் வந்துள்ளது. இது நான்கு மஹாவாக்கியங்களில் ஒன்று ஆகும். பொது வாக அத்வைத நூல்கள் அனைத்திலுமே இந்த வாக்கியத் தின் பொருள் என்ன என்பது விவாதிக்கப்பட்டிருக்கும்.

**तथाहिअज्ञानादिसमष्टिरेतदुपहितं सर्वज्ञत्वादिविशिष्टं चैतन्यमेतदनुपहितं चैतत्त्रयं तप्तायःपिण्डवदेकत्वेनावभासमानं तत्पदवाच्यार्थो भवति ॥ १४४ ॥**

ததாஹி அஞ்ஞானாதிஸமஷ்டி: ஏததுபஹிதம் ஸர்வ-ஜ்ஞத்வா திவிசிஷ்டம் சைதன்யம் ஏததனுபஹிதம் சைதத்-ரயம் தப்த அய பிண்டவத் ஏகத்வேன அவபாஸமானம் தத் பத வாச்யார்த்தோ பவதி ॥ 144 ॥

உதாரணம்:—அஞ்ஞானம் போன்றவற்றின் தொகுதியும்,[1] இந்த அஞ்ஞானத்துடன் கூடியுள்ளதும் (உபாதியாகப் பெற்று) முழுவதுமாக உணர்வது போன்ற இயல்புள்ளதுமான சைதன்னியமும்,[2] மற்றும் அஞ்ஞானத்துடன் ஒன்று சேராமல் உள்ள சைதன்னிய மும் என்னும் இந்த மூன்றும், பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்புக் குண்டைப்போல ஒன்று போலத் தோன்றும் பொழுது 'தத்' என்னும் சொல்லின் ('அது') வெளிப் படையான பொருள் ஆகும்.

1. ஈசுவரனின் ஸ்தூல, ஸூக்ஷ்ம மற்றும் காரண சரீரங்கள்.

2. 50-ஆம் ஸூத்திரத்தின் அடிக்குறிப்பைக் காணவும்.

**एतदुपाध्युपहिताधारभूतमनुपहितं चैतन्यं तत्पदलक्ष्यार्थो भवति ॥ १४५ ॥**

ஏதத்-உபாதி-உபஹித-ஆதாரபூதம் அனுபஹிதம் சைதன்யம் தத்பதலக்ஷ்யார்த்தோ பவதி ॥ 145 ॥

*அஞ்ஞானம் போன்ற உபாதிகள் மற்றும் அவற்றுடன் கூடியுள்ள ஈசுவரனுக்கும் (சைதன்னியத்திற்கும்) ஆதாரமாக உள்ள, (அந்த உபாதியுடன் ஒன்றுகூடாத) சைதன்னியமே[1] 'தத்' என்னும் சொல்லின் உட்பொருளாக உள்ளது.*

*1. பரபிரம்மன்.*

**अज्ञानादिव्यष्टिरेतदुपहिताल्पज्ञत्वादिविशिष्टचैतन्यमेत-दनुपहितं चैतन्त्रयं तप्तायःपिण्डवदेकत्वेनावभासमानं त्वम्पदवाच्यार्थो भवति ॥ १४६ ॥**

அஞ்ஞானாதிவ்யஷ்டி: ஏததுபஹித-அலஜ்ஞத்வா-திவிசிஷ்ட சைதன்யம் ஏததனுபஹிதம் ச ஏதத்ரயம் தப்த அய: பிண்டவத் ஏகத்வேன அவபாஸமானம் 'த்வம்' பத வாச்யார்த்தோ பவதி ॥ 146 ॥

*வ்யஷ்டி[1&]அஞ்ஞானம் (தனித்தனி ஜீவர்களிடம் இருக்கும்) மற்றும் இத்துடன் சேர்ந்துள்ள சிற்றறிவை[8] உடைய சைதன்யம் (உபாதியாகப் பெற்றுள்ள) இவற்றுடன் சேராத சுத்த சைதன்னியம்[8] என்னும் இவை மூன்றும் பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்பு குண்டைப் போல ஒன்றாகத் தோன்றும் பொழுது 'த்வம்' (நீ) என்னும் சொல்லின் நேரடியான கருத்தாக உள்ளது.*

1. ஒவ்வொரு மனிதனுக்கும் வேறு வேறாக உள்ள ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்கள்.

2. ப்ராஜ்ஞன், தைஜஸன், விச்வம் என்னும் ஜீவ சைதன்னியம்.

3. சுத்த ஆத்மா.

**एतदुपाध्युपहिताधारभूतमनुपहितं प्रत्यगानन्दं तुरीयं चैतन्यं त्वम्पदलक्ष्यार्थो भवति ॥ १४७ ॥**

ஏதத்-உபாதி-உபஹித-ஆதாரபூதம்-அனுபஹிதம்-ப்ரத்யகானந்தம் துரீயம் சைதன்யம் 'த்வம்' பத லக்ஷ்யார்த்தோ பவதி ॥ 147 ॥

உபாதிகளுடன் கூடியுள்ள அனைத்திற்கும் ஆதாரமாக உள்ள, இவ்வுபாதிகளுடன் சேராமலுள்ளதும், உள்ளே உறைகின்ற ஆனந்தமானதும், எல்லாவற்றையும் கடந்த துரீயமுமாக உள்ள சைதன்னியமே 'த்வம்' நீ என்ற சொல்லின் உட்பொருளாக உள்ளது.

### 'தத்வமஸி' மஹாவாக்கியத்தின் பொருள்

**अथ महावाक्यार्थो वर्ण्यते । इदं तत्त्वमसिवाक्यं सम्बन्धत्रयेणाखण्डार्थबोधकं भवति ॥ १४८ ॥**

அத மஹாவாக்யார்த்தோ வர்ண்யதே । இதம் தத்வமஸி வாக்யம் ஸம்பந்த த்ரயேண அகண்டார்த்த போதகம் பவதி ॥

இப்பொழுது மஹாவாக்கியத்தின் பொருளானது விவரிக்கப்படுகிறது. இந்த 'தத்வமஸி' (அதாக நீ இருக்கிறாய்) என்னும் மஹாவாக்கியமானது மூன்று

வகைப்பட்ட தொடர்பின் மூலம்,[1] முழுமையான பொருளைக்[2] குறிப்பிடுகிறது (வேறுபாடு இல்லாத).

1. அடுத்த ஸூத்திரத்தைப் பார்க்கவும்.
2. பகுக்கவியலாத பிரம்மவஸ்து.

பல்வேறு சொற்கள் ஒன்றுடனொன்று தொடர்புற்று ஒரே பொருளைத் தருவது போல இணைக்கப் பட்டால் அது வாக்கியம் எனப்படுகிறது. சொற்களின் தொடர்பை 'ஸம்ஸர்கம்' ஒன்றாக இருப்பது என்று அழைக்கின்றனர். வாக்கியமானது மொத்தமாக ஒரே பொருளைக் குறிப்பிடுவதாக இருந்தாலும், சொற்கள் தங்களுடைய தனிப்பட்ட பொருளையும் குறிப்பிடுவதாக இருக்கலாம். இலக்கணமானது இதனை 'விபின்ன விபக்தி ப்ரயோக'ங்களின் மூலம் குறிப்பிடுகிறது (வேறுவேறு வேற்றுமைகளைப் பயன்படுத்துதல்). பல்வேறுவகையான வாக்கியத்தின் பொருளை 'ஸம்ஸ்ருஷ்டார்த்த', 'பேத ஸம்ஸர்க' என்று அழைக்கின்றனர். உதாரணம்—'தண்டேன காம் நய', 'கோலால் (அடித்து) பசுவை அழைத்துக் கொண்டு செல்வாய்.' இந்த வாக்கியத்தில் மூன்று சொற்களும் ஒரே பொருளைக் குறிப்பிட்டாலும், கூடவே கோல், பசு, அடித்தல் மற்றும் அழைத்துச் செல்லும் வினையின் பொருட்களும் வெளிப்பட்டுக் கொண்டே உள்ளன. எனவேதான், 'தண்டேன' என்பதில் மூன்றாம் வேற்றுமையும், 'காம்' என்பதில் இரண்டாம் வேற்றுமையும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இப்பொழுது வேறு ஒரு வாக்கியத்தைக் காண்போம். 'ஏதத் நீலம் உத்பலம்-இது நீல நிறக்கமலம்.'

இங்கு நீலம் என்னும் சொல்லானது வெள்ளை, சிகப்பு போன்ற நிறங்களிலிருந்து வேறுபட்டுள்ள நீல நிறத்தையும், உத்பலம் என்னும் சொல்லானது, துணி, பானை போன்ற பொருட்களிலிருந்து வேறுபட்டுள்ள கமலம் என்னும் பொருளைக் குறிப்பிட்டாலும் இங்கு அந்த இரண்டும் சேர்ந்து நீலநிறக் கமலம் என்னும் ஒரே பொருளை குறிக்கின்றன. எனவே இந்த வாக்கியப் பொருளானது அஸம்ஸ்ருஷ்டார்த்தம், அகண்டார்த்தம் அல்லது அபேத ஸம்ஸர்கம் ஆகும். இதை இலக்கணமானது ஸமான விபக்தியைப் பயன்படுத்திக் காட்டியுள்ளது. 'தத் த்வம் அஸி' என்னும் வாக்கியமானது இந்த இரண்டாம் வகையைச் சேர்ந்தது ஆகும். மேலும் விவரங்கள் அடுத்த ஸூத்திரத்தில் கொடுக்கப்பட்டுள்ளது.

**सम्बन्धत्रयं नाम पदयोः सामानाधिकरण्यं पदार्थ-योर्विशेषणविशेष्यभावः प्रत्यगात्मलक्षणयोर्लक्ष्यलक्षण-भावश्चेति ॥ १४९ ॥**

ஸம்பந்தத்ரயம் நாமபதயோ ஸாமானாதிகரண்யம் பத அர்த்தயோ: விசேஷண விசேஷ்ய-பாவ-ப்ரத்யகாத்ம லக்ஷணயோ லக்ஷ்யலக்ஷண பாவச்சேதி ॥ 149 ॥

மூன்று விதமான தொடர்புகள் என்றால் இருசொற்களுக்கும் உள்ள ஸாமானாதி கரண்யம்,[1] சொல்-பொருள் என்னும் இவற்றினிடையிலுள்ள விசேஷண-விசேஷ்ய பாவம்[2] மற்றும் 'தத்வமஸி' வாக்கியத்தின் லக்ஷணார்த்தத்தின்[3] நடுவிலுள்ள லக்ஷ்ய-லக்ஷண பாவமாகும்.

1. ஒரே அடி மூலக்கூறைப் பெற்றிருத்தல் ஆகும். மேலே கூறப்பட்டுள்ள உதாரணத்தில் நீல நிறத்திற்கும் கமலம் என்னும் பொருளுக்கும் நீல கமலம் என்னும் ஒரே பொருள் மூலமாக இருப்பதால், நீலத் தன்மைக்கும் கமலத் தன்மைக்கும் சமமான அடி மூலக்கூறு உள்ளது.

2. குணத்தைப்பற்றிக் கூறும் சொல்லிற்கும் குணம் எந்தப் பொருளைக் குறிக்கிறதோ, அந்தப் பொருளைக் கூறும் சொல்லிற்கும் உள்ள தொடர்பு ஆகும்.

3. 50-ஆம் ஸூத்திரத்தின் அடிக் குறிப்பைப் பார்க்கவும்.

**तदुक्तम्—**

**'सामानाधिकरण्यं च विशेषणविशेष्यता ।**

**लक्ष्यलक्षणसम्बन्धः पदार्थप्रत्यगात्मनाम् ॥'**

**(नैष्क. सि. ३.३) इति ॥ १५० ॥**

ததுக்தம்—

ஸாமானாதிகரண்யம் ச விசேஷண விசேஷ்யதா ॥

லக்ஷ்ய லக்ஷணஸம்பந்த: பதார்த்த ப்ரத்யகாத்மனாம்

(நை. ஸி. 3.3) இதி ॥ 150 ॥

இவ்விதம்[1] கூறப்பட்டுள்ளது. ஒரே மூலக்கூறைப் பெற்றுள்ள இரண்டு சொற்களுக்கு[2] இடையிலுள்ள தொடர்பு (ஸாமானாதிகரண்யம்) விசேஷண-விசேஷ்ய பாவம் மற்றும் லக்ஷ்ய-லக்ஷண ஸம்பந்தமாகும்.

1. இது சுரேச்வராச்சாரியருடைய நைஷ்கர்ம்யஸித்தி (3.3)யிலிருந்து உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளது.

2. 'தத்' என்னும் சொல்லின் மற்றும் 'த்வம்' என்னும் சொல்லின் பொருள்.

**सामानाधिकरण्यसम्बन्धस्तावद्यथा सोऽयं देवदत्त इत्यस्मिन्वाक्ये तत्कालविशिष्ट-देवदत्तवाचकसशब्द-स्यैतत्कालविशिष्टदेवदत्तवाचकायंशब्दस्य चैकस्मिन्पिण्डे तात्पर्यसम्बन्धः । तथा च तत्त्वमसीति वाक्येऽपि परोक्षत्वादिविशिष्टचैतन्य-वाचकतत्पदस्यापरोक्षत्वादि-विशिष्टचैतन्यवाचकत्वम्पदस्य चैकस्मिंश्चैतन्ये तात्पर्य-सम्बन्धः ॥ १५१ ॥**

ஸாமானாதி கரண்ய ஸம்பந்த: தாவத் யதா:-'ஸோऽயம் தேவதத்த:' இத்யஸ்மின் வாக்யே தத்கால விசிஷ்ட தேவதத்த வாசக-ஸசப்தஸ்ய ஏதத்கால விசிஷ்ட-தேவதத்த வாசக-அயம்சப்தஸ்ய ச ஏகஸ்மின் பிண்டே தாத்பர்ய ஸம்பந்த: । ததா ச 'தத்வமஸி' இதி வாக்யே அபி பரோக்ஷத்வாதிவிசிஷ்ட சைதன்யவாசக-தத்பதஸ்ய அபரோக்ஷத்வாதிவிசிஷ்ட சைதன்ய வாசக-த்வம்-பதஸ்ய ச ஏகஸ்மின் சைதன்யே தாத்பர்ய ஸம்பந்த: ॥ 151 ॥

முதலாவதாக ஸாமானாதி கரண்யத்தின் தொடர்பு எப்படி இருக்குமெனின் 'இவன்தான் அந்த தேவதத்தன்' என்னும் வாக்கியத்தில், 'அந்த' என்னும் சொல்லானது கடந்த காலத்தில் (past) பார்த்த தேவதத்தனைக் குறிக்கிறது. 'இவன்தான்' என்னும் சொல்லானது நிகழ்காலத்தில் பார்க்கப்படும் (present) தேவதத்தனைக் குறிக்கிறது. இரண்டுமே தேவதத்தன் என்று

அழைக்கப்படும் ஒருவனைத்தான் குறிப்பிடுகின்றன. அதைப் போன்றே 'தத் த்வம் அஸி' என்னும் வாக்கியத்திலும், பரோக்ஷமான சைதன்னியத்தைப் பொருளாகப் பெற்றுள்ள 'அது' என்னும் சொல்லும், அபரோக்ஷமான சைதன்னியத்தைப் பொருளாக உடைய 'நீ' என்னும் சொல்லும் ப்ரஹ்ம சைதன்னியம் ஒன்றையே குறிப்பிடுகின்றன.

நேற்று கடைத் தெருவில் பார்த்த தேவதத்தன் இன்று நம் வீட்டின் முன்பு வந்து நிற்கும் பொழுது 'அவனே இந்த தேவதத்தன்' என்று அடையாளம் கண்டுகொள்கிறோம். இங்கு 'அவன்' என்னும் சொல்லானது வேறு ஒரு காலத்துடன் வேறு ஒரு இடத்துடன் தொடர்பு உடையது ஆகும். அப்படி இருந்தாலும் மனிதன் ஒருவனேதான். இதனைக் குறிப்பிடுவதற்காகவே ஸ: (அவன்) மற்றும் அயம் (இவன்) என்னும் இரு சொற்களையும் ஒரே வேற்றுமையில் (முதல் வேற்றுமை) பயன்படுத்தப்பட்டு உள்ளது. இதனால் அந்த இரண்டிற்கும் ஒரே போன்று அடிநிலைக் கூறு என்பது அறியப்படுகிறது.

உத்தாலக ஆருணியானவர், தன்னுடைய மகனான சுவேதகேதுவிற்கு பிரம்மஞானத்தை உபதேசம் செய்யும்பொழுது, அந்த பிரம்மனை 'ஸத்' வஸ்து என்று அழைத்து 'தத் த்வம் அஸி' என்று முழங்குகிறார் (சாந். உ. 6.8.7). இங்கு 'தத்' ('அது') என்னும் சொல்லானது நமக்கு நேரடியாக அறியவியலாத (பரோக்ஷமான) கேவல அனுமானம், சுருதி என்னும் இவற்றால் மட்டும் அறியப்படும், எல்லாவற்றையும் அறிந்துள்ள

தன்மை, எல்லாவற்றையும் கட்டுப்படுத்தும் தன்மை போன்ற இயல்புகளைப் பெற்றுள்ள ஈசுவரனைக் குறிக்கிறது. 'த்வம்' ('நீ') என்னும் சொல்லானது நேராக, அனுபவத்தால் உணரத்தக்க (அபரோக்ஷமான) ஆனால் அற்பமான ஆற்றல் போன்ற இயல்புகளை உடைய ஜீவனைக் குறிக்கிறது. இரண்டு சொற்களும் ஒரே போன்று வேற்றுமையைப் பெற்றிருப்பதால் ஒரே மனிதனிடத்தில் ஆதாரத்தைப் பெற்றிருக்க வேண்டும். இந்த இரண்டிலுமே உபாதிகளை விட்டுவிட்டு சைதன்ய அம்சத்தைக் கிரகித்துக் கொண்டால் மட்டுமே இது இயலத்தக்கது ஆகும்.

**विशेषणविशेष्यभावसम्बन्धस्तु यथा तत्रैव वाक्ये सशब्दार्थतत्कालविशिष्ट-देवदत्तस्यायंशब्दार्थैतत्काल-विशिष्टदेवदत्तस्य चान्योन्यभेदव्यावर्तकतया विशेष-णविशेष्यभावः । तथात्रापि वाक्ये तत्पदार्थपरोक्षत्वादि-विशिष्टचैतन्यस्य चान्योन्यभेदव्यावर्तक-तया विशेष-णविशेष्यभावः ॥ १५२ ॥**

விசேஷண-விசேஷ்ய-பாவ-ஸம்பந்தஸ்து யதா தத்ரைவ வாக்யே ஸசப்தார்த்த-தத்கால விசிஷ்ட-தேவதத்-தஸ்ய அயம் சப்தார்த்த-ஏதத்கால விசிஷ்ட தேவதத்தஸ்ய ச அன்யோன்ய பேதவ்யா வர்தகதயா விசேஷண-விசேஷ்ய பாவ: ததா அத்ராபி வாக்யே தத் பதார்த்த-பரோக்ஷத்வாதி விசிஷ்ட சைதன்யஸ்ய ச அன்யோன்ய பேத-வ்யாவர்தகதயா விசேஷண-விசேஷ்ய-பாவ ॥ 152 ॥

விசேஷண-விசேஷ்ய தொடர்பு என்பது எது எனின்-'இவன்தான் அந்த தேவத்தன்' என்னும் அதே வாக்கியத்தில் கடந்த காலத்துடன் தொடர்புடைய வேதத்ததன் 'அந்த' என்னும் சொல்லுடைய பொருளாகிறான். இப்பொழுது பார்க்கப்படும் தேவதத்தன் 'இவன்தான்' என்னும் சொல்லுடைய பொருளாகிறான். இந்த இரு சொற்களுமே ஒன்றுடனொன்று முரண்பட்டதாக ஒரே பொருளையே குறிப்பிடுவதால் விசேஷண-விசேஷ்ய பாவமானது ஏற்படுகிறது. அதைப்போலவே 'தத்வமஸி' என்னும் வாக்கியத்திலும், பரோக்ஷமான சைதயன்னியமானது 'அது' என்னும் சொல்லால் உணர்த்தப்படுகிறது. அபரோஷமான சைதன்னியமானது 'நீ' என்னும் சொல்லால் உணர்த்தப்படுகிறது. இவ்விரண்டும் ஒன்றோடொன்று முரண்பட்டு விளங்கினாலும் ஒரே சைதன்னியத்தைக் குறிப்பிடுவதால் விசேஷண-விசேஷ்ய பாவம் ஏற்படுகிறது.

**लक्ष्यलक्षणसम्बन्धस्तु यथा तत्रैव सशब्दायंशब्द-योस्तदर्थयोर्वा विरुद्धतत्कालैतत्कालविशिष्टत्वपरित्या-गेनाविरुद्धदेवदत्तेन सह लक्ष्यलक्षणभावः । तथात्रापि वाक्ये तत्त्वम्पदयोस्तदर्थयोर्वा विरुद्धपरोक्षत्वापरोक्षत्वादिविशिष्ट-त्वपरित्यागेनाविरुद्धचैतन्येन सह लक्ष्यलक्षणभावः ॥ १५३ ॥**

லக்ஷ்ய லக்ஷண-ஸம்பந்தஸ்து யதா தத்ரைவ ஸ-சப்த அயம்-சப்தயோ: ததர்த்தயோர்வா விருத்த-தத்கால ஏதத்கால-விசிஷ்டத்வ-பரித்யாகேன-அவிருத்த தேவதத்

தேன ஸஹ லக்ஷ்ய-லக்ஷண ஸம்பந்த: । ததா அத்ராபி வாக்யே தத்-த்வம் பதயோ: ததர்த்தயோர்வா விருத்த-பரோக்ஷத்வ-அபரோக்ஷத்வாதி-விசிஷ்டத்வ பரித்யாகேன அவிருத்த சைதன்யேன ஸஹ லக்ஷ்ய-லக்ஷண பாவ: ॥ 153 ॥

லக்ஷ்ய-லக்ஷண தொடர்பு (ஸம்பந்தம்) எது எனின், 'இவன்தான் அந்த தேவத்தன்' என்னும் அதே வாக்கியத்தில், 'இவன்' என்னும் சொல்லிலும், 'அந்த' என்ற சொல்லிலும் அல்லது இந்தச் சொற்களின் கருத்துக்களிலும் காணப்படுகிற ஒன்றுடனொன்று முரணாக விளங்குகின்ற கடந்த காலம், நிகழ்காலம் என்னும் இணைப்புக்களை விட்டுவிட்டால் இவ்விரு சொற்களும் ஒரே தேவதத்தனைக் குறிக்கும் முறை யால், லக்ஷ்ய-லக்ஷணத் தன்மை ஏற்படுகிறது. 'தத்வ மஸி' என்னும் இந்த வாக்கியத்திலும் 'அது' என்னும் சொல் மற்றும் 'நீ' என்னும் சொல்லில் அல்லது இச் சொற்களில் கருத்தில் தென்படுகின்ற பரோக்ஷம், அப ரோக்ஷம் என்னும் முரண்பட்ட இணைப்புக்களை நீக்கி னால், இவை ஒரே சைதன்னியத்தைக் குறிக்கும் முறை யில் லக்ஷ்ய-லக்ஷணத் தன்மையானது ஏற்படுகிறது.

சொற்களுக்கு வாச்யார்த்தம், லக்ஷ்யார்த்தம் மற்றும் வ்யங்க்யார்த்தம் என்று மூன்று வகையான பொருள்கள் உண்டு என்பது 50-ஆம் ஸூத்திரத்தின் அடிக்குறிப்பில் கூறப்பட்டுள்ளது. இங்கு லக்ஷ்யார்த் தத்தை இன்னும் சிறிதளவு விவரிக்க வேண்டியுள்ளது.

லக்ஷ்யார்த்தத்தைக் குறிப்பிடும் லட்சணமானது கேவல லக்ஷணம் மற்றும் லக்ஷித லக்ஷணம் என்று

இருவகைப்படும். 'கங்காயாம் கோஷ:—கங்கையில் கோவலர்களின் கிராமம் உள்ளது' என்பது நேரடியான பொருள் ஆகும். கங்கையின் பிரவாஹத்தில் கோவலர் களின் கிராமமானது இருக்க வியலாது. எனவே, அந்த பிரவாஹத்திற்கு நேரடியாகத் தொடர்பைப் பெற்றுள்ள கரையில் உள்ளது என்று பொருள் கொள்ள வேண்டும். இது கேவல லக்ஷணத்தால் கிடைக்கும் பொருளாகும். 'த்விரேபம்' என்னும் சொல்லிற்கு இரண்டு ரகரங்களை உடைய சொல் என்பது அதற்கே உரிய பொருளாகும். உதாரணம் ப்ரமரம், ராத்ரி, ரந்த்ர போன்றவையாகும். ஆனால் பொதுவாக வழக்கத்தில் அது வண்டையே (ப்ரமரம்) குறிக்கிறது. ப்ரமரம் என்னும் சொல்லானது தும்பியையும் த்விரேபம் என்னும் சொல்லானது ப்ரமரம் என்னும் சொல்லையும் குறிப்பிடுவதால், லக்ஷித லக்ஷணத்தால் த்விரேபம் என்றால் தும்பி என்று பொருளானது உணரப்படுகிறது. லக்ஷித லக்ஷணத்தில் லக்ஷ்யார்த்தத்தைக் குறிப்பிடும் லக்ஷணத்தை மற்றொரு லக்ஷணம் குறிப்பிடுகிறது.

மற்றொரு முறையில் மூன்று வித லக்ஷணங்கள் உள்ளன. ஜஹலக்ஷணம், அஜஹலக்ஷணம் மற்றும் ஜஹத ஜஹத்லக்ஷணம் ஆகும்.

வாச்யார்த்தத்தை முழுவதுமாக விட்டுவிட்டு லக்ஷ்யார்த்தத்தை மட்டுமே கிரகித்துக் கொள்ளும் பொழுது அது ஜஹலக்ஷணம் எனப்படுகிறது (ஜகத்-விட்டுவிடுதல்). மேலே கூறப்பட்டுள்ள 'கங்கையில் கோவலர்களின் கிராமம் உள்ளது' என்னும் வாக்கியத்தில் 'கங்கையில்' என்னும் வாச்யார்த்தத்தை முழுவதுமாக

விட்டுவிட்டு 'கங்கைக் கரையிலுள்ள' என்னும் பொருளானது கிரகிக்கப்பட்டுள்ளது.

'சோண: தாவிதி', 'சிகப்பு வண்ணம் ஓடிக் கொண்டிருக்கிறது' என்னும் வாக்கியத்தில், சிகப்பு வண்ணத்தால் ஓடவியலாதாகையால், சிகப்பு வண்ணத்தைப் பெற்றுள்ள குதிரையைப் போன்ற பிராணியானது ஓடிக் கொண்டிருக்கிறது என்று பொருள் கொள்ள வேண்டும். இங்கு மூல வாக்கியத்தில் உள்ள 'சிகப்பு' என்பதை விடாமல் (அஜஹத்) அதன் பொருளானது விவரிக்கப் பட்டுள்ளது. எனவே இந்த லக்ஷணமானது அஜஹ லக்ஷணம் என்று கூறப்பட்டுள்ளது.

'ஸோऽயம் தேவதத்த:', 'அவன்தான் இந்த தேவதத்தன்' என்னும் வாக்கியத்தில், காலமும், இடமும் வேறாக இருந்தாலும் ஒரே மனிதனாக இருப்பதால் 'அந்த' மற்றும் 'இந்த' என்பதுடன் தொடர்புடைய காலம் மற்றும் இடத்தை விட்டுவிட்டு (ஜஹத்), தேவதத்தன் என்னும் மனிதனுடைய அம்சத்தை விடாமல் (அஜஹத்) பொருள் கிரகிக்கப்பட்டுள்ளது. இது ஜஹத்-அஜஹத் லக்ஷணம் எனப்படும்.

'தத் த்வம் அஸி' என்னும் வாக்கியத்திற்கு இந்த லக்ஷணத்திற்குத் தகுந்தாற்போன்று விளக்கம் கூற வேண்டும்.

**इयमेव भागलक्षणेत्युच्यते ॥ १५४ ॥**

இயமேவ 'பாகலக்ஷணா', இதி உச்யதே ॥ 154 ॥

இதுவே 'பாகலக்ஷணம்' என்று கூறப்படுகிறது.

வாச்யார்த்தத்தில் ஒரு பகுதியை எடுத்துக் கொண்டு, மற்றொரு பகுதியை விட்டுவிடுவதால் இது 'பாகலக்ஷணம்' என்று கூறப்பட்டுள்ளது. இது 'பாகத் யாகலக்ஷணம்' என்றும் அழைக்கப்படுகிறது.

**अस्मिन्वाक्ये नीलमुत्पलमिति वाक्यवद्वाक्यार्थो न सङ्गच्छते ॥ १५५ ॥**

அஸ்மின், வாக்யே 'நீலம் உத்பலம்' இதி வாக்யவத் வாக்யார்த்தோ ந ஸங்கச்சதே ॥ 155 ॥

இந்த[1] வாக்கியத்தில் 'நீலக்கமலம்' என்னும் வாக்கியத்தைப் போல நேரடியான பொருள்[2] பொருந் தாமல் உள்ளது.

1. 'தத் த்வம் அஸி' என்னும் வாக்கியத்தில்.

2. 'நீலக்கமலம்' என்னும் வாக்கியத்தில் 'நீலம்' என்னும் அடைமொழியும் அந்த அடைமொழியால் சிறப்பிக்கப்படும் 'கமலம்' என்னும் சொல்லும், ஒரே பொருளைக் குறிப்பிட்டு, ஒரே பொருளைப் பெற்றுள்ளன. இங்கு அவ்விதம் ஆவது இல்லை என்பது பொருளாகும். இது அடுத்த ஸூத்திரத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

**तत्र तु नीलपदार्थनीलगुणस्योत्पलपदार्थोत्पलद्रव्यस्य च शौक्ल्यपटादिभेदव्या-वर्तकतयान्योन्यविशेषणविशेष्य-रूपसंसर्गस्यान्यतरविशिष्टस्यान्यतरस्य तदैक्यस्य वा वाक्यार्थत्वाङ्गीकारे प्रमाणान्तरविरोधाभावात्तद्वाक्यार्थः सङ्गच्छते ॥ १५६ ॥**

தத்ர து நீல பதார்த்த-நீல குணஸ்ய உத்பலபதார்த்த-உத்பலத்ரவ்யஸ்ய ச ஸௌக்ல்ய-படாதி பேதவ்யாவர்தகதயா அன்யோன்ய-விசேஷண-விசேஷ்ய ரூப ஸம்ஸர்கஸ்ய, அன்யதரவிசிஷ்டஸ்ய அன்யதரஸ்ய ததைக்யஸ்ய வா வாக்யார்த்தத்வ அங்கீகாரே ப்ரமாணாந்தர விரோதாபாவாத் தத்வ்யாக்யார்த்த: ஸங்கச்சதே ॥ 156 ॥

அங்கு[1] 'நீலம்' என்னும் சொல்லிற்கு நீல வண்ணம் என்பது பொருளாகிறது. தாமரை என்னும் சொல்லிற்கு தாமரை என்னும் மலரானது பொரு ளாகிறது. இவை வெண்மை முதலிய மற்ற வண்ணங் களிலிருந்தும், துணி போன்ற வேறு பொருள்களி லிருந்தும் பிரித்து உணரப்படுகின்றன.[2] இவை அடை மொழியாகவும் (விசேஷணம்), அந்த அடைமொழிக் குரிய பொருளையும் (விசேஷ்யம்) ஒருங்கிணைத் துள்ளன.[3] பொருளையும் பொருளின் குணத்தை யும் ஒருமைப்படுத்திக் கூறுவதே[4] (நீலத்தாமரை) என் னும் வாக்கியத்தின் கருத்து என்று ஏற்றுக்கொள்வதில் வேறு எந்தப் பிரமாணத்திற்கும் எதிரானது[5] இல்லை என்பதால் இந்த வாக்கியத்திலுள்ள நேரான கருத் தையே எடுத்துக் கொள்ளலாம்.

1. 'நீலம் உத்பலம்' (நீலக்கமலம்) என்னும் வாக்கியத்தில்.

2. 'நீலம்' என்னும் சொல்லானது, வெண்மை, சிகப்பு போன்ற நிறங்களிலிருந்து வேறுபட்டது என்பதையும் 'கமலம்' என்னும் சொல்லானது துணி, சுவர் போன்ற பொருட் களிலிருந்து வேறுபட்டது என்பதையும் உணர்த்துகிறது.

*3. 'நீலக்கமலம்' என்னும் வாக்கியத்தில் நீலம் என்பது அடைமொழியாகும். கமலம் என்பது 'விசேஷ்யம்' ஆகும். அந்த அடைமொழிக்குரிய பொருளாக உள்ளது. எனவே அந்த இரண்டிற்கும் இடையிலுள்ள தொடர்பானது விசேஷண-விசேஷ்ய பாவம் ஆகும்.*

*4. இதே வாக்கியமானது நீலம் என்னும் வண்ணத்துடனும் மற்றும் கமலத்வம் என்னும் குணத்துடனும் சேர்ந்துள்ள ஒரே பொருளைக் குறிப்பிடுகிறது என்றும் கூடப் பொருள் கொள்ளலாம்.*

*5. இந்தப் பொருளானது ப்ரத்யக்ஷம், அனுமானம் என்னும் மற்ற பிரமாணங்களினாலும் உறுதிப்படுத்தப் படுகிறது.*

**अत्र तु तत्पदार्थपरोक्षत्वादिविशिष्टचैतन्यस्य त्वं-पदार्थापरोक्षत्वादिविशिष्टचैतन्यस्यचान्योन्यभेद-व्यावर्तकतया विशेषणविशेष्यभावसंसर्गस्यान्यतरविशिष्टस्यान्य-तरस्य तदैक्यस्य वा वाक्यार्थत्वाङ्गीकारे प्रत्यक्षादिप्रमाण-विरोधाद्वाक्यार्थो न सङ्गच्छते ॥ १५७ ॥**

அத்ர து தத்பதார்த்த-பரோக்ஷத்வாதி-விசிஷ்ட-சைதன்யஸ்யத்வம் பதார்த்த அபரோக்ஷத்வாதி-விசிஷ்ட சைதன்யஸ்ய ச அன்யோன்ய-பேத வ்யாவர்த கதயா விசேஷண-விசேஷ்யபாவ-ஸம்ஸர்கஸ்ய-அன்யதரஸ்ய-விசிஷ்டஸ்ய-அன்யதரஸ்ய-ததைக்யஸ்ய வா வாக்யார்-தஸ்ய-அங்கீகாரே-ப்ரத்யக்ஷாதி-ப்ரமாண விரோதாத் வாக்யார்த்தோ ந ஸங்கச்சதே ॥ 157 ॥

இங்கோ[1] 'அது' (தத்) என்னும் இந்த வாக்கியத்தில் 'அது' என்ற சொல்லிற்கு, பரோக்ஷத்வம் போன்றவற்றுடன் சேர்ந்த சைதன்னியமானது[2] பொருளாகிறது. 'நீ' என்னும் சொல்லிற்கு அபரோக்ஷத்வம் போன்றவற்றுடன் சேர்ந்த சைதன்னியமானது[3] பொருளாகிறது. இந்த இரு சைதன்னியங்களும் ஒன்றுடனொன்று உள்ள வேறுபாடு அகன்ற நிலையில், குணமானது குணத்தை உடையது என்னும் விசேஷண-விசேஷ்ய உறவைப் பெறுகின்றன என்றோ, ஒன்றனுக்கு மற்றொன்று[4] குணமாக ஆகிறது என்றோ அல்லது இரண்டுமே ஒருமையைப் பெறுகின்றன என்றோ, 'தத்வமஸி' என்னும் வாக்கியத்திற்குப் பொருளை எடுத்துக் கொள்ள இயலாது. அப்படி எடுத்துக் கொள்வது என்பது ப்ரத்யக்ஷம் போன்ற பிரமாணங்களுக்கு முரணாகி விடுவதால்[5] அது பொருத்தமானதாக இருக்காது.

1. தத் த்வம் அஸி' என்னும் வாக்கியத்தில்.

2. ஈசுவரன்.

3. ஜீவன்.

4. நீலக்கமலம் என்னும் வாக்கியத்தில் 'நீலம்' என்னும் சொல் குணத்தையும், கமலம் என்னும் சொல் பொருளையும் குறிக்கின்றன. இங்கு அப்படி இல்லை. 'தத்', 'த்வம்' என்னும் இரு சொற்களுமே வஸ்துவையே குறிக்கின்றன. எனவே விசேஷண-விசேஷ்ய பாவமானது சாத்தியமாகாது.

5. பிரத்யக்ஷ பிராமணத்தினால் ஜீவனானவன் மேலோட்டமான அறிவை உடையவன். சிறிதளவே ஆற்றலுடையவன் என்பது தெளிவாக உள்ளது. எனவே எல்லாம் வல்லவனும்,

*எல்லா ஆற்றல்களையும் உடைய ஈசுவரனுடன் ஒரு மிப்பதற்கு இயலாது.*

**तदुक्तं—**

**'संसर्गो वा विशिष्टो वा वाक्यार्थो नात्र सम्मतः ।**

**अखण्डैकरसत्वेन वाक्यार्थो विदुषां मतः ॥' इति (पञ्चदशी ७.७५) ॥ १५८ ॥**

ததுக்தம்—

ஸம்ஸர்கோவா விசிஷ்டோவா வாக்யார்த்தோ நாத்ர ஸம்மத: । அகண்டை கரஸத்வேன வாக்யார்த்தோ விதுஷாம் மத: இதி (ப. த. 7.75) ॥ 158 ॥

*அது இவ்விதம் கூறப்பட்டுள்ளது.*

*இந்த இரு சொற்களின் ('அது' என்னும் சொல், 'நீ' என்னும் சொல்) இணைவோ அல்லது ஒன்றனுக்கு மற்றொன்று அடைமொழியாக உள்ள தன்மையோ 'தத்வமஸி' என்னும் வாக்கியத்திற்குச் சரியான பொரு ளாக இருக்காது. இரண்டாவது இல்லாத ஒரே பரம் பொருளைத்தான் இவ்வாக்கியம் கருத்தாகக் கொண் டுள்ளது என்று அறிஞர்கள் கருதுகின்றனர் (நை. ஸி. 3.3).*

*இந்த சுலோகமானது 'வாக்கிய விருத்தி' 38-லும் வருகிறது.*

**अत्र गङ्गायां घोषः प्रतिवसतीतिवाक्यवज्जहल्लक्षणापि न संगच्छते ॥ १५९ ॥**

அத்ர கங்காயாம் கோஷ: ப்ரதிவசதி' இதி வாக்யவத் ஜஹல்லக்ஷணா அபி' ன சங்கச்சதே ॥ 159 ॥

இங்கு, 'கங்கையில் கோவலர்களின் கிராமம் உள்ளது' என்னும் வாக்கியத்தைப் போல 'தத்வமஸி' என்னும் வாக்கியத்தில் ஜஹல்லக்ஷணமானது பொருந்தாது.

**तत्र तु गङ्गाघोषयोराधाराधेयभावलक्षणस्य वाक्यार्थ-स्याशेषतो विरुद्धत्वाद्वाक्या-र्थमशेषतः परित्यज्य तत्सम्बन्धि-तीरलक्षणाया युक्तत्वाज्जहल्लक्षणा सङ्गच्छते ॥ १६० ॥**

தத்ர து கங்கா-கோஷயோ: ஆதார ஆதேய-பாவ-லக்ஷணஸ்ய வாக்யார்த்தஸ்ய அசேஷத: விருத்தத்வாத் வாக்யார்த்தம் அசேஷத: பரித்யஜ்ஞ தத்ஸம்பந்தி தீர லக்ஷணாயா: யுக்தத்வாத் ஜஹல்லக்ஷணா ஸங்கச்சதே ॥ 160 ॥

'கங்கையில் கோவலர்களின் கிராமம் உள்ளது' என்னும் இந்த வாக்கியத்தில், 'கங்கை' என்னும் சொல் மற்றும் 'கிராமம்' என்னும் சொல் என்னும் இந்த இரண்டையும் ஒன்றில் மற்றொன்று உள்ளது என்னும் பொருளில் அப்படியே எடுத்துக் கொண்டால் அது அனுபவத்திற்கு முரணானதாக இருக்கும். எனவே இந்த வாக்கியத்தின் பொருளை முழுமையாகக் கை விட்டு, லக்ஷணையால் (உட்பொருளால்) கங்கை என்னும் அந்தச் சொல்லுடன் தொடர்பு கொண்டுள்ள 'கரை' என்னும் பொருந்தும்படியான கருத்தை எடுத்துக் கொள்வது சரியானதாகும். இந்த இடத்தில் ஜஹல்லக்ஷணையானது பொருத்தமானதாக உள்ளது.

*ஜஹத் அஜஹல்லக்ஷணையை அல்லது பாக லக்ஷணையை விடுத்து, மற்ற எந்த முறையினாலும் 'தத்வமஸி' வாக்கியத்திற்குப் பொருள் கொள்ளவியலாது என்பது 169-ஆம் ஸூத்திரம் வரையிலும் விவரிக்கப்படுகிறது.*

**अत्र तु परोक्षापरोक्षचैतन्यैकत्वलक्षणस्य वाक्यार्थस्य भागमात्रे विरोधाद्भागान्तरमपि परित्यज्यान्यलक्षणाया अयुक्तत्वाज्जहल्लक्षणा न सङ्गच्छते ॥ १६१ ॥**

*அத்ர து பரோக்ஷ-அபரோக்ஷ-சைதன்யை கத்வ லக்ஷணஸ்ய வாக்யார்த்தஸ்ய பாக மாத்ரே விரோதாத் பாகாந்தரமபி பரித்யஜ்ய அன்ய லக்ஷணாயா: அயுக்த-த்வாத் ஜஹல்லக்ஷணா ந சங்கச்சதே ॥ 161 ॥*

*'தத்வமஸி' என்னும் இந்த வாக்கியத்திலோ, பரோக்ஷ, அபரோக்ஷ சைதன்னியங்களின் ஒருமையைக் குறிப்பிட்டு இருப்பதால், (பரோக்ஷம், அபரோக்ஷம் என்னும்) ஒரு பகுதியில்தான் முரண்பாடு காணப் படுகிறது. எனவே முரணற்ற மற்ற பகுதியையும் விட்டு விட்டுப் பொருளைத் தேடுவது பொருத்தமானதாக இருக்காது. எனவே இங்கு ஜஹல்லக்ஷணை பொருத்த மானதாக இருக்காது.*

*'தத்வமஸி' என்னும் வாக்கியத்தில், கண்ணிற்குப் புலப்படாத தன்மை, எல்லாம் அறிந்த தன்மை, எல்லா ஆற்றலும் உள்ள தன்மை போன்றவற்றைக் குறிப்பிடும் பகுதிக்கும், கண்ணிற்குப் புலப்படும் தன்மை, குறை வான ஞானம், குறைந்த ஆற்றலுடைய தன்மை*

போன்றவற்றைக் குறிப்பிடும் பகுதிக்கும் முரண்பாடு இருப்பினும், சைதன்ய அம்சத்தில் ஒருமித்த தன்மை யுள்ளது. எனவே ஒரு பகுதியில் முரண்பாடு உள்ளது என்று, எல்லாவற்றையும் கைவிடுவது சரியன்று. எனவேதான் ஜஹல்லக்ஷணையினால் பொருள் கொள் வது இங்கு சரியானதாக இருக்காது.

**न च गङ्गापदं स्वार्थपरित्यागेन तीरपदार्थं यथा लक्षयति तथा तत्पदं त्वंपदं वा स्वार्थपरित्यागेन त्वंपदार्थं तत्पदार्थं वा लक्षयत्वतः कुतो जहल्लक्षणा न सङ्गच्छत इति वाच्यम् ॥ १६२ ॥**

ந ச கங்காபதம் ஸ்வார்த்த பரித்யாகேன தீரபதார்த்தம் யதா லக்ஷயதி ததா தத்-பதம் த்வம்-பதம் வா ஸ்வார்த்த பரித்-யாகேன த்வம்-பதார்த்தம் வாதத் பதார்த்தம் லக்ஷயது, அத: குத: ஜஹல்லக்ஷணா ந ஸங்கச்சதே?-இதி வாச்யம் ॥

கங்கையில் கிராமம் என்னும் வாக்கியத்தில் கங்கை என்னும் சொல், தன்னுடைய நேரான பொருளை விடுத்து 'கரை' என்பதைக் குறிப்பதைப் போன்றே, 'தத்வமஸி' என்னும் வாக்கியத்தில் 'தத்' என்னும் சொல்லோ அல்லது 'த்வம்' என்னும் சொல்லோ தன்னுடைய நேரான பொருளை விடுத்து லக்ஷணையினால் 'தத்' என்ற சொல்லின் உட் பொருளையும், 'த்வம்' என்னும் சொல்லின் உட் பொருளையும், உணர்த்துவதாக எடுத்துக் கொள்ளப் பட்டால் அதனை ஜஹல்லக்ஷணை என்று ஏன் கூறக்கூடாது? என்று கேட்கவும் இயலாது.

முதல் பகுதியில் குறிப்பிட்டு, அடுத்த ஸூத்திரத்தில் அது நிராகரிக்கப்பட்டுள்ளது. கங்கை என்னும் சொல்லானது, பிரவாஹம் என்னும் தன்னுடைய பொருளை விட்டுவிட்டு, 'தீரம்' என்னும் சொல்லின் பொருளான கரையைக் குறிப்பதைப் போல, 'தத்' என்னும் சொல்லானது, தன்னுடைய பொருளான ஈசுவர சைதன்னியம் என்பதை விடுத்து, 'த்வம்' என்னும் சொல்லின் பொருளான, ஜீவசைதன்னியத்தை ஏன் குறிக்கக் கூடாது? இதைப் போன்றே, 'த்வம்' என்னும் சொல்லின் பொருள், ஈசுவர சைதன்னியம் என்று ஏன் ஆகக் கூடாது? அப்பொழுது ஒரே பொருளைக் கொடுப்பதால் வாக்கியத்தின் பொருள் சரியாகப் பொருந்துகிறது அல்லவா என்பது எதிர்த்தரப்பினரின் கருத்து ஆகும்.

**तत्र तीरपदाश्रवणेन तदर्थाप्रतीतौ लक्षणया तत्प्रतीत्यपेक्षायामपि तत्त्वम्पदयोः श्रूयमाणत्वेन तदर्थप्रतीतौ लक्षणया पुनरन्यतरपदेनान्यतरपदार्थप्रतीत्यपेक्षाभावात् ।। १६३ ।।**

தத்ரதீர-பத-ஆச்ரவணேன ததர்த்த-அப்ரதீதௌ லக்ஷணயா தத் ப்ரதீதி அபேக்ஷாயாமபி தத் த்வம் பதயோ: ச்ரூயமாணத்வேன ததர்த்த ப்ரதீதௌ லக்ஷணயா புன: அன்யதர-பதேன அன்யதர பதார்த்த ப்ரதீதி-அபேக்ஷாபாவாத் ।। 163 ।।

'கங்கையில் கிராமம்' என்னும் வாக்கியத்தில் 'கரை' என்னும் சொல் இல்லாமலிருப்பதால், அந்தப் பொருளை நாம் லக்ஷணையின்மூலம் பெற வேண்டி

உள்ளது. ஆனால் 'தத்வமஸி' என்னும் வாக்கியத்தில் 'தத்', 'த்வம்' என்ற சொற்கள் உள்ளன. அவற்றின் பொருளும் வெளிப்படையாகவே உள்ளது. எனவே அவற்றில் ஒரு சொல்லின் மூலம் மற்றொரு சொல்லின் பொருளை உணர்த்துவதற்கு லக்ஷணை தேவைப் படுவது இல்லை.

ஒரு வாக்கியத்தில் வாச்யார்த்தமானது ஒன்றுடன் ஒன்று முரண்பட்டு இருக்கும் பொழுது, லக்ஷணையின் மூலம் பொருளை நிர்ணயம் செய்ய வேண்டி உள்ளது. கங்கையின் பிரவாஹத்தில் கோவலர்களின் கிராமம் இருக்கச் சாத்தியம் இல்லை. எனவே, கங்கையிலேயே இருக்கிறதோ என்னும் அளவிற்கு, அருகிலே கரையில் இருக்கும் கிராமம் என்று நிச்சயம் செய்தாகி விட்டது. இங்கு, 'கரை' என்னும் சொல்லானது மூலத்தில் இல்லை. லக்ஷணத்தைப் பயன்படுத்தி, முழுமையான பொருளைப் பெறுவதற்காகக் கற்பிக்க வேண்டி யுள்ளது. ஆனால் 'தத்வமஸி' என்னும் வாக்கியத்தில் இதற்கு அவசியம் இல்லை. 'தத்' என்னும் சொல் லானது 'த்வம்' என்னும் சொல்லின் பொருளை அல்லது 'த்வம்' என்னும் சொல்லானது 'தத்' என்னும் சொல்லின் பொருளை லக்ஷணையினால் குறிப்பிடு கிறது என்று நிர்ணயம் செய்வதற்கு இரு சொற்களை யும் நேரடியாக வாக்கியத்தில் பயன்படுத்தி இருப் பதும், அந்த இரண்டின் வாச்யார்த்தமானது நேராகவே தென்பட்டுக் கொண்டிருப்பதும் தடைப்பட்டு விடு கின்றன. கையிலுள்ள புண்ணிற்குக் கண்ணாடி எதற்கு என்பதைப் போல வாச்யார்த்தத்தையே விவரிப்பதற்கு

இயலும் பொழுது ஜஹல்லக்ஷணையை ஏற்பது சரி யானது அல்ல என்பது கருத்தாகும்.

**अत्र शोणो धावतीतिवाक्यवदजहल्लक्षणापि न सम्भवति ॥ १६४ ॥**

அத்ர 'சோணோ தாவதி' இதி வாக்யவத் அஜஹல்-லக்ஷணா அபி ந ஸம்பவதி ॥ 164 ॥

இங்கு, 'சிகப்பு ஓடிக் கொண்டிருக்கிறது', என்னும் வாக்கியத்தைப் போல, 'தத்வமஸி' வாக்கியத்தில் அஜஹல்லக்ஷணையும் பொருத்தமாக இருக்காது. 153-ஆம் ஸூத்திரத்தின் அடிக் குறிப்பைப் பார்க்கவும்.

**तत्र शोणगुणगमनलक्षणस्य वाक्यार्थस्य विरुद्धत्वात्तद-परित्यागेन तदाश्रयाश्वादि-लक्षणया तद्विरोधपरिहारसम्भवाद-जहल्लक्षणा सम्भवति ॥ १६५ ॥**

தத்ர சோணகுண-கமன-லக்ஷணஸ்ய வாக்யார்த்-தஸ்ய விருத்தத்வாத் தத் அபரித்யாகேன ததாச்ரய அச்வாதி லக்ஷணயா தத் விரோத பரிஹாரஸம்பவாத் அஜஹல்லக்ஷணா ஸம்பவதி ॥ 165 ॥

'சிகப்பு நிறம் ஓடிக் கொண்டிருக்கிறது' என்னும் வாக்கியத்தின் வெளிப்படையான பொருள், பொருளற்றது ஆகும். இந்தக் குறையை அகற்றுவதற்கு 'சிகப்பு' என்னும் சொல்லுடைய நேரான பொருளை விடாமல் அந்த நிறமுடைய குதிரையைக் குறிப்பதாக எடுத்துக் கொள்ள வேண்டும். எனவே இந்த இடத்தில் அஜஹல்லக்ஷணையானது பொருந்துகிறது.

**अत्र तु परोक्षत्वापरोक्षत्वादिविशिष्टचैतन्यैकत्वस्य वाक्यार्थस्य विरुद्धत्वात्तदपरित्यागेन तत्सम्बन्धिनो यस्य कस्यचिदर्थस्य लक्षितत्वेऽपि तद्विरोधपरिहारासम्भवाद-जहल्लक्षणा न सम्भवत्येव ॥ १६६ ॥**

அத்ர து பரோக்ஷத்வ-அபரோக்ஷத்வாதி-விசிஷ்ட சைதன்ய ஏகத்வஸ்ய வாக்யார்தஸ்ய விருத்தத்வாத் ததபரித்யாகேன தஸ்ஸம்பந்தின: யஸ்ய கஸ்ய சிதர்த்தஸ்ய லக்ஷிதத்வே அபி தத்விரோத-பரிஹார-அஸம்பவாத் அஜஹல்லக்ஷணா ந ஸம்பவத்யேவ ॥ 166 ॥

ஆனால், 'தத்வமஸி' என்னும் இந்த வாக்கியத்தில் பரோக்ஷமாகவும், அபரோக்ஷமாகவும் ஒரே சைதன்னிய மானது உள்ளது என்று நேரடியாகப் பொருள் கொள் வது முரணானதாகும். இந்தப் பொருள்களை (பரோக்ஷ அபரோக்ஷ) விடாமலேயே, அவைகளுக்குப் பொருத்த மானதாக உள்ள வேறு ஒரு கருத்தானது குறிக்கப்படு வதாக எடுத்துக் கொண்டாலும் முரண்பாடு நீங்காமலே இருக்கும். எனவே இங்கும் அஜஹல்லக்ஷணை பொருத்தமானதாக இருக்காது.

அஜஹல்லக்ஷணையில் வாச்யார்த்தத்தை நிறுத்திக் கொண்டு, மேலும் பொருளை சேர்த்துக்கொள்ள இய லும். ஆனால் 'தத்வமஸி' என்னும் இந்த வாக்கியத்தில் அந்த விதத்தில் செய்தாலும், பரோக்ஷத்தன்மை, அபரோக்ஷத்தன்மை என்னும் இவைகளிலுள்ள முரண் பாடு நீங்காமலேயே இருப்பதால் இந்த லக்ஷணையின் மூலமும் பொருளை அறிந்து கொள்ள வியலாது.

**न च तत्पदं त्वंपदं वा स्वार्थविरुद्धाम्शपरित्यागेना-म्शान्तरसहितं त्वम्पदार्थं तत्पदार्थं वा लक्षयत्वतः कथं प्रकारान्तरेण भागलक्षणाङ्गीकरणमिति वाच्यम् ॥ १६७ ॥**

ந ச தத்பதம் த்வம் பதம் வா ஸ்வார்த்த விருத்தாம்ச பரித்யாகேன அம்சாந்தரஸஹிதம் த்வம்-பதார்த்தம்-தத்-பதார்த்தம் வா லக்ஷயது, அத: கதம் ப்ரகாராந்தரேண பாகலக்ஷணா-அங்கீகரணம் இதி வாச்யம் ॥ 167 ॥

*மற்றும் 'தத்' என்னும் சொல்லோ அல்லது 'த்வம்' என்னும் சொல்லோ, தன்னிடத்திலுள்ள முரண்பட்ட பகுதியை விலக்கிக் கொண்டு (முரணற்ற) தன்னுடைய எஞ்சியுள்ள பொருளை மற்ற பொருளுடன் இணைத்துக் கொள்ளலாம். எனவே 'வேறு வகையான பாகலக்ஷணையை எவ்விதம் ஏற்றுக் கொள்வது?' என்று கூறுவதும் சரியாகாது.*

*'தத்' என்னும் சொல்லின் பொருளான பரோக்ஷத்வம் போன்ற இயல்புகளைப் பெற்றுள்ள ஈசுவர சைதன்னியத்தில், பரோக்ஷத்வம் போன்றவற்றை விடுத்து, சைதன்னிய அம்சத்தை மட்டும் எடுத்துக் கொண்டால், அது 'த்வம்' என்னும் சொல்லின் பொருளான ஜீவ சைதன்னியத்திற்கு முரணாக இருக்காது. 'த்வம்' மற்றும் 'தத்' என்னும் சொற்களின் விஷயத்திலும் அவ்விதமே கொள்ளப்பட வேண்டும். எனவே பாகலக்ஷணத்தை ஏற்றுக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படுவதில்லை. இது வாதத்தின் கருத்து ஆகும். இதை அடுத்த ஸூத்திரம் மறுத்துள்ளது.*

**एकेन पदेन स्वार्थांशपदार्थान्तरोभयलक्षणाया असम्भवात्पदान्तरेण तदर्थप्रतीतौ लक्षणया पुनस्तत्प्रतीत्यपेक्षाभावाच्च ॥ १६८ ॥**

ஏகேன பதேன ஸ்வார்த்தாம்ச பதார்த்தாந்தர உபய லக்ஷணயா அஸம்பவாத் பதாந்தரேண ததர்த்தப்ரதீதௌ லக்ஷணயா புன: தத்ப்ரதீதி அபேக்ஷா-அபாவாச்ச ॥ 168 ॥

ஒரே சொல்லானது தன்னுடைய பொருளின் ஒரு அம்சத்தையும், இன்னொரு சொல்லின் பொருளையும் குறிக்கவியலாது. மேலும் மற்றொரு சொல்லுடைய பொருள் நேரான பொருளாக, தெளிவான பொருளாக இருப்பதால் முதல் சொல்லுடைய லக்ஷணையின் மூலம் தான் அது உணர்த்தப்பட வேண்டும் என்பது இல்லை.

ஒரு வாக்கியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள ஒரு சொல்லிற்கு ஒரு வாச்யார்த்தம் அல்லது ஒரு லக்ஷ்யார்த்தமும் தென்படுமே தவிர இரண்டு இல்லை. இரண்டாவதாக, 'தத்' என்னும் சொல்லிற்கு லக்ஷணை யின் மூலம் கற்பிக்கப்பட்டுள்ள பொருளானது நேராக, 'த்வம்' என்னும் சொல்லைப் பயன்படுத்தி இருப்ப தால் அறியப்படுகிறது. எனவே அஜஹல்லக்ஷணை யானது 'தத்வமஸி' என்னும் வாக்கியத்தின் பொருளில் சரியாகப் பொருந்துவது இல்லை.

**तस्माद्यथा सोऽयं देवदत्त इति वाक्यं तदर्थो वा तत्कालैतत्कालविशिष्टदेवदत्तलक्षणस्य वाक्यार्थस्यांशे**

**विरोधाद्विरुद्धतत्कालैतत्कालविशिष्टाम्शं परित्यज्याविरुद्धं देवदत्ताम्शमात्रं लक्षयति तथा तत्त्वमसीतिवाक्यं तदर्थो वा परोक्षत्वापरोक्षत्वादिविशिष्टचैतन्यैकत्वलक्षणस्य वाक्यार्थस्याम्शे विरोधाद्विरुद्धपरोक्षत्वापरोक्षत्वविशिष्टाम्शं परित्यज्याविरुद्धमखण्ड चैतन्यमात्रं लक्षयतीति ॥ १६९ ॥**

தஸ்மாத் யதா 'ஸோऽயம் தேவதத்த' இதி வாக்யம் ததர்த்தோவா தத்கால-ஏதத்கால-விசிஷ்ட-தேவதத்த-லக்ஷணஸ்ய வாக்யார்த்தஸ்ய அம்சே விரோதாத், விருத்த-தத்கால-ஏதத்கால விசிஷ்ட-அம்சம் பரித்யஜ்ய அவிருத்தம் தேவதத்தாம்ச மாத்ரம் லக்ஷயதி ததா தத்வமஸீதி வாக்யம் ததர்தோ வா பரோக்ஷத்வ அபரோக்ஷத்வாதி-விசிஷ்ட-சைதன்ய ஏகத்வ-லக்ஷணஸ்ய வாக்யார்த்தஸ்ய அம்சே விரோதாத் விருத்த பரோக்ஷத்வ-அபரோக்ஷத்வ-விசிஷ்ட அம்சம் பரித்யஜ்ய அவிருத்தம் அகண்ட சைதன்ய மாத்ரம் லக்ஷயதி இதி ॥ 169 ॥

*எனவே எவ்வாறு 'அவனே இந்த தேவதத்தன்' என்னும் வாக்கியத்தில் அல்லது அதனுடைய பொருளில் 'கடந்த காலத்தில் பார்த்த தேவதத்தன்', 'தற்பொழுது பார்த்த தேவதத்தன்' என்னும் கால வேறுபாட்டால் தோன்றுகின்ற முரண்பாடு இருப்பதால், இந்தக் காலத்தைக் குறிக்கும் முரண்பாடான பகுதியை விடுத்து, (இரு காலங்களிலும் ஒரே மனிதனாக உள்ள) தேவதத்தனை மட்டும் லக்ஷணையினால் பெறுகிறோமோ, அதைப் போன்றே 'தத்வமஸி' என்னும்*

வாக்கியத்தில் அல்லது அதனுடைய பொருளில் பரோக்ஷம், அபரோக்ஷம் என்னும் இரண்டையும் அடைமொழியாக உடைய சைதன்னியம் என்பதில் உள்ள முரண்பாட்டால் பரோக்ஷம், அபரோக்ஷம் இவற்றைக் குறிப்பிடும் முரண்பாடான பகுதியை விடுத்து, 'தத்', 'த்வம்' என்னும் இரண்டிற்கும் பொது வான அகண்டமான சைதன்யஸ்வரூபம் மட்டுமே லக்ஷணையால் பெறப்படுகிறது.

## 'அஹம் ப்ரஹ்மாஸ்மி'
## —மஹாவாக்கியத்தின் பொருள்

**अथाधुनाहं ब्रह्मास्मि (बृह. उ. १.४.१०) इत्यनुभव-वाक्यार्थो वर्ण्यते ॥ १७० ॥**

அத அதுனா 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' (ப்ருஹதாரண்யக உபநிஷதம் 1.4.10) இதி அனுபவ வாக்யார்த்த: வர்ண்யதே ॥

*இப்பொழுது 'அஹம் ப்ரஹ்மாஸ்மி', 'நான் பரம் பொருளாக இருக்கிறேன்' (பிரு. உ. 1.4.10) என்னும் அனுபவ வாக்கியத்தின் பொருளானது விவரிக்கப்படு கிறது.*

*அத்வைத சம்பிரதாயத்தில் 'தத்வமஸி' என்பதை உபதேசவாக்கியம் என்றும், 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்பதை அனுபவ வாக்கியம் என்றும் கூறுகின்றனர்.*

*இங்கும் அஹம் என்பது ஜீவசைதன்னியத்தையும் ப்ரஹ்ம என்பது ப்ரஹ்மசைதன்னியத்தையும் குறிப் பிடுவதால் அவைகளின் ஒருமையை பாகலக்ஷணையின்*

மூலமாகவே தத்வமஸி என்னும் வாக்கியத்தின் விஷயத்தில் விவரித்து இருப்பதைப் போன்றே கிரகித்துக் கொள்ள வேண்டும்.

**एवमाचार्येणाध्यारोपापवादपुरःसरं तत्त्वम्पदार्थौ शोधयित्वा वाक्येनाखण्डार्थेऽव-बोधितेऽधिकारिणोऽहं नित्यशुद्धबुद्धमुक्तसत्यस्वभावपरमानन्दानन्ताद्वयं ब्रह्मास्मी-त्यखण्डा-काराकारिता चित्तवृत्तिरुदेति ॥ १७१ ॥**

ஏவம் ஆசார்யேண அத்யாரோப-அபவாத-புரஸ்ஸரந்தத் த்வம்-பதார்த்தௌ சோதயித்வா வாக்யேன அகண்டார்த்தே அவபோதிதே அதிகாரிண: அஹம் நித்ய-சுத்த-புத்த-முக்த-ஸத்ய-ஸ்வபாவ-பரமானந்த-ஆனந்த-அத்வயம் ப்ரஹ்ம-அஸ்மி இதி அகண்ட-ஆகார-காரிதா சித்தவ்ருத்தி: உதேதி ॥

(எப்படி) [1] (தவறுதலாக, ஏற்றிவைக்கப்பட்டிருந்த பொய்களை நீக்குவதன்மூலம்) ஆசாரியரால், அத்யாரோபம், அபவாதங்களின் மூலம், 'தத்' மற்றும் 'த்வம்' என்னும் சொற்களின் பொருட்கள், பரிசீலனை செய்யப் பட்டு உபதேசிக்கப்பட்ட வாக்கியத்தால் [2] அகண்டமான பொருளானது [3] அதிகாரிக்கு [4] உணர்த்தப்பட்டது. அவனுடைய அறிவில் 'நான் நித்தியமான, [5] சுத்தமான, [6] அறிவுமயமான, [7] எப்பொழுதும் சுதந்திரமான, [8] உண்மையான, [9] இயற்கையிலேயே பேரின்பமான, [10] எல்லை, வரம்புகள் அற்ற, [11] (அதைத்தவிர) இரண்டாவது இல்லாத [12] பிரம்மமாகவே இருக்கிறேன் [13] என்னும் அகண்டாகாரமான [14] எண்ணம் [15] எழுகிறது.

1. பாகலக்ஷணையின் மூலமாக.

2. மஹாவாக்கியத்தால்.

3. மூன்று சொற்கள் குறிப்பிடும் பொருள் ஒன்றே யாகும். அது பிரம்மசைதன்னியத்தைப் பற்றிக் குறிப்பிடு கிறது (அகண்டமான பொருள்).

4. 6-ஆம் ஸூத்திரத்தைப் பார்க்கவும்.

5. நிலைத்த.

6. அறியாமை போன்ற தோஷங்களின் தொடர்பற்ற.

7. ஜடத்திற்கு எதிரான, தானே ஒளிரும், ஞானஸ்வ ரூபமான.

8. எத்தகைய உபாதியும் இல்லாமலிருப்பதால் எப் பொழுதும் சுதந்திரமான.

9. சூனியமற்ற, அழியாத தன்மையை உடைய.

10. விஷய இன்பத்தால் ஏற்படும் மனிதர்களின் ஆனந்தத்திலிருந்து தொடங்கி, நான்முகனான பிரம்மனின் ஆனந்தம் வரையிலுள்ள எல்லா ஆனந்தங்களும் கர்மத்தால் ஏற்படுவதால் அழியத்தக்கவை ஆகும். பிரம்மமானது அவ் வனைத்தையும் மீறி இருப்பதாலும் ஆனந்தஸ்வரூபனாகவே ஆகி இருப்பதாலும் 'பரமானந்த'மாகும் (பேரின்பமயமான).

11. தேசம் காலம் போன்ற வரம்புகள் அற்ற.

12. தன்னைக் காட்டிலும் வேறானதாக உள்ள இரண்டாம் வஸ்து இல்லாமலுள்ள.

13. பிரம்மன் என்னும் சொல்லால் கூறப்பட்டுள்ள சைதன்னியம்.

14. அகண்ட பிரம்மனின் ரூபத்தை.

15. நீரில் அலைகள் ஏற்படுவதைப் போல, மனத்தில் எழும் அலைகளைச் சித்தவிருத்தி என்று கூறுகின்றனர்.

**सा तु चित्प्रतिबिम्बसहिता सती प्रत्यगभिन्नमज्ञातं परंब्रह्म विषयीकृत्य तद्गताज्ञानमेव बाधते तदा पटकारणतन्तुदाहे पटदाहवदखिलकारणेऽज्ञाने बाधिते सति तत्कार्यस्याखिलस्य बाधितत्वात्तदन्तर्भूताखण्डाकाराकारिता चित्तवृत्तिरपि बाधिता भवति ॥ १७२ ॥**

*ஸா து சித்-ப்ரதிபிம்ப-ஸஹிதா ஸதீ ப்ரத்யக்-அபின்னம் அஜ்ஞாதம் பரம் ப்ரஹ்ம விஷயீக்ருத்ய தத்கத-அஞ்ஞானமேவ பாததே ததா படகாரணதந்து தாஹே படதாஹவத்-அகில-காரணே அஞ்ஞானே பாதிதே ஸதி தத்கார்யஸ்ய அகிலஸ்ய பாதிதத்வாத் ததந்தர்பூத-அகண்டாகாரகாரிதா சித்தவ்ருத்தி: அபி பாதிதா பவதி ॥ 172 ॥*

*இந்த அகண்டாகார விருத்தியானது, தூய பரம்பொருளான சைதன்னியத்தின் பிரதிபிம்பத்துடன் சேர்ந்து ஆனால் அவ்விதம் அறியப்படாமல் உள்ள வேறுபடாத பரம்பொருளையே விஷயமாகக் கொண்டு, (அதனை உணர்ந்து கொள்ள முடியாமல் மறைக்கும்) அஞ்ஞானத்தை அகற்றுகிறது. அதன் பிறகு, நூல்கள் எல்லாம் எரிக்கப்படும் பொழுது, அந் நூல்களால் நெய்யப்பட்ட ஆடையும் எரிந்து போவ தைப் போல, மூலகாரணமாக உள்ள அஞ்ஞானம் அழியும்பொழுது, அதன் விளைவுகளாக உள்ள எல்லா அறியாமைகளும் அகன்றுவிடுகின்றன. இதனால் அகண்டாகாரமான மனோ விருத்தியும் இந்த (மூல அஞ்ஞானத்தின்) விளைவுகளில் ஒன்றாக இருப்பதால் அதுவும் அழிக்கப்பட்டு விடுகிறது.*

தர்மராஜ அத்வரிந்திரர் அவர்களின் 'வேதாந்த பரிபாஷா' போன்ற நூல்களில், மனமானது பானை போன்ற விஷயங்களை அறியும் முறையானது வரு மாறு விவரிக்கப்பட்டுள்ளது. சித்த வஸ்துவானது, கண் போன்ற புலன்களின் மூலம் வெளியிலே பாய்ந்து பானை போன்ற விஷயங்களுடன் கூடி, அவற்றைச் சூழ்ந்து கொண்டு அவற்றின் உருவத்தைப் பெற்று மீண்டு வருகிறது. இத்தகைய இயல்பைச் சித்தவிருத்தி என்று கூறுகின்றனர். இந்த சித்தவிருத்தியில் ஆத்ம சைதன்னியம் பிரதிபலிக்கும்பொழுது 'நான் பானையை உணர்ந்து கொண்டிருக்கிறேன்' அல்லது இது பானை என்னும் ஞானமானது ஏற்படுகிறது. இது பானையை குறித்து இருந்த அஞ்ஞானத்தை அகற்றி விடுகிறது.

அதிகாரியின் மனத்தில் (தகுதியுடைய மாணவ னின் மனத்தில்) மகாவாக்கியம்—சிரவணம் போன்ற வற்றால் ஏற்பட்ட அகண்டாகாரத்தைப் பெற்ற சித்த விருத்தியானது ஜீவாத்மனின் பிரதிபிம்பத்துடன் இணைந்து, ஜீவாத்மனின் ஞானத்தையும், அதிலிருந்து மாறுபாடு அற்றதாக உள்ள பரபிரம்மனின் ஞானத் தையும் ஏற்படுத்துகிறது. இந்த ஒருங்கிணைந்த ஞானம் ஏற்படும் அதே நேரத்திலேயே, பரம்பொருளைக் குறித்து, ஜீவனுக்கு இருந்த அஞ்ஞானமும் அகன்று விடுகிறது. அஞ்ஞானத்தின் விளைவாக இருந்த வெளி யுலகமானது அகல்வதுடன் அக உலகின் சித்த விருத்தி யும் கூட அகன்று விடுகிறது. பிரும்மாகாரத்தைப் பெற்ற சித்த விருத்தியானது, ஆத்ம-பிரம்ம ஞானத்தை ஏற்படுத்திய பிறகும் எஞ்சிவிட்டால் அது அத்வைதத்

திற்குக் கேடு என்பது அனைவரும் அறிந்த ஒன்று மற்றும் சாத்திரத்திற்கு எதிரானது ஆகும்.

**तत्र प्रतिबिम्बितं चैतन्यमपि यथा दीपप्रभादित्य-प्रभावभासनासमर्था सती तयाभिभूता भवति तथा स्वयम्प्रकाशमानप्रत्यगभिन्नपरब्रह्मावभासनानर्हतया तेनाभिभूतं सत् स्वोपाधिभूताखण्डवृत्तेर्बाधितत्वाद्दर्पणाभावे मुखप्रति-बिम्बस्य मुखमात्रत्ववत्प्रत्यग-भिन्नपरब्रह्ममात्रं भवति ॥ १७३ ॥**

தத்ர பிரதிபிம்பிதம் சைதன்யம் அபி யதா தீபப்ரபா ஆதித்ய ப்ரபாऽவபாஸன அஸமர்த்தா ஸதீ தயா அபிபூதா பவதி ததா ஸ்வயம்ப்ரகாசமான-ப்ரத்யகபின்ன பரப்ரஹ்ம-அவபாஸ-அனர்ஹதயா தேன அபிபூதம் ஸத், ஸ்வ-உபாதிபூத-அகண்டவ்ருத்தே: பாதிதத்வாத் தர்பண-அபாவே முகப்ரதி-பிம்பஸ்ய முக மாத்ரத்வவத் ப்ரத்யகபின்னபர ப்ரஹ்ம மாத்ரம் பவதி ॥ 173 ॥

அங்கு[1] பிரதிபலித்த சைதன்யமும் கூட,[2] ஒரு விளக்கின் ஒளியானது சூரியனின் ஒளியை ஒளிரச் செய்யும் திறமையற்று, அந்த சூரியனின் ஒளியாலேயே மங்கி விடுகிறதோ அதைப் போன்றே தானே ஒளிர்வதும், ஜீவாத்மாவிடமிருந்து வேறுபடாமல் உள்ளதுமாகிய பரம்பொருளை ஒளிரச் செய்யும் ஆற்றலற்று, அந்த பரபிரம்மத்தின் ஒளியினாலேயே மங்கி விடுகிறது. சைதன்னியத்துடன் சேர்ந்த (சைதன்னியம் பிரதிபலிக்கும்) அகண்டாகார மனோவிருத்தி அகலும் பொழுது, கண்ணாடி இல்லாமல் இருக்கும் பொழுது

அதில் தென்பட்ட பிரதிபிம்பமானது அகன்று, உண்மையான பிம்பம் மட்டும் எஞ்சி நிற்பதைப் போல[3] ஆத்மாவைத் தவிர வேறல்லாத பிரம்மமே தனித்து எஞ்சி நிற்கிறது.

1. அகண்டாகாரத்தைப் பெற்றுள்ள சித்தவிருத்தியில்.
2. ஜீவாத்மா என்னும் சைதன்னியமும் கூட.
3. கண்ணாடியை அகற்றி விட்டால் அதில் இருந்த முகத்தின் பிரதிபிம்பம் என்ன ஆகிறது? அதாவது அது பிம்பமாக உள்ள முகத்துடனேயே ஒன்றுசேர்ந்து விடுகிறது. அதைப் போன்றே அகண்டாகார சைதன்ய விருத்தியானது அகலும்பொழுது அதில் பிரதிபலித்த சைதன்யமும்கூட அகன்று மூல சைதன்னியம் மட்டுமே எஞ்சி நிற்கிறது.

**एवं च सति 'मनसैवानुद्रष्टव्यं' (बृह. उ. ४.४.१९) 'यन्मनसा न मनुते' (के. उ. १.६) इत्यनयोःश्रुत्योरविरोधो वृत्तिव्याप्यत्वाङ्गीकारेण फलव्याप्यत्वप्रतिषेधप्रतिपादनात् ॥**

ஏவம் ச ஸதி 'மனஸ்யை வானுத்ரஷ்டவ்யம்' (பிரு. உ. 4..4.19) 'யன்மனஸா ந மனுதே' (கே. உ. 1.6) இத்யனயோ: ச்ருத்யோ: அவிரோத: வ்ருத்திவ்யாப்யத்வ-அங்கீகாரேண பல வ்யாப்யத்வ-ப்ரதிஷேத ப்ரதிபாதனாத் ॥ 174 ॥

இது இவ்விதம் இருக்கும் பொழுது 'மனத்தினால் மட்டுமே அறியப்பட வேண்டும்' (பிரு. உ. 4.4.19) 'எதை மனத்தினால் அறியவியலாததோ' என்னும் (கே. உ. 1.6) சுருதி வாக்கியங்களுக்குள் முரண்பாடு எதுவும் இல்லை. ஏனெனில் பரபிரம்மமானது (அந்தகரணத்தின்) விருத்தியால் வியாபிக்கப்படுகிறது

என்பதை ஏற்றுக் கொண்டுள்ளது. ஆனால் விருத்தியின் பயனாக வியாபிக்கப்பட்டுள்ளது என்னும் மறுப்பையும் கொண்டுள்ளது.

தூய்மையான மனத்தினால் ஆத்மாவை அறிய இயலும் என்னும் பொருளை அளிக்கும் பல சுருதி வாக்கியங்கள் உள்ளன. உதாரணம்—

'ஏஷ ஸர்வேஷு பூதேஷு
கூடோऽத்மா ந ப்ரகாசதே ।
த்ருச்யதே த்வக்ர்யயா புத்த்யா
ஸூக்ஷ்மயா ஸூக்ஷ்ம தர்சிபி ॥'

'இந்த ஆத்மா எல்லா உயிர்களிலும் மறைவாக உள்ளது. வெளிப்பட்டுத் தெரிவது இல்லை. ஆனால் ஒருமைப்படுத்தப்பட்ட நுண்ணிய புத்தியால் மகான்கள் இந்த ஆத்மாவைக் காண்கின்றனர்' (க. உ. 1.3.12).

'மனஸ்யை வேதமாப்தவ்யம்', 'இது மனத்தினாலேயே அறியப்படத் தக்கது ஆகும்' (க. உ. 4.11). 'தாது ப்ரஸாதான்மஹிமானமாத்மன' (க. உ. 2.20).

'அத்யாத்ம யோகாதிகமேன தேவம் மத்சாதீரோ ஹர்ஷசோகௌ ஜஹாதி ।', 'ஆன்மீக யோகத்தைப் பெற்றிருப்பதால், பரம்பொருளை உணர்ந்து கொண்டு, விவேகியானவன் இன்ப-துன்பங்களை விட்டு விடுகிறான்' (க. உ. 2.12).

அதைப் போன்றே, ஆத்மாவானது மனத்திற்கு எட்டாதது என்னும் வாக்கியங்களும் உள்ளன.

'யதோ வாசோ நிவர்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ ।', 'யாரை அடைய வியலாமல் மனமும், வாக்கும் திரும்புகின்றனவோ' (தை. உ. 2.4).

'அவிகல்போ ஹ்யயமாத்மா அவாங்மனோ கோசரத்வாத் ।', 'இந்த ஆத்மாவானது விகல்பமற்றது. ஏனெனில் வாக்கிற்கும், மனத்திற்கும் எட்டாதது ஆகும்' (ந்ரு. உ. தா.).

இந்த சுருதி வாக்கியங்களிலுள்ள ஒன்றுடனொன்று முரண்பட்ட தன்மையை எப்படி அகற்றுவது? மனமானது வெளிப்புறத்திலுள்ள பொருளில் உருவத்தைப் பெற்று விருத்திரூபத்தினால் பரிபக்குவத்தை அடைந்திருக்கும் பொழுது அதில் ஆத்ம சைதன்னியமானது பிரதிபலித்து, அந்த வஸ்துவைக் குறித்து இருந்த அஞ்ஞானத்தை அகற்றி, ஞானத்தை ஏற்படுத்துகிறது. இங்கு வெளிப் புறத்திலுள்ள வஸ்துவானது ஜடமாக இருப்பதால் இது சாத்தியமாகிறது. ஆனால் பிரம்ம வஸ்துவின் விஷயத்தில் இந்த முறையானது சிறிது வேறுபடுகிறது. மனமானது பிரம்ம வஸ்துவை வியாபிக்க வல்லது. பிரம்மனின் வடிவத்தை ஏற்படுத்த வல்லது ஆகும். ஆனால் பிரம்மன், தானாகவே ஞானஸ்வரூபத்தை உடையவனாக இருப்பதால் இந்த சித்த விருத்திக்கு அதைக் குறித்து இருந்த அஞ்ஞானத்தை அகற்ற வியலுமே தவிர, அதில் பிரதிபலித்த ஆத்ம சைதன்னியத்தின்மூலம் ஞானத்தை ஏற்படுத்த இயலாது. மனத்தினால் ஆத்ம வஸ்துவை அறியக்கூடும் என்று கூறும் சுருதி வாக்கியங்கள், பிரம்மனைச் சித்த விருத்தியானது வியாபித்து, அதைக்

குறித்து இருந்த அஞ்ஞானத்தை அகற்ற வியலும் என்னும் கண்ணோட்டத்துடன் கூறப்பட்டது ஆகும். பிரம்மமானது மனத்திற்கு அப்பாற்பட்டது என்னும் வாக்கியங்கள் மனோ விருத்தியானது பிரம்ம ஞானத்தை ஏற்படுத்தவியலாது என்னும் கண் ணோட்டத்துடன் கூறப்பட்டவையாகும். இவ்விதத் தில் இந்த முரண்பாட்டை அகற்றவியலும்.

**तदुक्तं—**

**'फलव्याप्यत्वमेवास्य शास्त्रकृद्भिर्निवारितम् ।'**

**'ब्रह्मण्यज्ञाननाशाय वृत्तिव्याप्तिरपेक्षिता ॥' इति (पञ्चदशी ७.९०,९२) ॥ १७५ ॥**

தदுக்தம்—

'பலவ்யாப்யத்வ மேவாஸ்ய சாஸ்த்ரக்ருத்பிர்னிவாரிதம் ।'

'ப்ரஹ்மண்ய ஜ்ஞானனாசாய வ்ருத்தி வ்யாப்தி ரபேக்ஷிதா ॥' இதி (ப. த. 7.90,92)

எனவேதான் பஞ்சதசீ என்னும் நூலில் (வித்யா ரண்ய முனிவர் அவர்கள்) 'சாத்திரங்களை இயற்றிய வர்கள், இது [1] பல-வ்யாப்யம் அன்று. (சிதா பாஸனால்-ஜீவாத்மாவால் ஒளிரச் செய்ய வேண்டிய அவசியம் அதற்கு இல்லை) என்று கூறியுள்ளனர். [2] பிரம்மத்தை மறைத்துக் கொண்டுள்ள அறியாமை (அஞ்ஞானம்) அகல்வதற்கு மட்டுமே அகண்டாகார மனோவிருத்தியானது அவசியமாகிறது' என்று கூறப் பட்டுள்ளது (ப. த. 7.90,92).

1. பிரம்ம சைதன்னியம்.

2. அந்தகரணத்தின் அல்லது சித்தத்தின் விருத்தியானது பிரம்மத்தை வியாபிக்க வல்லது என்பதை அவர்கள் ஏற்றுக் கொள்வதில்லை.

**'स्वयम्प्रकाशमानत्वान्नाभास उपयुज्यते ।' इति च (पञ्चदशी ७.९२) ॥ १७६ ॥**

ஸ்வயம் ப்ரகாச மானத்வாத் னாபாஸ உபயுஜ்யதே ॥ இதி ச (ப. த. 7.92)

மேலும் பிரம்மமானது தானே ஒளிரக் கூடியதாக இருப்பதால், அதை ஒளிரச் செய்வதற்கு ஜீவாத்மன் (சிதாபாஸன்) தேவையில்லை என்றும் கூறப்பட்டுள்ளது (ப. த. 7.92).

மற்ற ஜடவஸ்துக்களைக் குறித்த ஞானமானது ஏற்பட வேண்டும் எனின், சித்தவிருத்தியுடன், அதில் பிரதிபலிக்கும் சிதாபாஸனும் கூட அவசியமானதாகும். ஆனால் பிரம்மத்தைக் குறித்த ஞானம் ஏற்பட வேண்டும் எனின், பிரம்மமானது, தானே ஒளிரக் கூடிய தன்மையுடன் இருப்பதால், அதைக் குறித்து இருந்த அஞ்ஞானம் அகன்றால் போதுமானதாகும். அது விளங்கும்படிக் காட்டுவதற்கு சிதாபாஸனின் அவசியம் தேவையற்றது. பானையைப் பார்ப்பதற்கு கண் மற்றும் விளக்கு என்னும் இரண்டுமே தேவையானதாகும். ஆனால் பானையில் மூடி வைத்துள்ள விளக்கைக் காண்பதற்கு பானையைத் திறந்தால் போதுமானது ஆகும். மற்றொரு விளக்கை எடுத்துக்கொண்டு வர வேண்டிய அவசியம் இல்லை.

**जडपदार्थाकाराकारितचित्तवृत्तेर्विशेषोऽस्ति ॥ १७७ ॥**

ஜட-பதார்த்த-ஆகார-காரித-சித்தவ்ருத்தே: விசேஷ: அஸ்தி ॥ 177 ॥

ஜடப் பொருட்களின் உருவத்தைப் பெற்றுள்ள சித்தவிருத்தியின் விஷயத்தில் வேறுபாடு உள்ளது. அடுத்த ஸூத்திரத்தில் இது விவரிக்கப்பட்டுள்ளது.

**तथाहि । अयं घट इति घटाकाराकारितचित्तवृत्तिरज्ञातं घटं विषयीकृत्य तद्गताज्ञाननिरसनपुरःसरं स्वगतचिदाभासेन जडं घटमपि भासयति ॥ १७८ ॥**

ததாஹி । 'அயம் கட'-இதி கடாகார-ஆகாரித-சித்தவ்ருத்தி: அஞ்ஞாதம் கடம் விஷயீக்ருத்ய தத்கத-அஞ்ஞான-நிரஸன-புரஸ்ஸரம்-ஸ்வகத சிதாபாஸேன ஜடம் கடமபி பாஸயதி ॥ 178 ॥

இது எப்படி எனின், 'இது பானை' என்று பானையின் உருவத்தைப் பெற்றுள்ள சித்த விருத்தியானது (இதுவரையிலும்) அறியாமலிருந்த பானையைத் தனக்கு விஷயமாகச் செய்து கொண்டு, அதைக் குறித்து இருந்த அஞ்ஞானத்தை அகலச் செய்வதின் மூலமாக, தன்னிடம் உள்ள சிதாபாஸத்தினால் (சைதன்னியத்தால்), ஜடமாக இருந்தாலும் அந்த பானையைப் புலப்படுத்துகிறது.

तदुक्तं—
'बुद्धितत्स्थचिदाभासौ द्वावपि व्याप्नुतो घटम् ।
तत्राज्ञानं धिया नश्येदाभासेन घटः स्फुरेत् ॥' इति ।
(पञ्चदशी ७.९१) ॥ १७९ ॥

தது க்தம்—
'புத்தி-தத்ஸ்த-சிதாபாஸௌ த்வாவபி வ்யாப்னுதோ கடம் ।
தத்ரா ஞானம் தியா நச்யேத் ஆபாஸேன கட: ஸ்புரேத்'
(ப. த. 7.91) இதி ॥

அது இவ்விதம் கூறப்பட்டுள்ளது. 'புத்தியும் மற்றும் அதிலுள்ள சிதாபாஸம் என்னும் இந்த இரண்டும் பானையுடன் தொடர்பு கொள்கின்றன. இவற்றுள் அறிவானது (பானையை மறைக்கும்) அஞ்ஞானத்தை அகற்றுகிறது. சைதன்னியமானது அப்பானையைப் புலப்படுத்துகிறது' (ப. த. 7.91).

यथा दीपप्रभामण्डलमन्धकारगतं घटपटादिकं विषयीकृत्य तद्गतान्धकारनिरसनपुरःसरं स्वप्रभया तदपि भासयतीति ॥ १८० ॥

யதா தீப ப்ரபாமண்டலம் அந்தகாரகதம் கடபடாதிகம் விஷயீக்ருத்ய தத்கத-அந்தகார-நிரஸன புரஸ்ஸரம் ஸ்வப்ரபயா ததபி பாஸயதி இதி ॥ 180 ॥

எவ்விதம் விளக்கின் ஒளியானது, இருளிலும் பானை அல்லது துணி போன்றவற்றை விஷயமாக

ஆக்கிக் கொண்டு, அவற்றை மறைத்துக் கொண்டுள்ள இருளை அகற்றித் தன்னுடைய ஒளியினால் அவற்றைப் புலப்படுத்துகிறதோ அவ்விதத்திலேயே இங்கும் கண்டு கொள்ளப்பட வேண்டும்.

### உணர்வதற்கான சாதனங்கள்

**एवंभूतस्वस्वरूपचैतन्यसाक्षात्कारपर्यन्तं श्रवणमनननिदिध्यासनसमाध्यनुष्ठान-स्यापेक्षितत्वात्तेऽपि प्रदर्श्यन्ते ॥ १८१ ॥**

ஏவம் பூதஸ்வரூப-சைதன்ய-ஸாக்ஷாத்கார-பர்யந்தம் ச்ரவண-மனன-நிதித்யாஸன-ஸமாதி அனுஷ்டானஸ்ய அபேக்ஷி தத்வாத் தே அபி ப்ரதர்ச்யந்தே ॥ 181 ॥

நம்முடைய ஸ்வரூபமாக உள்ள சைதன்னியத்தை அனுபவமாக உணரும் வரையிலும், சிரவணம், மனனம், நிதித்யாஸனம், ஸமாதி போன்றவை பழக்கப் படுத்திக் கொள்ளப்பட வேண்டும். எனவே அவை இப்பொழுது விவரிக்கப்படுகின்றன.

### சிரவணம்

**श्रवणं नाम षड्विधलिङ्गैरशेषवेदान्तानामद्वितीयवस्तुनि तात्पर्यावधारणम् ॥ १८२ ॥**

ச்ரவணம் நாம ஷட்வித-லிங்கை: அசேஷ: வேதாந்தானாம் அத்விதீய வஸ்துனி தாத்பர்ய அவதாரணம் ॥ 182 ॥

ஆறுவகையான லிங்கங்களின் [1] மூலம் (ஆறு வகையான குறிப்புக்களால்) எல்லா வேதாந்தங்களுக்கும் [2]

இரண்டற்ற வஸ்துவான பிரம்மமே அடிப்படையான கருத்தாகும் (தாத்பர்யமாகும்)[3] என்று நிச்சயிப்பது சிரவணம் எனப்படும்.

1. 'லீனம் அர்த்தம் கமயதி இதி லிங்க: ।', 'மறைந்துள்ள பொருளை வெளிப்படுத்துவதால் இதற்கு லிங்கம் என்பது பெயராகும்.' அடையாளம் என்பது பொருளாகும். இது அடுத்த ஸூத்திரங்களில் விவரிக்கப்பட்டுள்ளது.

2. வேதாந்தம் அல்லது உபநிஷத்துக்களின் வாக்கியங்களுக்கு.

3. 'தாத்பர்யம்' என்றால் அதையே முக்கியமாகக் கூறுவது என்பது பொருளாகும்.

சிரவணம் என்றால், உபநிஷதங்களின் வாக்கியங்களைச் செவிகளால் கேட்பது என்பது பொருள் அல்ல. அதை சரியாக இணைத்துப் பரிசீலித்து பொருளைக் கூறுவதுபோல உறுதிப்படுத்துவது ஆகும்.

**लिङ्गानि तूपक्रमोपसंहाराभ्यासापूर्वताफलार्थवादोपपत्त्याख्यानि ॥ १८३ ॥**

லிங்கானி து உபக்ரம-உபஸம்ஹார-அப்யாஸ ஆபூர்வதா-பல-அர்த்தவாத உபபத்தி ஆக்யானி ॥ 183 ॥

உபக்ரமம்—உபஸம்ஹாரம், அப்யாஸம், அபூர்வதா, பலம், அர்த்தவாதம், உபபத்தி என்பவை ஆறு லிங்கங்களின் பெயர்கள் ஆகும்.

உபக்ரமம்—உபஸம்ஹாரம் என்னும் இரண்டும் ஒரே லிங்கம் என்று கருதப்படுகிறது.

வேதாந்த வாக்கியத்தின் தாத்பரியத்தை (அடிப் படையான கருத்தை), உறுதி செய்யும் பொழுது இந்த ஆறு லிங்கங்களையும் பொருத்திப் பார்க்க வேண்டும்.

**तदुक्तं—**

**'उपक्रमोपसंहारावभ्यासोऽपूर्वताफलम् ।**
**अर्थवादोपपत्ती च लिङ्गं तात्पर्यनिर्णये' ॥ १८४ ॥**

ததுக்தம்—

உபக்ரமோபஸம்ஹாரா வப்யாஸோऽபூர்வதா பலம் ॥
அர்த்த வாதோபபத்தீ ச லிங்கம் தாத்பர்ய நிர்ணயே ॥ 184 ॥

'அடிப்படையான கருத்து இது என்று உறுதி செய்வதற்கு உபக்ரமம் (தொடக்கம்), உபஸம்ஹாரம் (முடிவு), அப்யாஸம் (மீண்டும் மீண்டும் வலியுறுத்து தல்), அபூர்வதா (புதியதைக் கூறுதல்), பலம் (நோக்கம்), அர்த்தவாதம் (சொல்ல வந்த கருத்தைப் புகழ்வது), உபபத்தி (பகுத்தறிவிற்கு ஏற்றதாக இருத்தல்) என்னும் ஆறு லிங்கங்கள் உள்ளன என்று கூறப்பட்டுள்ளது.

**प्रकरणप्रतिपाद्यस्यार्थस्य तदाद्यन्तयोरुपपादनमुपक्रमोप-संहारौ । यथा छान्दोग्ये षष्ठाध्याये प्रकरणप्रतिपाद्यस्या-द्वितीयवस्तुन 'एकमेवाद्वितीयम्' (६.२.१) इत्यादौ 'ऐतदा-त्म्यमिदं सर्वम्' (६.८.७) इत्यन्ते च प्रतिपादनम् ॥ १८५ ॥**

ப்ரகரண-ப்ரதிபாத்யஸ்ய அர்த்தஸ்ய ததாத்யந்தயோ: உபபாதனம் உபக்ரம-உபஸம்ஹாரௌ । யதா சாந்தோக்ய ஷட்டாத்யாயே ப்ரகரண-ப்ரதிபாத்யஸ்ய அத்விதீய வஸ்துன:

'ஏகமேவாத்விதீயம்' (6.2.1) இத்யாதௌ 'ஐததாத்ம்யமிதம் ஸர்வம் (6.8.7) இதி அந்தே ச ப்ரதிபாதனம் ॥ 185 ॥

சொல்ல முற்பட்டுள்ள ஒரு குறிப்பிட்ட பகுதியின் கருத்தை, அப்பகுதியின் தொடக்கத்திலும் முடிவிலும் கூறுவது உபக்ரமம், உபஸம்ஹாரம் என்று கூறப்படும் உதாரணம்: சாந்தோக்ய உபநிஷதத்தில் ஆறாம் அத்தியாயத்தில் ஒரு குறிப்பிட்ட பகுதியின் கருத்தாக உள்ள 'இரண்டற்ற பரம்பொருள்' என்பது அப்பகுதி யின் தொடக்கத்தில் 'ஒன்றே; அது இரண்டற்றது' என் றும் (6.2.1) இறுதியில், 'அதுவே அனைத்தின் ஆத்மா வாகவும் உள்ளது' (6.8.7) என்றும் கூறப்பட்டுள்ளது.

**प्रकरणप्रतिपाद्यस्य वस्तुनस्तन्मध्ये पौनःपुन्येन प्रतिपादनमभ्यासः । यथा तत्रैवाद्वितीयवस्तुनि मध्ये तत्त्वमसीति नवकृत्वः प्रतिपादनम् ॥ १८६ ॥**

ப்ரகரண-ப்ரதிபாத்யஸ்ய வஸ்துன-தன்மத்யே பௌன: புன்யேன ப்ரதிபாதனம் அப்யாஸ: । யதா தத்ர ஏவ அத்விதீய வஸ்துனி மத்யே 'தத்வமஸி' இதி நவக்ருத்வ: ப்ரதிபாதனம் ॥ 186 ॥

அப்யாஸம் என்பது ஒரு குறிப்பிட்ட பகுதியில் கூற வந்த கருத்தை, இடையிடையே திரும்பத் திரும்ப வலியுறுத்துவது ஆகும். உதாரணம்: அதே பகுதி யிலேயே 'நீயும் அதுவே' (தத் த்வம் அஸி) என்று இரண்டற்ற பரம்பொருளானது ஒன்பது தடவைகள் வலியுறுத்தப்பட்டுள்ளது.

அப்யாஸம் என்றால் மீண்டும் மீண்டும் வலி யுறுத்துவது ஆகும். இதனைச் சொற்களைப் பயன் படுத்தியும் செய்யலாம் அல்லது பொருளைப் பயன் படுத்தியும் செய்யலாம். 'தத்வமஸி' என்னும் வாக்கியத்தைப் பொறுத்தவரையில் சொல்லானது மீண்டும் மீண்டும் வலியுறுத்தப்பட்டுள்ளது.

**प्रकरणप्रतिपाद्यस्याद्वितीयवस्तुनः प्रमाणान्तराविषयीकरणमपूर्वता । यथा तत्रैवाद्वितीयवस्तुनो मानान्तराविषयीकरणम् ॥ १८७ ॥**

ப்ரகரண ப்ரதி பாத்யஸ்ய அத்விதீய-வஸ்து ன: ப்ரமாணாந்தர அவிஷயீ கரணம் ஆபூர்வதா । யதா தத்ர ஏவ அத்விதீய வஸ்துன: மானாந்தர அவிஷயீ கரணம் ॥ 187 ॥

அபூர்வதா என்பது குறிப்பிட்ட பகுதியில் கூற வந்த கருத்தானது, வேறு எந்த முறையிலும் தெரிந்து கொள்ள இயலாததாக இருப்பது ஆகும். உதாரணம்: (மேலே கூறப்பட்டுள்ள உபநிஷதப் பகுதியில் கூறப் பட்ட) இரண்டற்ற பரம்பொருள், உபநிஷதங்களைத் தவிர வேறு எவ்வகையாலும் தெரிந்து கொள்ள இய லாததாக இருப்பது ஆகும்.

மற்ற பிரமாணங்களால் தெரிந்து கொள்ள இய லாமல் உள்ள, மற்ற பகுதிகளில் இல்லாத விஷயமாக இருப்பின் அது அபூர்வதா எனப்படும். உபநிஷத்துக் களைத் தவிர மற்ற எதனாலும் நமக்குப் பரம் பொருளைக் குறித்த ஸ்வரூபமானது அறிவதற்கு இயலுவதில்லை.

**फलं तु प्रकरणप्रतिपाद्यस्यात्मज्ञानस्य तदनुष्ठानस्य वा तत्र तत्र श्रूयमाण प्रयोजनम् । यथा तत्र 'आचार्यवान्पुरुषो वेद तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्येऽथ सम्पत्स्ये' (६.१४.२) इत्यद्वितीयवस्तुज्ञानस्य तत्प्राप्तिः प्रयोजनम् श्रूयते ॥ १८८ ॥**

பலம் து ப்ரகரண-ப்ரதிபாத்யஸ்ய ஆத்மஞானஸ்ய ததநுஷ்டானஸ்ய வா தத்ர ச்ரூயமாணம் ப்ரயோஜனம் । யதா தத்ர 'ஆசார்யவான் புருஷோ வேத தஸ்ய தாவதேவ சிரம் யாவன்ன விமோக்ஷ்யே அதஸம்பத்ஸ்யே (6.14.2) இதி அத்விதீயவஸ்து-ஞானஸ்ய தத்ப்ராப்தி: ப்ரயோஜனம் ச்ரூயதே ॥ 188 ॥

*ஒரு குறிப்பிட்ட பகுதியில் ஆங்காங்கு விவரிக்கப் பட்டுள்ள ஆத்மஞானமோ அல்லது அதை அனுசரிக்கும் முறைகள்[1] போன்றவையோ பலம் அல்லது பிரயோஜனம் எனப்படுகின்றன. உதாரணம்: மேலே குறிப்பிடப்பட்டுள்ள அதே சாந்தோக்ய உபநிஷதத்தின் பகுதியிலே 'ஆசாரியரைப் பெற்ற ஒருவன்[2] பிரம்மத்தை அறிகிறான். உடலிலிருந்து விடுபடும் வரையில் அவன் பொறுத்திருக்க வேண்டும்.[3] அதன்பின் பிரம்மத்துடன் இணைந்து விடுகிறான், (6.14.2) என்று இம்முறையில் இரண்டற்ற பிரம்மத்தை உணர்ந்தவன், அதை அடைவதைப் பிரயோஜனமாகக் கூறப்பட்டுள்ளது.*

*1. சிரவணம் போன்றவற்றை அனுசரிப்பதாக இருக்கலாம் அல்லது காலப்போக்கில் ஆத்மஞானத்திற்கு அழைத்துச் செல்லும் வழிபாட்டு முறைகளாகவும் இருக்கலாம்.*

2. ஆச்சாரியரிடமிருந்து பெற்றால் மட்டுமே கல்வி யானது முழுமையான பலனை அளிக்கும்.

3. முன்பு செய்த வினைகளால் ஏற்பட்டுள்ள உடல் இருக்கும் வரையிலும் பொறுத்துக் கொள்ள வேண்டும். உடல் அழிந்த பிறகு நிச்சயமாக முக்தியானது கிடைக்கும்.

**प्रकरणप्रतिपाद्यस्य तत्र तत्र प्रशम्सनमर्थवादः । यथा तत्रैव 'उत तमादेशमप्राक्ष्यो येनाश्रुतं श्रुतं भवत्यमतं मतमविज्ञातं विज्ञातम्' (६.१.३) इत्यद्वितीयवस्तुप्रशम्सनम् ॥**

ப்ரகரண ப்ரதி பாத்யஸ்ய தத்ர தத்ர ப்ரசம்ஸனம் அர்த்தவாத: யதா தத்ரைவ 'உத தம் ஆதேசம் அப்ராக்ஷ்யேன ஆஸ்ருதம் ச்ருதம் பவதி, அமதம் மதம் அவிஜ்ஞாதம் விஜ்ஞாதம்' (6.1.3) இதி அத்விதீய வஸ்து ப்ரசம்ஸனம் ॥ 189 ॥

ஒரு குறிப்பிட்ட பகுதியில் கூறமுற்பட்ட கருத்தை பல இடங்களில் புகழ்ந்து, உயர்வாகக் கூறுவது அர்த்த வாதம் ஆகும். உதாரணம் மேலே கூறப்பட்டுள்ள அதே சாந்தோக்ய உபநிஷதத்தில் 'எதனால் இதுவரை கேட்கப்படாமல் இருந்தது கேட்கப்பட்டதாக ஆகுமோ இதுவரையில் சிந்திக்கப்படாமல் இருந்தது சிந்திக்கப் பட்டதாகுமோ அறியப்படாமல் இருந்தது அறியப் பட்டதாகுமோ அந்த உபதேசத்தைச் செய்யும் படிக் கேட்டாயா?' (6.1.3) போன்ற சொற்கள் இரண்டற்ற பரம்பொருளைப் புகழ்ந்து, உயர்த்திப் பேசுகின்றன.

அர்த்தவாதம் என்றால் புகழ்ந்து கூறுவது ஆகும். வேதங்களில் அர்த்தவாதங்களைப் பல இடங்களில் காண்கின்றோம். அனுசரிக்கத்தக்க அம்சங்களைப்

புகழ்வது அல்லது விலக்கத்தக்க அம்சங்களை இகழ்வது ஆகும். அதன்மூலம் வேத சாத்திரங்களில் நம்பிக்கை உள்ள ஒருவன் விலக்கத்தக்க அம்சங்களை விலக்கி, பின்பற்றத்தக்கவற்றை ஏற்றுக்கொள்வது ஆகும்.

**प्रकरणप्रतिपाद्यार्थसाधने तत्र तत्र श्रुयमाणा युक्तिरुपपत्तिः । यथा तत्र 'यथा सौम्यैकेन मृत्पिण्डेन सर्वं मृन्मयं विज्ञातं स्याद्वाचारम्भणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम्' (६.१.४) इत्यादावद्वितीयवस्तुसाधने विकारस्य वाचारम्भणमात्रत्वे युक्तिः श्रूयते ॥ १९० ॥**

ப்ரகரண-ப்ரதிபாத்ய-அர்த்தஸாதனே தத்ர தத்ர ச்ரூயமாணா யுக்தி: உபபத்தி யதா தத்ர, 'யதா ஸோம்ய, ஏகேன ம்ருத் பிண்டேன ஸர்வம் ம்ருன்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத், வாசாரம்பணம் விகாரோ நாமதேயம், ம்ருத்திகா இத்யேவ ஸத்யம்' (6.1.4) இத்யாதௌ அத்விதீய-வஸ்து-ஸாதனே விகாரஸ்ய வாசாரம்பண மாத்ரத்வே யுக்தி: ச்ரூயதே ॥ 190 ॥

ஒரு குறிப்பிட்ட பகுதியில் கூற வந்த கருத்திற்கு ஆதாரமாகப் பல இடங்களில் அளிக்கப்படும் யுக்திகள் உபபத்தி எனப்படும் (அல்லது தர்க்கம்). உதாரணம்— மேலே குறிப்பிடப்பட்டுள்ள அதே சாந்தோக்ய உபநிஷதத்தில் 'அன்பிற்கு உரியவனே, எப்படி களிமண்ணைத் தெரிந்து கொள்வதன்மூலம் களிமண்ணால் செய்யப்பட்டுள்ள அனைத்தும் தெரிந்துவிடுமோ எந்த ஒரு மாறுதலுமே பேச்சின் முயற்சியாக, பெயராக மட்டுமே இருப்பதால், களிமண் ஒன்று மட்டுமே

*அதில் உண்மையானதாக இருப்பதால்' (6.1.4) என்னும் சொற்கள் எல்லா மாறுதல்களுமே வெறும் பெயர்கள் மட்டுமே என்னும் வாதத்தின்மூலம் இரண்டற்ற பரம் பொருளை நிலைநாட்டுவதற்காகக் கூறப்பட்டுள்ளது.*

*உதாரணத்துடன் கூடிய தர்க்கம்தான் உபபத்தி யாகும். மண்ணானது காரணப் பொருள் ஆகும். பானை, ஓடு போன்றவையெல்லாம் அதன் விளைவு ஆகும். பானை, ஓடு போன்ற அனைத்துமே உண்மை யில் மண்தான். அவற்றில் பெயர் மற்றும் வடிவமானது தற்காலிகமானதுதான். நிலையற்ற, கார்ய வஸ்துக் களில் நாம் உண்மையில் அறிய வேண்டியது காரணப் பொருளை மட்டுமே. அதைப் போன்றே இவ்வுலகத் தில் காணப்படும் எல்லாப் பொருட்களுமே மூலத்தில் பிரம்ம வஸ்துவே ஆகும். அது ஒன்றுதான் உண்மை யானது ஆகும். பெயருடனும், வடிவத்துடனும் காணப் படும் இந்த உலகமானது பொய் ஆகும் (தோற்றமே). இதுதான் சாந்தோக்ய உபநிஷதத்திலுள்ள வாக்கியத் தின் சாரமாகும்.*

## மனனமும், நிதித்யாஸனமும்

**मननं तु श्रुतस्याद्वितीयवस्तुनो वेदान्तानुगुणयुक्तिभिरनवरतमनुचिन्तनम् ॥ १९१ ॥**

மனனம் து ச்ருதஸ்ய அத்விதீய-வஸ்து ந: வேதாந்த அனுகுண யுக்திபி: அனவரதம் அனுசிந்தனம் ॥ 191 ॥

*மனனம் என்பது ஆச்சாரியரிடமிருந்து மற்றும் வேதங்களிலிருந்து கேட்கப்பட்ட இரண்டற்ற*

பிரம்மனைக் குறித்து, வேதாந்தம் ஏற்றுக் கொள்ளும் யுக்திகளின் மூலமாக எப்பொழுதும் எண்ணிப் பார்ப்பது ஆகும்.

மனனம் என்றால் சிந்திப்பது ஆலோசிப்பது என்பது பொருளாகும். ஆனால் இங்கு மனனம் என்னும் சொல்லானது பரிபாஷையாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதில் கவனிக்கத்தக்க அம்சங்கள் மூன்று உள்ளன.

1. வேதத்தின் மூலமும், ஆசாரியரின் மூலமும் உபதேசிக்கப்பட்ட இரண்டற்ற பிரம்மவஸ்துதான் இம்மனனத்திற்கு விஷயமாக இருப்பது ஆகும்.

2. ஆறுவகையான லிங்கங்களால் நிர்ணயம் செய்யப்பட்ட இது வேதங்களுக்கு முரண் ஆகாமல் உள்ள, வேதங்களுக்குப் பொருத்தமானதாக உள்ள தர்க்கத்தால் ஊட்டம் அளிக்கப்பட வேண்டும். வேதங்களின் மூலமே அறியப்படத்தக்க விஷயங்களில் சாதகன் புத்தியைச் சார்ந்து இருக்கும் தர்க்கங்களின் மூலம் உறுதி செய்துகொள்ள வியலாது என்பதை 'தர்க்க ப்ரதிஷ்டானாத்வா' (பிர. ஸூ. 2.1.11) என்னும் இந்த பிரம்ம ஸூத்திரத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. மனுவும் 'ஆர்ஷம் தர்மோபதேசம் ச வேதசாஸ்த்ர விரோதினா । யஸ்தர்கேணானுஸந்தத்தே ஸதர்மம் வேத நேதர: ॥', 'ரிஷிகளால் உபதேசிக்கப்பட்ட தர்மத்தை வேத சாத்திரங்களுக்கு முரண்படாமல் உள்ள தர்க்கத்தினால் அறிந்துகொண்டு, யார் ஆராய்ந்து அறிகிறானோ அவன்தான் தர்மத்தை அறிந்தவன்

ஆவான். வேறு ஒருவன் அல்ல' (ம. ஸ்ம்ரு. 12.106) என்று கூறியுள்ளார். இங்கு 'தர்மம்' என்பது பிரம்மனையும் குறிக்கிறது.

3. சிந்திப்பதை எப்பொழுதும் இடைவிடாமல் செய்ய வேண்டும். தக்ஷஸ்ம்ருதியானது, ஒரு சன்னியாஸியின் அன்றாடச் செயல்களைக் குறித்துக் கூறியிருப்பதை இங்கு நினைவு கூர்வது தக்கதாக இருக்கும்.

'ஆஸுப்தே ராம்ருதே: காலம் நயேத்வேதாந்த சிந்தனா: । தத்யான்னாவஸரம் கிஞ்சித் காமாதீனாம் மனாகவி ॥', 'உறக்கம் வரும் வரையிலும், மரணம் அடையும்வரையிலும் வேதாந்த சிந்தனையில் காலத்தைப் போக்க வேண்டும். காமம் போன்றவற்றிற்குச் சிறிதளவு கூட வாய்ப்பு அளித்தல் கூடாது.'

**विजातीयदेहादिप्रत्ययरहिताद्वितीयवस्तुसजातीयप्रत्यय-प्रवाहो निदिध्यासनम् ॥ १९२ ॥**

விஜாதீய தேஹாதிப்ரத்யயரஹித அத்விதீயவஸ்து ஸஜாதீய ப்ரத்யய-ப்ரவாஹ: நிதித்யாஸனம் ॥ 192 ॥

மெய்ப் பொருளிலிருந்து வேறானதாக உள்ள உடல் போன்றவற்றைக் குறித்த எண்ணங்கள் இல்லாமல் அந்த இரண்டற்ற பரம்பொருளைக் குறித்த ஒருமித்த எண்ணத்தின் தொடர்ந்த ஓட்டமானது நிதித்யாஸனம் என்று அழைக்கப்படுகிறது.

நிதித்யாஸனம் என்றால் தியானமாகும். பதஞ்சலி முனிவர் தியானத்தை 'தத்ர ப்ரத்யயைகதானதா தியானம் ।', 'நாபிச்சக்கரம் போன்ற ஸ்தானங்களில்,

தியானத்தின் வஸ்துவை நோக்கி இடையீடற்றுப் பாய்ந்து செல்வதுதான் தியானமாகும்' (யோ. ஸூ. 3.2) என்று விவரித்து உள்ளார். மேன்மேலும் எழும் எண்ண அலைகள், அப்படியே அடங்கி அகச்சம நிலையடைந் தால் மட்டுமே அது ஒருமுனைப்பாட்டை அடையும். நீரொழுக்கைப் போல பாயும்பொழுது (ஒரே நிலை யான) அது தியானம் எனப்படுகிறது. இந்தத் தியான மானது நிதித்யாஸனமாக ஆக வேண்டும் எனின் மனம், உடல், புலன் விஷயப் பொருட்கள் போன்ற பிரம்மத் திலிருந்து வேறுபட்டுள்ள பொருள்களை விடுத்து கேவல பரபிரம்மனின் உருவைப் பெற்று இடைவிடா மல் பாய்ந்து கொண்டிருக்க வேண்டும்.

## ஸவிகல்பக மற்றும் நிர்விகல்பக ஸமாதிகள்

**समाधिर्द्विविधः सविकल्पको निर्विकल्पकश्चेति ॥ १९३ ॥**

ஸமாதி: த்விவித: ஸவிகல்பக: நிர்விகல்பகச்ச இதி ॥ 193 ॥

ஸமாதி என்பது ஸவிகல்பக ஸமாதி மற்றும் நிர்விகல்பக ஸமாதி என்று இருவகைப்படும்.

பதஞ்சலி முனிவர் ஸமாதியைக் குறித்து வருமாறு விவரித்துள்ளார்.

'ததேவ அர்த்தமாத்ர நிர்பாஸம் ஸ்வரூப சூன்யமிவ ஸமாதி ।'

தியானிக்கப்படும் பொருளின் வடிவம் அல்லது புறப்பகுதியானது விடப்படும் பொழுது இந்த நிலையானது ஏற்படுகிறது. அதாவது எந்த வடிவமும் இன்றி கருத்தை மட்டும் உணரும் நிலையை அடைந்து

விட்டால் தியானத்தின் அந்த நிலையை அடைந்துவிட்டால் தியானத்தின் அந்த நிலையானது ஸமாதி எனப்படும். தியானத்தின் பரிபக்குவமான நிலைதான் ஸமாதி ஆகும். தியானத்தில் தன்னைப் பற்றிய, தியானிக்கப்படும் பொருள் பற்றிய மற்றும் தியானம் செய்யும் முறை பற்றிய கவனமானது இருக்கும், ஆனால் ஸமாதியில் தன்னைப் பற்றியும், தியானம் செய்யும் முறை பற்றிய அறிவானதும் அகன்று தியானிக்கப்படும் பொருள் ஒன்றுதான் மனத்தில் இருப்பதைப் போன்ற அனுபவமானது ஏற்படும்.

**तत्र सविकल्पको नाम ज्ञातृज्ञानादिविकल्पलयानपेक्षयाद्वितीयवस्तुनि तदाकाराकारितायाश्चित्तवृत्तेरवस्थानम् ॥**

தத்ர ஸவிகல்பகோ நாம ஜ்ஞாத்ரு-ஜ்ஞாநாதி விகல்பலய-அனபேக்ஷயா அத்விதீய-வஸ்துனி ததாகார-ஆகாரிதாயா: சித்தவ்ருத்தே: அவஸ்தானம் ॥ 194 ॥

ஸவிகல்பக ஸமாதி என்றால், அறிபவன், அறிவு என்னும் வேறுபாடுகள் மறையாமலே, இரண்டற்ற பிரம்மத்தின் வடிவை அடைந்த மனத்தின் ஒருமைப் பாடு ஆகும்.

விகல்பம் என்றால் பகுத்துக் காணும் கற்பனை யாகும். ஸவிகல்பக ஸமாதியில், சித்தமானது அறிபவனான தன்னுடைய மற்றும் அறிவினுடைய எண்ணங் களுடனேயே இரண்டற்ற பிரம்ம வஸ்துவின்மீது நிலைத்து நிற்கும். பிரம்ம வஸ்துதான் முதன்மையான தாகும். அறிந்து கொள்ளும் அறிவானது குறைந்து

இருக்கும், அதனால் தற்காலிகமாக அந்த இரண்டும் மறக்கப்பட்டதைப் போல இருக்கும். ஆனால் உண்மை யிலேயே ஒடுங்கியிருப்பதில்லை. இந்த ஸமாதியை ஸம்ப்ரஜ்ஞாத ஸமாதி என்றும் அழைப்பது உண்டு.

**तदा मृन्मयगजादिभानेऽपि मृद्भानवद्द्वैतभानेऽप्यद्वैतं वस्तु भासते ॥ १९५ ॥**

ததா ம்ருன்மய-கஜாதி-பானே அபி ம்ருத்பானவத் த்வைத பானே அபி அத்வைதம் வஸ்து பாஸதே ॥ 195 ॥

அப்பொழுது மண்ணினால் செய்யப்பட்ட யானை போன்றவை (பொம்மை யானை) தோன்றிக் கொண் டிருந்தாலும், அத்துடன் மண்ணும் தோன்றிக் கொண் டிருப்பதைப் போல, பன்மையான உலகமானது (த்வைத பிரபஞ்சம்) தோன்றிக் கொண்டிருந்தாலும் இரண்டற்ற அத்வைத பிரம்ம வஸ்துவும் உணரப் படுகிறது.

மண்ணினால் செய்யப்பட்டுள்ள யானையைக் காணும்பொழுது, அறிவுடைய எவருமே அதையே உண்மையான யானை என்று எண்ண மாட்டார்கள். யானை என்னும் பெயர் மற்றும் யானை என்னும் பிராணியின் வடிவமானது அதற்கு இருந்தாலும், இந்தப் பெயரும், வடிவமும் வெறும் பேச்சளவு மட் டுமே ஆகும். அது உண்மையிலேயே மண் என்பதை உணர்ந்து கொள்ள இயலுகிறது. அதைப் போன்றே, பெயரையும், வடிவத்தையும், பெற்றுள்ள உலகமாக இருப்பினும், அறிபவன், அறிவு, அறியப்பட்ட வஸ்து

என்னும் மூன்றும் காணப்பட்டாலும், அத்துடனேயே பிரம்ம வஸ்துவின் அனுபவமும் கூட ஏற்பட்டுக் கொண்டிருக்கும்.

**तदुक्तं—**

**'दृशिस्वरूपं गगनोपमं परं**

**सकृद्विभातं त्वजमेकमक्षरम् ।**

**अलेपकं सर्वगतं यदद्वयं**

**तदेव चाहं सततं विमुक्तमोम् ॥' इति (उपदेशसाहस्री १०.१) ॥ १९६ ॥**

தது‌க்தம்—

த்ருசிஸ்வரூபம் ககனோபமம் பரம்

ஸக்ருத்வி பாதம் த்வஜமேக மக்ஷரம் ।

அலேபகம் ஸர்வகதம் யதத்வயம்

ததேவ சாஹம் ஸததம் விமுக்த ஓம் ॥ 196 ॥ (உ. ஸா. 10.1)

உபதேஸ ஸாஹஸ்ரீயில் எது, 'ஞானஸ்வரூபத்தை உடையதோ,[1] ஆகாயத்தைப் போன்று வடிவில்லாததோ,[2] எல்லாவற்றிற்கும் மேலானதோ, எப்பொழுதும் ஒளிர்ந்து கொண்டு உள்ளதோ,[3] பிறப்பற்றதோ, இரண்டில்லாமல் ஒன்றாகவே உள்ளதோ,[4] அழிவற்றதோ,[5] எத்துடனும் சேர்க்கையற்றதோ,[6] எங்கும் நிறைந்து உள்ளதோ, இரண்டற்றதோ, எப்பொழுதும் சுதந்திரமாக உள்ளதோ[7] அதுவே நான். ஓம்'[8] என்று கூறப்பட்டுள்ளது (10.1)

1. அது த்ருக் ஸ்வரூபமே தவிர (பார்க்கும்) த்ருச்யஸ்வ ரூபம் அன்று (பார்த்து அறியத்தக்கது அல்ல) பார்ப்பவன் ஆத்மா, எனவே அவன் ஞான ஸ்வரூபன் ஆவான்.

2. குணமற்றவனும், உருவமற்றவனும், எங்கும் நிறைந்துள்ளவனுமான பரபிரம்ம வஸ்துவிற்கு ஆகாயம் ஒன்றை மட்டும்தான் பொதுவாக உவமையாகக் கூற இயலும்.

3. எப்பொழுதுமே தெளிவுடன் ஒளிர்ந்து கொண்டுள்ள பிரம்மஞானமானது கொஞ்சம் கொஞ்சமாக ஏற்படாது. அஞ்ஞானமானது அகன்றவுடன் அப்பொழுதே ஏற்படு கிறது. மேகம் கலைந்தபிறகு சூரியன் ஒளிர்வதைப் போலத் தென்படும்.

4. தனக்கு இரண்டாவது இல்லாத.

5. பிறப்பு இல்லை என்பதால் அழிவும் இல்லை.

6. கர்மங்கள் அல்லது புண்ணிய பாவங்களின் தொடர்பு இல்லாத.

7. பிரம்மத்திற்கு என்றுமே சம்ஸார பந்தம் இல்லை. நான் பிரம்மனாகவே இருப்பதால் எனக்கும் என்றுமே ஸம்ஸார பந்தம் இருக்கவில்லை. பந்தம் கூட தோற்றமே.

8. ஓம்காரமானது, பரபிரம்மனின் அடையாளம் என் பதையும் பரபிரம்மனின் வழிபாட்டிற்கு அது உறுதுணை யாக உள்ளது என்பதைக் குறிப்பிடுவதற்காகவும் பயன் படுத்தப்பட்டுள்ளது.

**निर्विकल्पकस्तु ज्ञातृज्ञानादिविकल्पलयापेक्षयाद्वितीय-वस्तुनि तदाकाराकारितायाश्चित्तवृत्तेरतितरामेकीभावेना-वस्थानम् ॥ १९७ ॥**

நிர்விகல்ப கஸ்து ஜ்ஞாத்ரு-ஞானாதி-விகல்பலய அபேக்ஷயா அத்விதீய வஸ்துனி ததாகார-ஆகாரிதாயா-சித்தவ்ருத்தே: அதிதராம் ஏகீபாவேன அவஸ்தானம் ॥ 197 ॥

*நிர்விகல்பக ஸமாதி என்பது அறிபவன், அறிவு போன்ற வேறுபாடுகள் அகன்று இரண்டாவதற்ற பிரம்ம வடிவமாகவே ஆகி அத்துடன் ஒன்றி, ஒடுங்கியுள்ள மனநிலைதான் ஆகும்.*

*இதை அஸம்ப்ரஜ்ஞாத ஸமாதி என்றும் அழைக்கின்றனர். இதில் அறிபவன் போன்ற வேறுபாடுகள் அனைத்தும் கரைந்து போயிருக்கும். பிரம்மவஸ்து ஒன்றுதான் அனுபவத்தில் இருக்கும்.*

**तदा तु जलाकाराकारितलवणानवभासेन जलमात्रा-वभासवदद्वितीयवस्त्वाकारा-कारितचित्तवृत्त्यनवभासेनाद्विती-यवस्तुमात्रमवभासते ॥ १९८ ॥**

ததா து ஜலாகார-காரித-லவண-ஆனவ பாஸேன ஜல மாத்ர அவபாஸவத் அத்விதீய வஸ்து-ஆகார-ஆகாரித-சித்த-வ்ருத்தி-அனவ பாஸேன அத் விதீய வஸ்து மாத்ரம் அவபாஸதே ॥ 198 ॥

*அப்பொழுது எப்படி (தண்ணீரில் கரைந்து) தண்ணீரின் வடிவத்தைப் பெற்ற உப்பானது காணப் படுவதில்லையோ தண்ணீர் மட்டுமே காணப்படுகிறதோ, அதைப்போல இரண்டற்ற பிரம்மவஸ்துவின் (மெய்ப்பொருளின்) வடிவத்தை அடைந்த மனத்தின் வடிவமானது (விருத்தியானது) காணப்படுவது*

இல்லை. இரண்டற்ற பரபிரம்மம் மட்டுமே உணரப் படுகிறது.

நிர்விகல்ப ஸமாதியில் பிரம்மதரிசனம் ஆகும் வரையிலும் உடனிருந்த சித்த விருத்தியானது தானே மறைந்து, பிரம்மம் மட்டுமே எஞ்சி நிற்கிறது.

**ततश्चास्य सुषुप्तेश्चाभेदशङ्का न भवति । उभयत्र वृत्त्यभाने समानेऽपि तत्सद्भावासद्भावमात्रेणानयोर्भेदोपपत्तेः ॥ १९९ ॥**

ததச்ச அஸ்ய ஸுஷுப்தேச்ச அபேதசங்கா ந பவதி । உபயத்ர வ்ருத்தி அபானே ஸமானே அபி தத்ஸத்பாவ அஸத்பாவ மாத்ரேண அனயோ: பேத உபபத்தே ॥ 199 ॥

எனவே அயர்ந்த உறக்க நிலையும், ஸமாதியும் ஒன்றுதானா என்னும் சந்தேகத்திற்கு இடமில்லை. இந்த இரு நிலைகளிலுமே மனத்தின் விருத்தி தென்படு வது இல்லை என்பது பொதுவானதாக இருப்பினும், நிர்விகல்ப ஸமாதியில் மனோ விருத்தியானது உள்ளது. தூக்கத்தில் இல்லை என்பதால் இரண்டும் ஒன்றாகாது.

அயர்ந்த உறக்க நிலையிலும் அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள் என்னும் பகுப்புக்கள் இருப்ப தில்லை. எண்ணங்கள் இருப்பதில்லை. எனவே அதற்கும் நிர்விகல்ப ஸமாதிக்கும் உள்ள வேறுபாடு என்ன? அதுதான் இங்கு விவரிக்கப்பட்டுள்ளது.

நிர்விகல்ப ஸமாதியில் சித்தவிருத்தியானது ஏற் படாமல் இருப்பதற்கு அது பிரம்மனின் வடிவத்தைப் பெற்றிருப்பதே காரணமாகும். உப்பு, நீரில் கரைந்து இருப்பதால் தென்படாமல் இருப்பினும் இருக்கத்தான்

செய்கிறது அல்லவா? ஆனால், அயர்ந்த உறக்க நிலையில் சித்த விருத்தியானது ஏற்படாமல் இருப்பதற்கு அது இல்லாமல் இருப்பதுதான் காரணமாகும். கிரகிக்கத் தக்க எந்தப் பொருளுமே அந்த நிலையில் இல்லாமலிருப்பதால் மனமானது தன்னுடைய காரணமான அஞ்ஞானத்தில் தற்காலிகமாக ஒடுங்கியிருக்கிறது.

பதஞ்ஜலி முனிவர் தன்னுடைய யோக ஸூத்திரத்தில் (1.10) அயர்ந்த உறக்க நிலையிலும் தமோ குணத்தைச் சார்ந்துள்ள எண்ணங்கள் காணப்படும் என்று கூறியிருப்பதை இங்கு கவனத்தில் கொண்டு, வேதாந்தக் கருத்துடன் ஒப்பிட்டுக் காணவியலும்.

## அஷ்டாங்க யோகம்

**अस्याङ्गानि यमनियमासनप्राणायामप्रत्याहारधारणा-ध्यानसमाधयः ॥ २०० ॥**

*அஸ்ய அங்காநி யம-நியம-ஆஸன-ப்ராணாயாம ப்ரத்யாஹாார-தாரணா-த்யான-ஸமாதய: ॥ 200 ॥*

இதற்குப்[1] படிகளாக இருப்பவை, யமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்தியாஹாரம், தாரணம், தியானம், ஸமாதி என்பவையாகும்.

1. நிர்விகல்ப ஸமாதிக்கு அழைத்துச் செல்லத் தக்கவை யோகஸூத்திரங்கள் 2.29 பார்க்கவும்.

**तत्र 'अहिम्सासत्यास्तेयब्रह्मचर्यापरिग्रहा यमाः' (पत. योग. २.३०) ॥ २०१ ॥**

தத்ர 'அஹிம்ஸா-ஸத்ய-அஸ்தேய-ப்ரஹ்மசர்ய-அபரிக்ரஹாயமா' (யோ. ஸூ. 2.30) ॥ 201 ॥

*அவற்றில் அஹிம்சை (கொல்லாமை), சத்தியம் (வாய்மை), அஸ்தேயம் (பிறர் பொருளைத் திருடாமலிருத்தல்), ப்ரஹ்மசர்யம் (புலனடக்கம்), அபரிக்ரஹம் (பிறரிடமிருந்து பொருளை எதிர்பாராமல் இருத்தல்) என்பது யமமாகும். அதாவது பொதுவான கட்டுப்பாடுகள் ஆகும். யோகஸூத்திரம் 2.30-ஐப் பார்க்கவும்.*

ஹிம்சை போன்ற செய்யத்தகாத செயல்களைச் செய்யாதவாறு யோகியைக் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருப்பதால், அவற்றை அகற்றுவதால் இவை யமம் என்று அழைக்கப்படுகின்றன.

செய்யும் செயலாலும், மனத்தாலும், பேச்சாலும், யாருக்கும் எப்பொழுதும் துயரத்தை ஏற்படுத்தாமலிருப்பது அகிம்சையாகும். தானாக ஊகித்த மற்றும் ஆகமம் என்னும் பிரமாணங்களிலிருந்து அறிந்து கொண்டதை மற்றவர்களுக்குக் கூறும்பொழுது மனமும், பேச்சும் வேறுபடாமல் இருப்பதுதான் ஸத்தியமாகும். தனக்கு உரியதற்ற பொருட்களை எடுத்துக் கொள்ளுதல், சாத்திரம் ஏற்காத ஒரு பொருளை, சாத்திரம் விதிக்காத முறையில் ஏற்றுக் கொள்வது இது ஸ்தேயம் அல்லது கள்ளத்தனம் ஆகும். அதைச் செய்யாமல் இருத்தல் அஸ்தேயமாகும். செயலினாலும், பேச்சினாலும், மனத்தினாலும் அனைவரின் விஷயத்திலும் சேர்க்கையை விடுவது பிரம்மச்சரியமாகும். ஸமாதி நிலையை அடைவதற்கு உறுதுணையாக

இல்லாத பொருட்களை ஏற்றுக் கொள்ளாமல் இருப்பது அபரிக்ரஹம் ஆகும்.

**'शौचसन्तोषतपःस्वाध्यायेश्वरप्रणिधानानि नियमाः' (पत. योग. २.३२) ॥ २०२ ॥**

'ஶௌச-ஸந்தோஷ-தப-ஸ்வாத்யாய-ஈசுவரப்ரணி-தானானி நியமா:' (யோ. ஸூ. 2.32) ॥ 202 ॥

*நியமமாவது ஶௌசம் (தூய்மை), சந்தோஷம் (மனநிறைவு), தவம், ஸ்வாத்யாயம் (வேதம் ஓதுதல்), ஈசுவரப்ரணிதானம் (இறைவனைத் தியானித்தல்) என்பவையாகும்.*

*யோகஸூத்திரம் 2.32-ஐக் காணவும். பிறவி ஏற்படுவதற்குக் காரணங்களாக உள்ள, பயனை எதிர்பார்த்துச் செய்யும் செயல்களிலிருந்து விடுவித்து, மோக்ஷத்திற்குக் காரணமாக உள்ள பயனை எதிர்பாராமல் செய்யும் சரியான முறையில் செல்லவைப்பதால் அல்லது ஊக்கப்படுத்துவதால் இது நியமம் என்று அழைக்கப்படுகிறது.*

*நீராடுதல் போன்றவற்றால் உடலையும், தூய்மையான எண்ணங்களால் மனத்தையும் தூய்மைப்படுத்துவதுதான் ஶௌசம் ஆகும். தானாகக் கிடைத்தவற்றில் நிறைவினை அடைவது ஸந்தோஷம் ஆகும். தட்ப வெப்ப நிலை போன்றவற்றைப் பொறுத்துக் கொள்ளுதல், உபவாஸம் மேற்கொள்ளுதல் போன்றவை தவமாகும். கீதையில் கூறப்பட்டுள்ள (17.14,16) மூன்றுவிதமான தவங்களையும் மேற்கொள்ளலாம்.*

ஓம்கார தியானம், வேத அத்யயனம் போன்றவையே ஸ்வாத்யாயம் ஆகும். கடவுளைக் குறித்த புற பூஜை மற்றும் மானஸீக பூஜை போன்றவை ஈசுவரப்ரணி தானமாகும்.

**करचरणादिसंस्थानविशेषलक्षणानि पद्मस्वस्तिकादीन्या-सनानि ।। २०३ ।।**

கரசரணாதி-ஸம்ஸ்தானவிசேஷ-லக்ஷணானி-பத்ம ஸ்வஸ்திக-ஆதீனி ஆஸனானி ॥ 203 ॥

கைகள், கால்கள் போன்ற உறுப்புக்களைக் குறிப் பிட்ட முறையில் வைத்துக் கொள்ளும் பத்மாஸனம், ஸ்வஸ்திகாஸனம் போன்றவை ஆஸனங்களாகும்.

பதஞ்சலி முனிவர், 'ஸ்திரம்ஸுகம் ஆஸனம்' (யோ. ஸூ. 2.46) என்று இவ்வளவுதான் கூறி யுள்ளார். எந்த ஒரு குறிப்பிட்ட நிலையில் உடலை இருத்தி, உறுதியாக நிலைத்து, சுகமாக வெகுநேரம் பிரம்மனைக் குறித்து சிந்திக்க இயலுமோ அதுவே ஆஸனமாகும். தியானத்திற்கு உறுதுணையாக உள்ள ஆஸனங்களை இங்கு கிரகித்துக் கொள்ள வேண்டும். பத்மாஸனம், ஸ்வஸ்திகாஸனம் என்னும் இந்த ஆஸனங்களைத் தவிர பத்ராஸனம், வீராஸனம் போன்றவற்றையும் பழக்கப்படுத்திக் கொள்ளலாம்.

**रेचकपूरककुम्भकलक्षणाः प्राणनिग्रहोपायाः प्राणायामाः।।**

ரேசக-பூரக-கும்பக-லக்ஷணா: ப்ராணநிக்ரஹ: உபாயா: ப்ராணாயாமா ॥ 204 ॥

*பிராணாயாமம் என்பது ரேசகம்,[1] பூரகம்,[2] கும்பகம்[3] என்னும் லட்சணங்களைக் கொண்ட பிராண சக்தியை அடக்கி ஆளும் வழிமுறைகளாகும்.*

1. *மூச்சை வெளியே விடுதல்.*
2. *மூச்சை உள்ளிழுத்துக் கொள்ளுதல்.*
3. *மூச்சை நிறுத்துதல்.*

*மனக்குழப்பம்-அமைதி போன்றவற்றிற்கும், சீரற்ற-சீரான மூச்சு ஓட்டத்திற்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது என்பது நாம் அறிந்த விஷயமாகவே உள்ளது. மூச்சை அடக்கி ஆள்வதின் மூலம் மனத்தினைக் கட்டுப்படுத்த வியலும் என்பது பிராணாயாமத்தின் அடிப்படையான தத்துவம் ஆகும். மூச்சை உள்ளிழுப்பது, மூச்சை நிறுத்துவது மற்றும் மூச்சை வெளியேற்றுவது 16.64.32 என்னும் விகிதத்தில் இருக்க வேண்டும் (காலப்பிரமாணத்திலிருக்க வேண்டும்).*

*ஹடயோக நூல்களில் ஆஸனம், பிராணாயாமங்கள் குறித்து விவரமாக விவரிக்கப்பட்டுள்ளன.*

**इन्द्रियाणां स्वस्वविषयेभ्यः प्रत्याहरणं प्रत्याहारः ॥ २०५ ॥**

இந்த்ரியாணாம் ஸ்வ-ஸ்வ விஷயேப்ய: ப்ரத்யா-ஹரணம் ப்ரத்யாஹார: ॥ 205 ॥

*ப்ரத்யாஹாரம் என்பது புலன்களை, அவைகளின் இயல்பான பொருட்களிலிருந்து விலக்கி மீட்டுக் கொள்வது ஆகும். யோகஸூத்திரம் 2.54-ஐப் பார்க்கவும்.*

தேனீக்கள் தங்களுடைய இராணியைச் சார்ந்து கூட்டிலிருந்து வெளியேறுவதைப் போல அல்லது கூட்டிற்குள் நுழைவதைப் போல, புலன்களும் மனத்தைச் சார்ந்து விஷய வஸ்துக்களுடன் தொடர்பு கொள்கின்றன. புலன்களின் மூலம் வெளியிலே பாய்ந்து சென்று கொண்டிருக்கும் மனத்தைத் திருப்பி, ஆத்ம வஸ்துவின் மீது நிலை நிறுத்துவதுதான் பிரத்யாஹாரம் ஆகும். இந்த நிலையில் புலன்களும் திரும்பி மனத்திலே ஒடுங்குகின்றன.

**अद्वितीयवस्तुन्यन्तरिन्द्रियधारणं धारणा ॥ २०६ ॥**

அத்விதீய-வஸ்துனி அந்தரிந்த்ரிய-தாரணம்-தாரணா ॥

அந்தகரணத்தை, (மனத்தை) இரண்டாவதற்ற பிரம்மவஸ்துவில் நிலைநிறுத்துவது தாரணம் ஆகும்.

**तत्राद्वितीयवस्तुनि विच्छिद्य विच्छिद्यान्तरिन्द्रिय-वृत्तिप्रवाहो ध्यानम् ॥ २०७ ॥**

தத்ர அத்விதீய-வஸ்துனி விச்சித்ய விச்சித்ய அந்தரிந்த்ரிய-வ்ருத்தி ப்ரவாஹ: த்யானம் ॥ 207 ॥

இரண்டாவது அற்ற அந்த பிரம்ம வஸ்துவின்மீது இடையிடையே மனத்தை நிறுத்தி நிலைத்திருக்குமாறு செய்வது தியானம் எனப்படும்.

ஒருமுனைப்பாடு இன்னும் ஏற்படாமலிருப்பதால் சித்தவிருத்தியானது தங்குதடையில்லாமல் எப்பொழுதும் பாய்ந்து கொண்டிருக்காது. அது தங்குதடை

யில்லாமல் பாய்ந்து செல்லும்பொழுது ஸமாதி நிலை ஏற்படுகிறது.

**समाधिस्तूक्तः सविकल्पक एव ॥ २०८ ॥**

ஸமாதிஸ்து உக்த: ஸவிகல்பக: ஏவ ॥ 208 ॥

முன்பு விவரிக்கப்பட்டுள்ள ஸவிகல்பக நிலை தான் ஸமாதி எனப்படும். 194, 195-ஆம் ஸூத்திரங் களைப் பார்க்கவும்.

## ஸமாதிக்கு ஏற்படக்கூடிய தடைகளும் மற்றும் அவற்றை நீக்கும் வழிகளும்

**एवमस्याङ्गिनो निर्विकल्पकस्य लयविक्षेपकषाय-रसास्वादलक्षणाश्चत्वारो विघ्नाः सम्भवन्ति ॥ २०९ ॥**

ஏவம் அஸ்ய அங்கின: நிர்விகல்பகஸ்ய லய விக்ஷேப கஷாய ரஸாஸ்வாத லக்ஷணா: சத்வார: விக்னா: ஸம்பவந்தி ॥

மேலே கூறிய விதத்தில் இவற்றைப் [1] படிகளாகக் கொண்ட நிர்விகல்பக ஸமாதிக்கு லயம், விக்ஷேபம், கஷாயம், ரஸாஸ்வாதம் என்னும் [2] இலட்சணங்களைக் கொண்டுள்ள நான்கு இடையூறுகள் (தடைகள்) ஏற்படும்.

1. யமம் போன்ற எட்டு படிகள்.
2. இவை அடுத்த ஸூத்திரங்களில் விவரிக்கப்படு கின்றன.

**लयस्तावदखण्डवस्त्वनवलम्बनेन चित्तवृत्तेर्निद्रा ॥ २१० ॥**

லய: தாவத் அகண்டவஸ்து-அனவலம்பேன சித்த-வ்ருத்தே: நித்ரா ॥ 210 ॥

இரண்டாவது அற்ற பிரம்மவஸ்துவிடம் ஒன்ற இயலாத நிலை ஏற்பட்டு அந்நிலையில் மனம் உறக்கத்தில் ஆழ்ந்து விடுவதே லயம் என்று கூறப்படுகிறது.

ஒலி போன்ற விஷயங்களால் மனமானது வெளிப்புறமாகத் திரும்பி, அகண்ட பிரம்ம வஸ்துவைச் சார்ந்து இருப்பதற்கு, சோம்பேறித்தனத்தினாலோ, முயற்சியினாலோ, சிரமத்தினாலோ திறமையற்று இருக்கும் பொழுது உறக்கத்தில் ஆழ்ந்து விடுகிறது. இதுவே லயம் எனப்படும்.

**अखण्डवस्त्वनवलम्बनेन चित्तवृत्तेरन्यावलम्बनं विक्षेपः ॥ २११ ॥**

அகண்டவஸ்து அனவலம்பேன சித்தவ்ருத்தே அன்யா வலம்பனம் விக்ஷேப: ॥ 211 ॥

இரண்டாவது அற்ற, அகண்டபிரம்ம வஸ்துவிடம் ஒன்ற இயலாத நிலையில், மனமானது, அதனை விடுத்து மற்ற பொருட்களைச் சார்ந்து இருப்பது (பற்றியிருப்பது) 'விக்ஷேபம்' என்று கூறப்படுகிறது.

பிரம்ம வஸ்துவைக் குறித்து சிந்திக்க வியலாத நிலையிலுள்ள மனமானது, மீண்டும் மீண்டும் புறத்திலுள்ள விஷயங்களின் பக்கமாக ஓடுவதுதான் 'விக்ஷேபம்' ஆகும்.

**लयविक्षेपाभावेऽपि चित्तवृत्तेर्रागादिवासनया स्तब्धीभावादखण्डवस्त्वनवलम्बनं कषायः ॥ २१२ ॥**

லய விக்ஷேப அபாவே அபி சித்தவ்ருத்தே: ராகாதி வாஸனயாஸ்தப்தீ பாவாத்-அகண்டவஸ்து-அனவலம்பணம் கஷாய: ॥ 212 ॥

லயம், விக்ஷேபம் என்னும் இவ்விரண்டும் இல்லாமல் இருப்பினும் பழைய விருப்பங்களின் வாஸனையால் (ஸம்ஸ்காரத்தினால்) அழுத்தப்பட்டு இரண்டாவது அற்ற பிரம்ம வஸ்துவிடம் மனமானது ஈடுபடாத நிலையே கஷாயம் என்று அழைக்கப் படுகிறது.

லயம், விக்ஷேபம் போன்றவற்றை வெல்லும் அளவிற்கு முன்னேற்றம் அடைந்திருந்தாலும், சாதகனானவன் 'கஷாயத்'திற்கு ஆட்பட நேரிடலாம். புறத்திலுள்ள விஷயங்கள் சார்ந்த வஸ்துக்களிடமிருந்து அல்லது அகத்திலுள்ள ஆசைகளினால் ஏற்பட்ட மகிழ்ச்சி போன்ற பதிவுகள் இந்த திக்கில் ஏற்பட்டு முன்னேற்றத்தைத் தடுக்கக் கூடும். அரசனைப் பார்ப்பதற்காக வீட்டிலிருந்து கிளம்பி வந்திருப்பவன் அரண்மனையிலுள்ளே நுழைந்த பிறகு காவல்காரனால் தடுத்து நிறுத்தப்படுவதைப் போன்றதாகும்.

**अखण्डवस्त्वनवलम्बनेनापि चित्तवृत्तेः सविकल्पकानन्दास्वादनं रसास्वादः । समाध्यारम्भसमये सविकल्पकानन्दास्वादनं वा ॥ २१३ ॥**

அகண்டவஸ்து-அனவலம்பனேன அபி சித்தவ்ருத்தே: ஸவிகல்பக-ஆனந்த ஆஸ்வாதனம் ரஸாஸ்வாத: । ஸமாதி ஆரம்ப ஸமயே ஸவிகல்பக ஆனந்த-ஆஸ்வாதனம் வா ॥ 213 ॥

இரண்டாவது அற்ற பிரம்மத்திடம் நிலைத்து நிற்காமல் ஸவிகல்பக ஸமாதியில் ஏற்படும் ஆனந்தத்தை உணர்ந்து அதிலேயே நின்றுவிடுவது ரஸாஸ்வாதம் என்று கூறப்படுகிறது. அல்லது நிர்விகல்பக ஸமாதியின் தொடக்க நிலையில், ஸவிகல்பக ஸமாதியில் ஏற்படும் ஆனந்தத்தைத் தொடர்ந்து அனுபவிப்பது ரஸாஸ்வாதம் என்றும் கூறப்படுகிறது.

ஸவிகல்பக ஸமாதி நிலையின் ஆனந்தத்தை அனுபவித்த பிறகு, அதைவிட உயர்ந்த பிரம்மானந்தத்தை கொடுக்கவல்ல நிர்விகல்பக ஸமாதி நிலையை அடைவதற்கு முயற்சித்து, அது சாத்தியமாகாமல் இருப்பதால் மீண்டும் ஸவிகல்பக ஸமாதி நிலையின் ஆனந்தத்தை அனுபவிப்பது ரஸாஸ்வாதம் அல்லது நிர்விகல்பக ஸமாதி நிலையை அடைவதற்கு முயற்சி செய்து முதல்கட்டமாக ஸவிகல்பக ஸமாதிநிலையை அடையும்பொழுது, அந்த ஆனந்தத்தையே அனுபவித்துக் கொண்டு அதிலேயே மோகம் கொண்டு நிற்பது 'ரஸாஸ்வாதம்' ஆகும்.

**अनेन विघ्न चतुष्टयेन विरहितं चित्तं निर्वातदीपवदचलं सदखण्डचैतन्यमात्रमवतिष्ठते यदा तदा निर्विकल्पकः समाधिरित्युच्यते ॥ २१४ ॥**

அனேன விக்ன சதுஷ்டயேன விரஹிதம் சித்தம் நிர்வாத-தீபவத் அசலம் ஸத் அகண்ட-சைதன்ய மாத்ரம் அவதிஷ்டதே யதா ததா நிர்விகல்பக: ஸமாதி: இதி உச்யதே ॥ 214 ॥

இந்த நான்கு தடைகளும் இல்லாமல், காற்று இல்லாத இடத்தில் எரிந்துகொண்டிருக்கும் விளக்கைப் போல அசையாமல் மனதானது, இரண்டாவது அற்ற பிரம்மனிடத்தில் நிலைபெற்று இருக்கும் பொழுது நிர்விகல்பக ஸமாதி நிலையானது ஏற்படுவதாகக் கூறப்படுகிறது.

**यदुक्तं—**

**'लये सम्बोधयेच्चित्तं विक्षिप्तं शमयेत्पुनः ।**

**सकषायं विजानीयात्समप्राप्तं न चालयेत् ॥**

**नास्वादयेद्रसं तत्र निःसङ्गः प्रज्ञया भवेत्' इति च (गौडपादकारिका ३.४४,४५)**

**'यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता' इति च (गीता ६.१९) ॥ २१५ ॥**

ததுக்தம்—

'லயே ஸம்போதயேச்சித்தம் விக்ஷிப்தம் சமயேத்புன: ।

ஸகஷாயம் விஜானீயாத் சமப்ராப்தம் ந சாலயேத் ॥

நாஸ்வாதயேத்ரஸம் தத்ர நிஸ்ஸங்க: ப்ரஜ்ஞயா பவேத்' (கௌ. கா. 3.44,45) இதி ॥

'யதா தீபோ நிவாதஸ்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா' (கீதை 6.19) இதி ச ॥ 215 ॥

அது இவ்விதம் கூறப்பட்டுள்ளது. 'மனமானது அயர்ந்த உறக்கத்தில் ஆழ்ந்துவிடும் பொழுது அது எழுப்பப்பட வேண்டும்.[1] அது (விக்ஷேபத்தால்) அங்கும் இங்கும் அலையுமாயின் அமைதிப்படுத்தப்பட

வேண்டும். (இந்த இரண்டு நிலைகளுக்கு இடையில் மனமானது) கஷாயநிலையில் இருக்கிறது என்று அறிய வேண்டும். அமைதியுற்ற மனத்தை மீண்டும் அலைவதற்கு விடுதல் கூடாது.[2] ஸவிகல்பக ஸமாதியால் ஏற்படும் ஆனந்தத்திலேயே ஆழ்ந்து நின்று விடக்கூடாது. விவேகத்துடன் பற்று இல்லாமல் இருக்க வேண்டும்' என்று கௌடபாதர் காரிகையில் கூறப்பட்டுள்ளது (3.44.45). பகவத் கீதையிலும் 'காற்றில்லாத இடத்தில் வைக்கப்பட்டுள்ள விளக்கு எப்படி ஆடாமல், அசையாமல் உள்ளதோ அதைப் போன்றே[3] யோகியின் உள்ளமும்' என்று யோகியின் அடங்கிய மனத்திற்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது (6.19).

1. ஞானத்தைப் பெறத்தக்க பயிற்சி முறைகளால் மற்றும் வைராக்கியத்தால் எழுப்பப்பட வேண்டும்.

2. விஷய வஸ்துக்களின் பக்கமாக அலைதல் கூடாது.

3. யோகியின் மனம்.

## ஜீவன்முக்தனின் இலட்சணங்கள்

(வாழ்ந்து கொண்டிருக்கும் பொழுதே முக்தி அடைந்தவனின் தன்மைகள்)

**अथ जीवन्मुक्तलक्षणमुच्यते ॥ २१६ ॥**

அத ஜீவன்முக்த லக்ஷணம் உச்யதே ॥ 216 ॥

இனிமேல்[1] ஜீவன்முக்தனின் இலட்சணங்கள் (தன்மைகள்) குறித்துக் கூறப்படுகிறது.

*1. சாதனங்கள் விவரிக்கப்பட்ட பிறகு கூறப்படுகிறது.*

*நிர்விகல்பக ஸமாதி நிலையில், அறியாமையானது அகற்றப்பட்ட பிறகு, பிரம்மனின் அனுபவம் ஏற்படு கிறது. அப்பொழுது வினைப்பயனானது (பிராரப்த கர்மா) முடிந்து விட்டது என்றால் உடல் அழிந்து உடனடியாக முக்தி ஏற்படுகிறது. வினைப்பயன் இன்னும் உள்ளது என்றால், அது தானாகவே தீர வேண்டுமாதலால், அந்த வினை இருக்கும் வரையிலும் உடல் எஞ்சியிருக்கும். எனவே ஜீவன்முக்தன் என்னும் நிலையானது ஏற்படுகிறது (வாழ்ந்து கொண்டிருக்கும் பொழுதே முக்தியடைந்தவன் என்பது பொருள்).*

**जीवन्मुक्तो नाम स्वस्वरूपाखण्डब्रह्मज्ञानेन तदज्ञान-बाधनद्वारा स्वस्वरूपाखण्डब्रह्मणि साक्षात्कृतेऽज्ञानतत्कार्य-सञ्चितकर्मसम्शयविपर्ययादीनामपि बाधितत्वादखिलबन्ध-रहितो ब्रह्मनिष्ठः ॥ २१७ ॥**

ஜீவன்முக்தோ நாம ஸ்வஸ்வரூப-அகண்டப்ரஹ்ம-ஞானேன ததஞ்ஞான பாதனத்வாரா ஸ்வஸ்வரூப அகண்ட ப்ரஹ்மணி ஸாக்ஷாத்க்ருதே அஞ்ஞான தத்கார்ய ஸஞ்சிதகர்ம-ஸம்சய-விபர்யயாதீனாம் அபி பாதிதத்வாத்-அகில பந்த-ரஹித: பிரஹ்ம நிஷ்ட: ॥ 217 ॥

*யார், தன்னுடைய ஸ்வரூபமாகவே உள்ள இரண் டாவது அற்ற ப்ரம்ம வஸ்துவை உணர்ந்ததால் அந்த பரம்பொருளைக் குறித்த அறியாமை,[1] அதன் செயலை அகற்றி, அந்த (அந்த பரம்பொருளை) பிரம்ம வஸ்துவை நேரடியான அனுபவமாகப் பெற்றிருக் கிறானோ, யார், ஸஞ்சிதம்[2] என்று கூறப்படும் கடந்த*

காலத்து இருவினைகள், சந்தேகங்கள்,[3] பொய்யான அறிவுகள்[4] போன்ற[5] அஞ்ஞானத்தின் விளைவுகள் அகன்றதால், எல்லா விதமான பிணைப்புக்களிலிருந்தும்[6] விடுபட்டு பிரம்மத்திடம் நிலை பெற்றிருக்கிறானோ, அவன் ஜீவன் முக்தன் ஆவான்.[7]

1. ஸ்தூல, ஸூக்ஷ்ம பிரபஞ்சங்கள் அல்லது ஸஞ்சித கர்மம் போன்றவற்றை இங்கு கிரகித்துக் கொள்ள வேண்டும்.

2. மூன்று விதமான கர்மங்கள் உள்ளன. விதியினால் கூடிக் கொண்டேயிருக்கும், இன்னும் பலனை அளிக்காத கர்மமானது ஸஞ்சித கர்மமாகும். பலனை அளித்துக் கொண்டிருக்கும் இந்த பிறவிக்குக் காரணமாக உள்ள கர்மமானது பிராரப்த கர்மம் எனப்படும். இப்பொழுது செய்து கொண்டிருக்கும் இனிமேல் பலனைத் தரத்தக்க கர்மமானது ஆகாமி அல்லது க்ரியாமாண கர்மமாகும். பிரம்ம ஞானமானது ஸஞ்சிதம் மற்றும் ஆகாமி கர்மங்களை பலனளிக்க வியலாமல் செய்துவிடுகிறது. ஆனால் ப்ராரப்த கர்மத்தை அனுபவித்தே ஆக வேண்டும்.

3. ஆத்மா உள்ளானா? இல்லையா? ஜீவாத்மாவானது பரமாத்மாவை விட வேறுபட்டதா? அல்லது இரண்டும் ஒன்றா போன்ற சந்தேகங்கள்.

4. உடல் போன்றவையே ஆத்மா என்னும் பொய்யான அறிவுகள்.

5. புற உலகமானது உண்மையானது என்று உணர்தல்.

6. செய்பவன், அனுபவிப்பவன் என்றெண்ணுதல் இன்பம், துன்பம், போன்ற எல்லா பிணைப்புக்களிலிருந்தும் விடுபடுதல்.

7. வேதாந்தத்தால் அறியப்படும் பிரம்மனையே தன்னுடைய ஆத்மா என்று உணர்ந்து கொண்டு, அதிலேயே நிலைத்து இருப்பவன் ஜீவன் முக்தன் ஆவான்.

**'भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसम्शयाः ।**
**क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे ॥'**
**इत्यादिश्रुतेः (मु. उ. २.२.८) ॥ २१८ ॥**

'பித்யதே ஹ்ருதயக்ரந்திச்சித்யந்தே ஸர்வசம்சயா: ।
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மின் த்ருஷ்டே பராவரே ॥'
(முண். உ. 2.2.8) இத்யாதி ச்ருதே ॥ 218 ॥

'அந்தப் பராபரத்தைத்[1] தரிசிக்கும் பொழுது, இவனுடைய இதய கிரந்தியானது[2] அறுபடுகிறது. எல்லா சந்தேகங்களும்[3] அகல்கின்றன. மற்றும் (இவனுடைய) கர்மங்களும்[4] (வினைப் பயன்களும்) அழிகின்றன' (முண். உ. 2.2.8). இதைப் போன்ற[5] சுருதிகளால் இவ்விதம் அறியப்படுகிறது.

1. இங்கு பிரம்மவஸ்துவானது பராபரம் என்று அழைக்கப்பட்டுள்ளது. பர என்றால் மிகவும் உயர்ந்தது என்பது பொருள். அபர என்றால் தாழ்ந்தது என்பது பொருளாகும். பிரம்மமானது காரணவடிவமாக உள்ளதால் 'பர' என்றும் காரிய ரூபத்தால் 'அபர' என்றும் அழைக்கப்படுகிறது.

2. அகங்காரம் ஆகும். கிரந்தி என்றால் முடிச்சு ஆகும். தூய்மையான சைதன்னியத்தை ஜடமான உடலுடன் முடிச்சுப் போட்டிருப்பது இந்த அங்காரம்தான் ஆகும். அல்லது புத்தியைச் சார்ந்துள்ள காமங்கள் என்றும் கருதலாம்.

3. கண்ணால் காணப்படும் மற்றும் தென்படாத விஷயங்களைக் குறித்து ஏற்படும் எல்லா வகையான சந்தேகங்களும் ஆகும்.

4. சஞ்சிதம் மற்றும் ஆகாமி கர்மங்கள்.

5. மற்ற சுருதிகள்:—

'யதா ஸர்வே ப்ரபித்யந்தே ஹ்ருதயஸ்யேஹ க்ரந்தய: ।
அத மர்த்யோம்ருதோ பவதி ஏதாவத்யனுசாஸனம் ॥'

'மனத்தின் எல்லா முடிச்சுக்களும் அவிழும் பொழுது மனிதன் மரணமற்றவன் ஆகிறான். உபதேசம் இவ்வளவு தான்' (க. உ. 2.3.15).

'ஸ்ம்ருதி லம்பே ஸர்வக்ரந்தீனாம் விப்ரமோக்ஷ: ।', 'கடவுளின் நினைவு நிலை பெற்றால் எல்லாக் கட்டுக் களும் தளர்ந்துவிடும்' (சாந். உ. 7.26.2).

'யதா ஸர்வே ப்ரமுச்சயந்தே காமா யேऽஸ்ய ஹ்ருதி ச்ரிதா: ।
அத மர்த்யோऽம்ருதோபவத்யத்ர ப்ரஹ்ம ஸமச்னுதே ॥ '

'இவன் மனத்திலுள்ள காமங்கள் அனைத்தும் எப் பொழுது அகல்கின்றனவோ, அப்பொழுது இந்த மனித னானவன் மரணமற்ற தன்மையை அடைகிறான். மற்றும் இவ்வுடல் இருக்கும் பொழுதே பிரம்மத்துடன் ஒன்று கிறான்' (பிரு. உ. 4.4.7).

'ஸ யோ ஹ வை தத்பரமம் ப்ரஹ்ம வேத
ப்ரஹ்மைவ பவதி நாஸ்ய அப்ரஹ்மவித் குலே பவதி ।
தரதி சோகம் தரதி பாப்மானம்
குஹாக்ரந்திப்யோ விமுக்தோऽம்ருதோ பவதி ॥'

'மேலான பரம்பொருளை உணர்ந்தவன் பரம்பொரு ளாகவே ஆகிறான். பிரம்மஞானி அல்லாத யாரும் அவனது குலத்தில் பிறக்க மாட்டான். அவன் கவலையும் பாபமும்

அற்றவன் ஆகிறான். மனத்தின் முடிச்சுக்களிலிருந்து விடுபட்டு அழிவற்றவனாக ஆகிறான்' (முண். உ. 3.2.9).

**अयं तु व्युत्थानसमये माम्सशोणितमूत्रपुरीषादिभाजनेन शरीरेणान्ध्यमान्द्यापटुत्वादि-भाजनेनेन्द्रियग्रामेणाशना-पिपासाशोकमोहादिभाजनेनान्तःकरणेन च पूर्वपूर्ववासनया क्रियमाणानि कर्माणि भुज्यमानानि ज्ञानाविरुद्धारब्धफलानि च पश्यन्नपि बाधितत्वात्परमार्थतो न पश्यति । यथेन्द्रजालमिति ज्ञानवान्स्तदिन्द्रजालं पश्यन्नपि परमार्थमिदमिति न पश्यति ॥ २१९ ॥**

அயம் து ப்யுத்தான-ஸமயே மாம்ஸ-சோணித-மூத்ர-புரீஷாதிபாஜனேன சரீரேண அந்த்ய-மாந்த்ய அபடுத்வாதி-பாஜனேன இந்த்ரிய க்ராமேண-அசனாயா-பிபாஸா சோக-மோஹாதி பாஜனேன அந்த: கரணேன ச பூர்வ-பூர்வ-வாஸனயா க்ரியமாணானி கர்மாணி, புஜ்யமானானி-ஜ்ஞான-அவிருத்த ஆரப்த பலானி ச பச்யன் அபி பாதிதத்வாத் பரமார்த்தத: ந பஷ்யதி: யதா இந்த்ரஜாலம் இதி ஞானவான் ததிந்ரஜாலம் பச்யன் அபி பரமார்த்தம் இதம் இதி ந பச்யதி ॥ 219 ॥

இந்த ஜீவன் முக்தனானவன் ஸமாதி நிலையில் இல்லாதபொழுது சதை, இரத்தம், கழிவுப் பொருட்கள் போற்றவற்றுடன் கூடியுள்ள இவ்வுடலினாலும் குருடு, தளர்ச்சி, திறமையற்றதன்மை போன்றவற்றுடன் கூடியுள்ள புலன்களாலும், பசி, தாகம், துன்பம், மோகம் போன்றவற்றுடன் கூடியுள்ள மனத்தாலும் பலன்களைக் கொடுக்கத் துவங்கிவிட்ட ப்ராரப்த கர்மங்களின்

நிகழ்வுகளை அவன் பார்க்கிறான். அவ்விதம் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது அவன் அவற்றை உண்மை என எண்ணிப் பார்ப்பது இல்லை. ஏனெனில் உண்மையை உணர்ந்திருப்பதால் அவை இல்லா தொழிகின்றன. மாய வித்தை நடைபெற்றுக் கொண்டு உள்ளது என்று நன்றாக உணர்ந்து கொண்டுள்ள ஒரு வன் அந்த மாய வித்தையைப் பார்த்துக் கொண் டிருக்கும் பொழுதும் அதை உண்மை என்று நம்புவ தில்லை. இங்கும் அது போன்றதுதான்.

விதேஹமுக்தனுக்கு, ஞானம் ஏற்படும் அந்த நேரத்திலேயே உடல் அழிந்து விடுகிறது. ஜீவன் முக்தனிற்கு முன்பு செய்த வினைகள் (பிராரப்த கர்மம்) இன்னும் தீராமல் இருப்பதால் உடலானது வாழ்ந்து கொண்டிருக்கும். அவனுக்கு உடல் உணர்வு இருக்குமா? மற்றவர்களைப் போல அவனும் உணவை ஏற்றுக் கொள்ளுதல் போன்ற நடைமுறைச் செயல்களில் ஈடுபட்டிருப்பதைப் பார்க்கிறோம் அல்லவா? அவ னுக்கு அவன் உடல்மீது இன்னும் பிடிப்பு இருக்கு மாயின் நம்மைப் போன்றே அவனும் பிணைப்பிற்கு ஆட்பட்டிருப்பவனே தவிர ஜீவன் முக்தன் எவ்விதம் ஆகவியலும்? என்பன போன்ற சந்தேகங்களுக்கு இங்கு பதில் அளிக்கப்பட்டுள்ளது.

முற்பிறவியின் ஸம்ஸ்காரங்களின் பயனாக, பிராரப்த கர்மத்தின் வசப்பட்டு, வில்லிலிருந்து ஏற் கனவே விடப்பட்டுள்ள பாணமானது, தன் இலக்கை நோக்கிப் பாய்ந்து செல்வதைப்போல, உடல், புலன்கள், மனம் போன்றவை செயலாற்றிக் கொண்டு

இருந்தாலும், ஜீவன்முக்தனுக்கு அவற்றில் அகங்காரம், மமகார வடிவத்தில் அபிமானம் இருப்பது இல்லை. மந்திரவாதியால் வரவழைக்கப்பட்ட செடி, மரம், யானை போன்றவற்றை நாம் பார்த்துக் கொண்டிருந் தாலும், அவை உண்மையானவை அல்ல என்னும் ஞானமானது, கூடவே இருப்பதைப் போல இவை அவனுக்குத் தென்பட்டுக் கொண்டிருந்தாலும் உண்மை யில் அவை உண்மையில்லை என்னும் ஞானமும் கூட இருக்கிறது. எனவே அஞ்ஞானிகள் அவற்றால் பிணைப்பிற்கு ஆட்படுவதைப் போல இவன் அவற் றால் பிணைப்பிற்கு ஆட்படுவது இல்லை.

**'सचक्षुरचक्षुरिव सकर्णोऽकर्ण इव' इत्यादिश्रुतेः ॥ २२० ॥**

'ஸ சக்ஷு: அசக்ஷு: இவ ஸகர்ண அகர்ண: இவ' இத்யாதி ச்ருதே: ॥ 220 ॥

'கண் இருந்தும் கண்ணற்றவனைப் போல, காது இருந்தும் காது அற்றவனைப் போல' என்பன போன்ற சுருதி வாக்கியங்களால் இவ்விதம் அறியப்படுகிறது.

புலன் விஷயங்களில் அவனுக்கு விருப்பம் இருப்பது இல்லை என்பது பொருளாகும். இது எந்த சுருதியிலுள்ளது என்பது தெரியவில்லை.

**उक्तञ्च—**

**'सुषुप्तवज्जाग्रति यो न पश्यति**
**द्वयं च पश्यन्नपि चाद्वयत्वतः ।**
**तथा च कुर्वन्नपि निष्क्रियश्च यः**

स आत्मविन्नान्य इतीह निश्चयः ॥'
इति (उपदेशसाहस्री १०.१३) ॥ २२१ ॥

உக்தம் ச—

ஸுஷுப்த வஜ்ஜாக்ரதி யோ ந பச்யதி
த்வயம் ச பச்யன்னபி சாத்வயத்வத: ।
ததா ச குர்வன்னபி நிஷ்க்ரியச்சய:
ஸ ஆத்ம வின்னான்ய இதீஹ நிச்சய: ॥
இதி (உ. ஸா. 10.13)

மற்றும் இவ்வாறும் கூறப்பட்டுள்ளது—

யார் ஒருவன் இரண்டாவது அற்ற பிரம்மத்தை உணர்ந்ததன் பயனாக, விழித்துக் கொண்டிருக்கும் பொழுதும், துவைதப்பிரபஞ்சத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாலும், அயர்ந்த உறக்க நிலையில் இருப்பதைப் போல அதைக் காண்பது இல்லையோ,[1] அதைப் போன்றே செயல்களைச் செய்து கொண்டிருந்தாலும்[2] செய்யாமலே இருக்கிறானோ அவனே ஆத்மாவை அறிந்து கொண்டவனாவான், மற்றவர் அல்ல[3] என்பது இங்கு[4] உறுதி செய்யப்பட்ட பொருள் ஆகும் (உ. ஸா. 10.13).

1. முற்பிறவியின் வாசனைகளின் பயனாக, துவைத பிரபஞ்சமானது தென்பட்டுக் கொண்டிருந்தாலும், அத்துடனேயே அது இரண்டாவதற்ற பிரம்மன் என்பதையும் கண்டு கொண்டிருப்பதால் அதை உண்மை என்று நம்புவதில்லை.

2. உடலைப் பாதுகாப்பதற்காக, தேவையான அளவு செயல்களைச் செய்து கொண்டிருந்தாலும்.

*3. சாத்திரங்களின் பொருளை அறிந்து கொண்டிருந் தாலும் தான் அறிந்து கொள்பவன், செய்பவன் போன்ற அபிமானங்கள் உள்ளன.*

*4. வேதாந்த சாத்திரத்தில்.*

**अस्य ज्ञानात्पूर्वं विद्यमानानामेवाहारविहारादीनामनु-वृत्तिवच्छुभवासनानामेवा-नुवृत्तिर्भवति शुभाशुभयोरौदासीन्यं वा ॥ २२२ ॥**

அஸ்ய ஞானாத் பூர்வம் வித்ய மானானாம் ஏவ ஆஹார விஹாராதீ நாம் அனுவ்ருத்தி வத் சுபவாஸனானாம் ஏவ அனுவ்ருத்தி: பவதி சுப அசுபயோ: ஔதாஸீன்யம் வா ॥ 222 ॥

*இவனுக்கு (இந்த ஜீவன் முக்தனுக்கு) ஞானம் ஏற் படுவதற்கு முன்பு இருந்ததைப் போன்றே உண்ணுதல் நடத்தல் போன்றவை எவ்விதம் தொடர்ந்து நடை பெற்றுக் கொண்டுள்ளனவோ, அதைப் போன்று நல்ல ஸம்ஸ்காரங்கள் மட்டுமே எஞ்சுகின்றன. அல்லது நன்மைகள்-தீமைகள் போன்றவற்றில் அவன் பாரா முகமாக இருந்து விடுகிறான்.*

*இயற்கையான இயல்பான உணவு உண்ணுதல் போன்றவை உடல் இருக்கும் வரையிலும் இருக்குமாத லால் ஜீவன்முக்தியடைந்த பிறகும் அவை தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கும். சாதனையை மேற் கொண்ட காலத்தில் செய்த தவத்தின் பயனாக கெட்ட ஸம்ஸ்காரங்கள் அழிந்திருக்கும். ஞானத்திற்கு*

உறுதுணையாக இருப்பதால் நல்ல ஸம்ஸ்காரங்கள் இருக்கும். எனவே ஆன்மாவை உணர்ந்து கொண்ட ஜீவன் முக்தன் இயல்பாகவே நல்ல செயல்களைச் செய்து கொண்டிருப்பான் அல்லது நன்மை இருக்கும் பொழுது தீமையும் இருக்க வேண்டும் என்று கூறினால் அவன் அந்த இரண்டிலுமே பாராமுகமாக இருந்துவிடுவான்.

**तदुक्तं—**

**'बुद्धाद्वैतसतत्त्वस्य यथेष्टाचरणं यदि ।**

**शुनां तत्त्वदृशाञ्चैव को भेदोऽशुचिभक्षणे ॥' इति (नैष्क. सि. ४.६२) ॥**

**'ब्रह्मवित्तं तथा मुक्त्वा स आत्मज्ञो न चेतरः' इति च (उपदेशसाहस्री १२.१३)॥ २२३ ॥**

ததுக்தம்—

'புத்தா த்வைத ஸதத்த்வஸ்ய யதேஷ்டா சரணம் யதி ।

சுனாம் தத்த்வத்ருசாம் சைவ கோ பேதோऽசுசிபக்ஷணே ॥'

(நை. ஸி. 4.62)

'ப்ரஹ்ம வித்தவம் ததா முக்த்வா ஸ

ஆத்மஜ்ஜோ ந சேதர:' (உ. ஸா. 12.13) இதி ச ॥ 223 ॥

'அத்வைத தத்துவத்தை அறிந்த ஒரு மனிதன் மனம் போன போக்கில் நடந்து கொண்டால், கீழான உணவை உண்பதில் தத்துவத்தை அறிந்தவனுக்கும், ஒரு நாய்க்கும் என்ன வேறுபாடு இருக்க வியலும்?' (நை. ஸி. 4.62) என்று நைஷ்கர்ம்ய ஸித்தியில் கூறப்

பட்டுள்ளது. மற்றும் 'நான் பிரம்மத்தை உணர்ந்து விட்டேன்' என்னும் அகங்காரத்தை எவன் விட்டுவிடுகிறானோ, அவன்தான் பிரம்மத்தை உணர்ந்தவன் ஆவான் மற்றவர்கள் அல்ல' என்று உபதேச ஸாஹஸ்ரீயிலும் கூறப்பட்டுள்ளது (உ. ஸா. 12.13).

பிரம்மஞானியானவன் விதிவிலக்கானவற்றை மீறியவனாக இருப்பதால் மனம் போன போக்கில் நடந்து கொள்கிறானா? பாவச் செயல்களைச் செய்கிறானா? அவன் பாவச் செயல்களைச் செய்தாலும் பாவத்தால் பற்றப்படுவதில்லை என்னும் சுருதி வாக்கியங்கள் உள்ளன அல்லவா. உதாரணம்: 'ந மாத்ருவதேன ந பித்ருவதேன ।' தாயைக் கொல்வதாலோ, தந்தையைக் கொல்வதாலோ அவனுக்குப் பாவம் ஏற்படாது (கௌ. உ.).

'யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர் யஸ்ய
நலிப்யதே ।
ஹத்வாபி ஸ இமான் லோகான் ந ஹந்தி ந
நிபத்யதே ॥'

'யாருக்குத் தான் செய்பவன் என்னும் எண்ணம் இல்லையோ யாருடைய புத்தி பற்றப்படுவதில்லையோ, அவன் இந்த உலகத்திலுள்ள பிராணிகளை கொன்ற போதிலும் அவன் கொல்லுவதில்லை. மற்றும் பிணைக்கப்படுவதும் இல்லை' (கீதை 18.17).

இந்த சந்தேகமானது இங்கு அகற்றப்பட்டுள்ளது.

இந்த சுருதி, ஸ்ம்ருதி வாக்கியங்கள், பிரம்ம ஞானத்தைப் புகழ்வதற்காகக் கூறப்பட்டுள்ளனவே

தவிர அவன் அத்தகைய செயல்களைச் செய்வான் என்னும் நோக்கத்துடன் கூறப்படவில்லை. மனம் போன போக்கில் நடந்து கொள்வது அஞ்ஞானத்தால் ஏற்படுகிறது. எனவே அஞ்ஞானம் இல்லாமல் இருக்கும் பிரும்மஞானிக்கு, மனம் போன போக்கிலே நடந்து கொள்வது என்பது சாத்தியமே இல்லை. இதைத்தான் நைஷ்கர்மய ஸித்தியானது (4.63) வருமாறு விவரிக்கிறது.

'அதர்மாஞாயதேऽஅஞ்ஞானம் யதேஷ்டா சரணம் தத:
தர்மகார்யோ கதம் தத்ஸ்யாத் யத்ர தர்மோ வினச்சதி ॥'

'அதர்மத்தினால் அஞ்ஞானம் ஏற்படுகிறது. அதனால் மனம் போன போக்கில் நடந்து கொள்ளும் நிலையானது ஏற்படுகிறது. தர்மத்தின் பயனாக உள்ள ஞானநிலையில் எங்கு தர்மமும் நசித்துப் போயிருக்குமோ (அந்த நிலையில் அது எவ்விதத்தில் சாத்தியமாக வியலும்?)'

ஸ்ரீசங்கராச்சாரியார், ஐதரேய உபநிஷதத்திற்கு எழுதியுள்ள விளக்கவுரையில் கூறியிருப்பதை இங்கு நினைவுபடுத்திக் கொள்வது சரியாக இருக்கும். 'யதா காமித்வம் து விதுஷ: அத்யந்தம் அப்ராப்தம் அத்யந்த மூட விஷயத்வேன அவகமாத் । ததா சாஸ்த்ர சோதிதமபி கர்ம ஆத்மவித: அப்ராப்தம் குருபாரதயா அவகம்யதே । கிமுத அத்யந்த அவிவேக நிமித்தம் யதாகாமித்வம்?', 'மனம் போன போக்கில் நடந்து கொள்வது என்பது ஞானியிடம் ஏற்படுவதில்லை. ஏனெனில் அது மிகவும் அறியாமை மிகுந்தவர்களின் விஷயத்தில் மட்டுமே தென்படுகிறது. அதைப்

போன்றே கர்மமானது சாத்திரத்தால் ஏற்படுத்தப்பட்டிருப்பினும் ஆத்மஞானிக்கு அது மிகவும் பளுவாகத் தென்படுவதால் அவன் மட்டிற்கு (மனம் போன போக்கில் நடந்து கொள்வது என்பது) அது இல்லை. மிகவும் அறியாமையிலிருந்து ஏற்பட்டுள்ள, மனம் போன போக்கில் நடந்து கொள்வது என்பது அவனிடம் இல்லை என்று கூறவும் வேண்டுமா?'

**तदानीममानित्वादीनि ज्ञानसाधनान्यद्वेष्टृत्वादयः सद्गुणाश्चालङ्कारवदनुवर्तन्ते ॥ २२४ ॥**

ததானீம் அமானித்வாதீனி ஜ்ஞானசாதனானி அத்வேத்ஷ்ட்ரு த்வாதய: தத்குணாச்ச அலங்காரவத் அனுவர்த்தந்தே ॥ 224 ॥

அப்பொழுது (ஞானம் ஏற்பட்ட பிறகு) அடக்கம் போன்ற[1] ஞான ஸாதனங்களும், அகிம்சை போன்ற[2] இயல்புகளும் ஜீவன் முக்தனுக்கு அணிகலன்களைப்[3] போல தொடர்ந்து இருக்கின்றன.

1. கீதை 13.7-லிருந்து 11-ஆம் சுலோகம் வரையிலும் கூறப்பட்டுள்ள பத்தென்பது சாதனங்கள். இவை ஞானத்திற்குச் சாதனங்களாக இருப்பதால் 'ஞானம்' என்று அழைக்கப்பட்டுள்ளன.

2. கீதை 12.13-ஆம் சுலோகத்திலிருந்து 19-ஆம் சுலோகம் வரையிலும் கூறப்பட்டுள்ள பக்தனின் லட்சணங்கள்.

3. ஞானத்தைப் பெறுவதற்கு உறுதுணையாக உள்ள சாதனங்களும், ஞானத்தைப் பெற்ற பிறகு வெளிப்படும்

இயல்புகளும் பிரம்ம ஞானியின் விஷயத்தில் இயல்பாகவே தோன்றியுள்ளன. அவை அவனுக்கு அணிகலன்களைப் போன்று உள்ளனவே தவிர அவசியமானவை அல்ல.

**तदुक्तं—**

**'उत्पन्नात्मावबोधस्य ह्यद्वेष्टृत्वादयो गुणाः ।**

**अयत्नतो भवन्त्यस्य न तु साधनरूपिणः ॥' इति (नैष्क. सि. ४.६९) ॥ २२५ ॥**

ததுக்தம்—

'உத்பன்னாத்மா வபோதஸ்ய ஹ்யத்வேஷ்ட்ரு

த்வாதயோகுணா: ।

அயத்னதோ பவம்த்யஸ்ய ந து ஸாதனரூபிண: ॥' (நை. ஸி. 4.69) இதி ॥ 225 ॥

நைஷ்கர்ம்ய சித்தியில், 'ஆத்ம ஞானத்தை அடைந்தவனுக்கு அகிம்சை போன்ற இயல்புகளெல் லாம் இயல்பாகவே முயற்சியின்றியே அமைந்துள்ளன. அந்த இயல்புகளைப் பயிற்சிகளின் மூலம் பெற வேண்டியதில்லை' என்று கூறப்பட்டுள்ளது (நை. ஸி. 4.69).

பகவத் கீதையில் ஸ்திதப்ரஜ்ஞனின் லட்சணங்கள் என்று விவரிக்கப்பட்டுள்ளவற்றிற்கு (2.54.72) விளக்க வுரை எழுதும்பொழுது ஸ்ரீசங்கர பகவத் பாதர் அவர்கள் அதன் தொடக்கத்தில் கூறியுள்ள சொற்களை இங்கு நினைவு கூர்தல் சிறந்ததாகும்.

'ஸர்வத்ர ஏவ ஹி அத்யாத்ம சாஸ்த்ரே க்ருதார்த்த லக்ஷணானி யானி தானி ஏவ ஸாதனானி

*உபதிச்யந்தே யத்னஸாத்யத்வாத் । யானி யத்னஸாத்யானி ஸாதனானி லக்ஷணானி ச பவந்தி தானி ॥'*

*'ஆன்மீக சாத்திரத்தில் எங்கெங்கு எவை எவை, சித்த புருஷனுக்கு (ஆத்மாவை உணர்ந்தவனுக்கு) இயல்பான இயல்புகளோ அவற்றையே சாதனங்களாக வும் உபதேசிக்கப்பட்டுள்ளன. ஏனெனில் அவற்றை முயற்சியால் பெற இயலும். அதைப் போன்றே எவற்றை முயற்சியால் அடைய வியலுமோ அவை ஞானமடைந்த பிறகு இயல்பான இயல்புகளாகவே ஆகிவிடுகின்றன.'*

*எனவே அகிம்சை போன்ற இயல்புகளை சாதனையை மேற்கொள்ளும் சமயத்தில், முயற்சியுடன் பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டியிருந்தாலும், ஞானம் அடைந்தவனிடம் அவை இயல்பான இயற்கையான இலட்சணங்களாக உள்ளன.*

## விதேஹமுக்தி

**किं बहुनायं देहयात्रामात्रार्थमिच्छानिच्छापरेच्छा-प्रापितानि सुखदु:खलक्षणान्यारब्ध- फलान्यनुभवन्नन्तः करणाभासादीनामवभासकः संस्तदवसाने प्रत्यगानन्दपरब्रह्मणि प्राणे लीने सत्यज्ञानतत्कार्यसंस्काराणामपि विनाशात्प-रमकैवल्यमानन्दैकरसमखिलभेदप्रतिभास-रहितमखण्ड-ब्रह्मावतिष्ठते ॥ २२६ ॥**

கிம் பஹுனா அயம் தேஹயாத்ராமாத்ரார்த்தம் இச்சா-அனிச்சா பரேச்சா-ப்ராபிதானி ஸுக-துக்க லக்ஷணானி ஆரப்த-பலானி அனுபவன் அந்த: கரண-ஆபாஸாதீனாம் அவபாஸக: ஸன், ததவஸானே ப்ரத்யகானந்த-பரப்ரஹ்மணி ப்ராணே லீனே ஸதி, அஞ்ஞான தத்கார்ய ஸம்ஸ்காராணாமபி வினாசாத் பரமகைவல்யம் ஆனந்தை-கரஸம் அகில-பேத-ப்ரதிபாஸ-ரஹிதம் அகண்டப்ரஹ்ம அவதிஷ்டதே ॥ 226 ॥

சுருக்கமாக [1] ஜீவன்முக்தன் தன்னுடைய உடலைப் பராமரிப்பதற்காகவே [2] விருப்பத்துடனோ அல்லது விருப்பமற்றோ அல்லது மற்றவர்களின் விருப்பங்களினாலோ ஏற்பட்டுள்ள இன்ப துன்பங்களை (பிராரப்த பலன்களை) [3] அனுபவித்துக் கொண்டு, [4] மனத்தின் நிலைகளையும் விளங்க வைத்துக் கொண்டு [5] அந்த ப்ராரப்த கர்மமானது தீர்ந்த பிறகு, அவனுடைய மூச்சு, அவன் ஆத்மாவாகவே உள்ள பிரம்மனிடத்தில் ஒடுங்கும் பொழுது அஞ்ஞானமும், அதன் விளைவுகளும், ஸம்ஸ்காரங்களும் [6] அழிந்து விடுகின்றன. [7] அதனால் பரமகைவல்யமும் [8] ஆனந்தத்தைத் தவிர [9] வேறு எதுவுமற்ற [10] (த்வைதத்தின் நிழல் கூட இல்லாத) அகண்ட பிரம்மனாகவே ஆகியிருப்பான்.

1. கூற வேண்டிய அனைத்தையும் ஏற்கனவே விரிவாகக் கூறியாகி விட்டது.

2. பிக்ஷை எடுத்தல் போன்றவற்றை உடலை, பிராரப்த கர்மங்கள் தீரும் வரையிலும் பராமரிப்பதற்காகச் செய்கின்றான். பிராரப்த கர்மங்கள் தீர்ந்தால்தான் விதேஹமுக்தி

அடைய வியலும். அதற்காக உடலைப் பராமரிப்பது அவசியமாகும்.

3. பிராரப்த கர்மத்தில் மூன்று வகைகள் உள்ளன. தன் விருப்பத்துடன் செய்யயப்படும் பிக்ஷை எடுத்தல் போன்றவை, ஸமாதி நிலையில் இருக்கும்பொழுது சீடர்கள் உடலைப் பராமரிப்பதற்காகக் கொடுக்கும் உணவை ஏற்றுக் கொள்ளுதல் போன்றவை. இவை மற்றவரின் விருப்பப்படி நடைபெறுகின்றன. தற்செயலாக நடைபெறும் முள்குத்துவது போன்றவை தன் விருப்பமில்லாமல் வரத்தக்கவையாகும்.

4. அனுபவித்துக் கொண்டு இருந்தாலும் அவற்றில் விருப்பமோ அல்லது அபிமானமோ இருப்பது இல்லை.

5. மனத்தில் எழும் எண்ணங்களையும் அவற்றில் பிரதிபலிக்கும் சைதன்னியத்தையும், ஸாக்ஷிசைதன்னியத்தால் விளங்க வைத்துக்கொண்டு இருப்பவனாகி.

6. ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண உடல்கள் ஆகும். அவைகளால் ஏற்பட்டுள்ள கர்மங்கள்.

7. இவ்வனைத்திற்கும் காரணமாக இருந்த, மூல அஞ்ஞானம் அகன்று விடுவதால் இவையும் எஞ்சியிருக்காது.

8. தான் மட்டுமே எஞ்சியுள்ள, ஏகமேவாத்விதீயம் என்னும் நிலையாகும்.

9. ஆனந்தத்தைத் தவிர வேறு எதுவுமற்ற.

10. தன்னுடைய, பிறருடைய என்னும் வேறுபாடு அற்ற.

**'न तस्य प्राणा उत्क्रामन्ति' (बृह. उ. ४.४.६) 'अत्रैव समवनीयन्ते' (बृह. उ. ३.२.११) 'विमुक्तश्च विमुच्यते' (कठ. उ. ५.१) इत्यादिश्रुतेः ॥ २२७ ॥**

'ந தஸ்ய ப்ராணா: உத்க்ராமந்தி' (பிருஹதாரண்யக உபநிஷதம் 4.4.6) 'அத்ரைவ ஸமவனீயந்தே' (பிரு. உ. 3.2.11) 'விமுக்தச்ச விமுச்யதே' (க. உ. 5.1) இத்யாதி ச்ருதே ॥ 227 ॥

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸதானந்த விரசிதோ வேதாந்தஸார: ஸமாப்த:**

'அவனுடைய மூச்சு மேலே செல்வதில்லை' *(பிரு. உ. 4.4.6)* என்றும்,

'இங்கேயே ஒடுங்குகின்றன' *(பிரு. உ. (3.2.11)* என்றும்,

'விடுதலை அடைந்த பிறகு விடுபடுகிறான்' *(க. உ. 5.1)* என்றும் சுருதிகளாலும் அறியப்படுகிறது.

***இத்துடன் ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸதானந்த யோகீந்திரர் அவர்களால் இயற்றப்பட்ட 'வேதாந்த சாரம்' நிறைவு அடைந்தது.***

1. உடலை விட்டுப் பிராணன்கள் ஸூக்ஷ்ம உடலுடன் வெளியே செல்வது 'உத்க்ராந்தி' என்று கூறப்படுகிறது. உத்க்ராந்தி இருப்பின் மறுபிறவியும் உண்டு. பிரம்ம ஞானியானவன் மறுபிறவியின் விதையாக உள்ள அஞ்ஞானத்தை அழித்து விடுவதால் அவனுக்கு உத்க்ராந்தி இல்லை. பிராணன்கள் இங்கேயே பரப்பிரம்மத்திலேயே இணைந்து விடுகின்றன.

2. ஞானத்தை அடைந்தவர்கள் உடலை விடும் பொழுது அவர்களுடைய புலன்கள் பரப்பிரம்மத்திலேயே ஒடுங்கி விடுகின்றன.

3. ஆசைகள் மறுபிறவிக்கும், மறுபிறவிக்கு அஞ்ஞானமும் மூலமாக உள்ளன. ஆசைகளிலிருந்து இப்பொழுதே விடுபட்டவன்; அஞ்ஞானத்தை வாழ்ந்து கொண்டிருக்கும் பொழுதே அழிந்து விட்டவன் உடல் வீழ்ந்த பிறகு விமுக்தன் ஆகிறான் (முக்தியை அடைகிறான்). இது வெறும் உபசார சொல்லாகத்தான் விளங்குகிறது.

ஜீவன், உண்மையிலேயே பரபிரம்மமாகவே ஆகியிருப்பதால் அவனுக்கு என்றுமே பிணைப்பு இல்லை. எனவே மோக்ஷமும் புதியதாக வந்த நிலையும் இல்லை. கழுத்திலிருக்கும் மாலையை மறந்து விட்டு, எங்கெங்கோ தேடி, இறுதியில் தன்னுடைய கழுத்திலேயே இருப்பதை மீண்டும் அறிந்து கொள்வதைப் போலத்தான் இதுவும் உள்ளது. எனவே கௌடபாதாச்சாரியர் அவர்கள் (2.3.2)

'ந நிரோதோ ந சோத்பத்தி: ந பந்தோ ந ச
ஸாதக: । ந முமுக்ஷுர்ன வை முக்த இத்யேஷா
பரமார்த்ததா ॥'

'ஜீவனுக்கு அழிவும் இல்லை, தோற்றமும் இல்லை. அவன் பிணைப்புற்றவனும் இல்லை, சாதகனும் இல்லை. முமுக்ஷுவும் இல்லை, முக்தனும் இல்லை. இதுதான் உயர்ந்த உண்மை' என்று கூறியுள்ளார்.

ஸ்ரீந்ருஸிம்ஹ ஸரஸ்வதி அவர்கள் அவருடைய 'ஸுபோதினீ' என்னும் விளக்கவுரையில், ஸ்ரீராமதீர்த்தருடைய 'வித்வன்மனோரஞ்சனி' என்னும் விளக்கவுரையில் கொடுத்துள்ள இரு சுலோகங்கள் மிகவும்

சுவையாக இருப்பதால் இங்கு அவை விவரிக்கப் பட்டுள்ளன.

'ஆத்மாஞானமலம் நிரஸ்த மமலம் ப்ராப்தம் ச
ததத்வம் பரம்
கண்டஸ்தாபரணாதிஸத் ப்ரமவசாச்சாயாபிசாசீ
யதா ।
அப்தோகாத்யப்தி ந்வ்ருத்தி வச்ருதிசிரோவாக்யா
த்குரோருத்திதாத்
த்வஸ்த த்வாந்த நிராஸத: பரஸுகம் ப்ராப்தம்
தயோருச்யதே ॥'

'ஆத்மாவைக் குறித்து இருந்த அஞ்ஞானம் என்னும் மாசு அகற்றப்பட்டுவிட்டது. தூய்மையான பரதத்துவமானது அடையப்பட்டு விட்டது. தகுந்த குருவின் உபதேசத்தின் பயனாக, கழுத்திலே இருந்தும், மறந்து இருந்த அணிகலன் போன்றவற்றை மீண்டும் பெற்றதைப் போல அல்லது நிழலைப் பிசாசு என்று எண்ணி அச்சமடைந்த பொழுது அந்த அச்சமானது அகல்வதைப் போல, குருவானவர் உபதேசம் செய்த வேதாந்த வாக்கியத்தால், அஞ்ஞானம் என்னும் இருளை அகற்றியதின் மூலம் மேலான இன்பம் அடையப்பட்டது என்று குருவானவர் செய்த உபதேசத்தாலும் வேதாந்த வாக்கியத்தாலும் அறியப்படுகிறது' (ஸுபோதினீ).

'வித்யா ஸீதா வியோகக்ஷுபிதநிஜஸுக:
சோகமோஹாபிபன்ன:
சேதஸ்ஸௌமித்ரிமித்ரோ பவகஹனகத சாஸ்த்ர
ஸுக்ரீவஸக்ய: ।

*ஹத்வாऽऽஸ்தே தைன்யவாலிம் மதனஜலநிதௌ*
*தைர்யஸேதும் ப்ரபத்ய*
*ப்ரத்வஸ்தா போதரக்ஷ: பதிரதிகதசிஜ்ஜானகி:*
*ஸ்வாத்மராம: ॥'*

*'என்னுடைய ஆத்மா என்னும் ஸ்ரீராமன், ஞானம் என்னும் ஸீதையைப் பிரிந்ததால், தன்னுடைய இன்ப நிலையானது கெட்டுவிட, சோகத்தையும் மோகத்தையும் அடைந்து, மனம் என்னும் இலட்சுமணனுடன் வாழ்க்கை என்னும் காட்டினுள்ளே நுழைந்து, சாத்திரம் என்னும் ஸுக்ரீவனின் நட்பைப் பெற்று, தீன நிலை என்னும் வாலியைக் கொன்று, காமம் என்னும் கடலிற்கு உறுதி என்னும் பாலத்தைக் கட்டி, அஞ் ஞானம் என்னும் இராவணனைக் கொன்று, சைதன்னியம் என்னும் ஜானகியைப் பெற்றான்' (வித்வன் மனோரஞ்சனீ).*





நம்முடைய ஸ்வரூபமாக உள்ள சைதன்னியத்தை அனுபவமாக உணரும் வரையிலும், சிரவணம் மனனம், நிதித்யாஸனம், ஸமாதி போன்றவை பழக்கப்படுத்திக் கொள்ளப்பட வேண்டும்.






புத்தகங்கள் இணையதளம் மூலம் ஆர்டர் செய்ய
www.sriramakrishnamath.org
ஸ்ரீராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர்
சென்னை - 4. email : srkmath@vsnl.com

Vedanta Saram (Tamil) Rs. 50.00
ISBN : 978-81-7823-517-2